# ஹெர்குலிஸ்

சைக்கிள் வாங்கினால் உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமானம் கிடைக்கும் என்று 10 வியாபாரிகளில் 8 பேர்கள் சொல்லுகிறார்கள்*

ஒரு சைக்கிள் வியாபாரி தன் வாழ்நாள் முழுவதையும் சைக்கிள் வியாபாரத்திலேயே கழிக்கிறான். ஆகவே சிறந்த சைக்கிள் எது என்பது அவருக்குத் தெரியும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? 'ஹெர்குலிஸ் நீங்கள் கொடுக்கும் பணத்திற்குச் சிறந்த பெறுமானம் அளிக்கிறது' என்று 10 வியாபாரிகளில் 8 பேர்கள் கூறுகிறார்கள். நீங்களும் இந்த நிபுணர்களின் ஆலோசனையைப் பின்பற்றி உங்கள் பணத்திற்குத் தகுந்த பெறுமானம் அளிக்கும் ஹெர்குலிஸ் சைக்கிளையே வாங்குங்கள்!

சைக்கிள் வாங்குவது ஒரு முதலீடு செய்வது போலாகும்

## ஹெர்குலிஸ்

நீங்கள் கொடுக்கும் பணத்திற்குச் சிறந்த பெறுமானம் அளிக்கிறது

*ஒரு தனிப்பட்ட ஆராய்ச்சியின் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது



இந்த இலவச புத்தகத்திற்கு இப்பொழுதே எழுதுங்கள்

'ஒரு சிறந்த சைக்கிளை எப்படித் தேர்ந்தெடுப்பது' என்ற எமது புத்தகத்தை இலவசமாகப் பெற உங்கள் விலாசம் எழுதி அனுப்பவும்.

வினியோகிப்பவர்கள்: டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்

மலர் 16
இதழ் 32

# கல்கி

துன்முகி ஹு
மாசி 27

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# பயங்கரப் படுகுழி





மலர் 16 | இதழ் 32

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

துன்முகி ௵ | மாசி ௴ 27௳

# சத்தியமே வெல்லும்

தேர்தல் அமர்க்களம் அநேகமாக முடிந்து இப்போது அதை ஆராய்ச்சி செய்ய வேண்டிய கட்டம் ஆரம்பமாகி விட்டது.

நிருவாக அதிகாரம் வகிக்கும் மந்திரிகள் தேர்தலுக்காகப் பெரிய பெரிய வர்த்தகர்களிடமும், ஆலை முதலாளிகளிடமும், பஸ் கம்பெனிக்காரர்களிடமும் ஏராளமாகப் பணம் வசூல்செய்ததாகப் பத்திரிகைகளில் புகார்கள் வெளியாயின.

இதை மந்திரிகள் இதுவரையில் அறிக்கையிலாவது சொற்பொழிவுகளிலாவது மறுக்கவில்லை. மறுக்க இடமில்லை என்றே நம்புகிறோம்.

சர்க்கார் அதிகாரம் வகிக்கும் உத்தியோகஸ்தர் எவரும் எந்த நல்ல காரியத்துக்கும் இம்மாதிரி வசூல் செய்யக்கூடாது. வசூல் செய்தால் தண்டனைக்கு உள்ளாவார். 'அவராகக் கொடுத்தார்' 'இஷ்டப்பட்டுக் கொடுத்தார்' என்றெல்லாம் வாதாட முடியாது.

பதவி வகிக்கும் மந்திரிகளுக்கும் சாதாரண உத்தியோகஸ்தர்களுக்கும் என்ன வித்தியாசம்? சாதாரண உத்தியோகஸ்தர்களைவிட மந்திரிகளுடைய செல்வாக்கும் அவர்களைக் கண்டு பணக்காரர்கள் பயப்படுவதும் அதிகமே. இந்த நடவடிக்கைகளின் பெயர் லஞ்சம் என்பதைத் தவிர வேறில்லை. பதவி வகிக்கும் கட்சி இப்படி நடந்துகொண்டால் அதைத் தனி நபர்களாயினும் சரி, வேறு கட்சிகளாயினும் சரி, மற்றவர்கள் எப்படி எதிர்க்க முடியும்?

இந்தத் தடவை நடந்த தேர்தலில் பணத்தின் பலமே அதிகமாக வேலை செய்தது என்று நிச்சயமாகச் சொல்லலாம். ஒரு ரூபாய் நோட்டுக்களாகவும், இரண்டு ரூபாய் நோட்டுக்களாகவும், ஐந்து ரூபாய் நோட்டுக்களாகவும் ரிஸர்வ் பாங்கியிலிருந்து சென்ற சில வாரங்களாக மாற்றி லட்சக் கணக்கில் எடுத்துச் செல்லப்பட்டதாக எல்லாரும் பேசிக் கொள்கிறார்கள்.

தேர்தல் காலத்தில் பதவி வகிக்கும் மந்திரிகள் தங்கள் உத்தியோகங்களிலிருந்து விலகிவிட்டுத் தேர்தல் நடத்துவதுதான் நியாயம். மேல் நாடுகளில் அவ்வாறு செய்வதில்லை என்று சமாதானம் சொல்லப்படுகிறது. அந்தச் சமாதானம் பொருந்தாது. நம்முடைய நடவடிக்கைகளுக்கும் அவர்களுடைய நடவடிக்கைகளுக்கும் எவ்வளவோ வேறுபாடுகள் உண்டு. அந்நாடுகளில் பல நாட்கள் ஆறப் போட்டிருந்த பிரச்னைகளை எடுத்துக் கொண்டு ஆளும் கட்சி தேர்தல் சமயத்தில் வோட்டுகள் பெறுவதற்காகச் சலுகைகள் காட்டினால், அந்த நாட்டு மக்கள் சிரிப்பார்கள். நம்முடைய நாட்டில் இது சர்வ சாதாரணமாகி விட்டது. இந்த ஒரு மாதத்துக்குள் எத்தனை சலுகைகள் ஆளும் கட்சியினால் பத்திரிகைகளில் விளம்பரம் பெற்றிருக்கின்றன! இவையாவும் லஞ்சமேயாகும்.

நியாயமான காரியங்களை முந்தியே செய்திருக்க வேண்டும். நியாயம் தெரியாமலோ அல்லது பணக் குறைவினாலோ முந்தியே செய்யாததைத் தேர்தல் சமயத்தில் மளமள வென்று செய்வதன் நோக்கம் என்ன? வோட்டு திரட்டுவது தவிர வேறு என்ன நோக்கம் இருக்க முடியும்?

சரியான முறை என்னவென்றால், தேர்தல் காலத்தில் பதவி வகிக்கும் கட்சிக்காரர்கள் தாங்கள் இதுவரையில், இந்த ஐந்து ஆண்டுகளில் செய்து விட்டதை எடுத்துக் காட்ட வேண்டுமே ஒழிய, தேர்தலுக்காக இதைச் செய்யப்

போகிறோம், அதைச் செய்யப் போகிறோம் என்று ஒரு புதுக் கட்சியைப் போல் ஆசை காட்டுவது முறையல்ல.

பதவி வகித்தவர்கள், தாங்கள் பதவி வகித்த காலத்தில் என்ன செய்து முடித்தார்கள் என்பதுதான் நியாயமான கேள்வி.

பதவி வகிக்காத கட்சிகள் 'நாங்கள் இதைச் செய்வோம்' 'அதைச் செய்வோம்', 'இதைச் செய்யச் சொன்னோம், அதைப் பதவி வகித்த கட்சி செய்ய வில்லை, நாங்கள் அதைச் செய்வோம்' 'இதைச் செய்வோம்' என்றெல்லாம் எதிர்கால வாக்குறுதிகளில் ஈடுபடலாம்.

ஆனால் பதவி வகித்த கட்சி இறந்த காலத்தில் தாங்கள் செய்து முடித்த பணிகளை மாத்திரமே எடுத்துக் காட்டவேண்டும்.

இதுவே நீதி. அதை விட்டு விட்டுத் தேர்தல் சமயத்தில் மக்களைத் திருப்தி செய்வதற்காக அவசரம் அவசரமாக எதுவும் செய்யக் கூடாது. பொதுப் பணத்தைச் செலவு செய்து தாங்கள் ஏதோ தருமம் செய்துவிட்டதாக மக்களின் வாக்குச் சீட்டுகளைப் பெறப் பார்ப்பது அநீதியிலும் அநீதியாகும். எதிர்க் கட்சிகளுக்கு அந்த வசதிகள் இல்லை. இதற்கும் லஞ்சம் என்கிற பெயர்தான் தரும்.

இந்தத் தேர்தலில் காங்கிரஸ் பெயரில் நின்ற அபேட்சகர்கள் பட்டபாடு கொஞ்சநஞ்சமல்ல என்பதில் ஐயமில்லை. முந்தியெல்லாம் காங்கிரஸ் கட்சிக்குத் தேர்தல் எவ்வளவு சுலபமாக இருந்தது! இந்தத் தடவை தப்பிப் பிழைப்பது மிகக் கஷ்டமாகி விட்டது! காரணம், காங்கிரஸில் பதவி வகித்து வந்தவர்களின் முறை தவறிய போக்குகள்தான்; காங்கிரஸ் கொள்கைகளல்ல. காங்கிரஸ் பசுவின் பாலைக் கறந்து அனுபவித்தவர்களின் பண்புக் குறைவே இந்தத் தேர்தலில் காங்கிரஸுக்கு உண்டான கஷ்டத்துக்குக் காரணம்.

தோல்விகள் ஒரு புறமிருக்க, வெற்றி பெற்ற ஒவ்வொரு ஸ்தானமும் மிகப் பாடுபட்டுக் கிடைத்தவை. கிடைக்குமோ கிடைக்காதோ என்ற பயத்தில் கிடைத்தவை என்று சொல்லலாம். இதனால் காங்கிரஸ் மேலிடமும் தமிழ் நாட்டுப் பொறுப்பாளிகளும் நல்ல படிப்பினை அடையலாம். அடைந்தால் அதுவே ஒரு நற்பயனாகும். பட்ட நஷ்டத்துக்கும் கஷ்டத்துக்கும் பிரயோஜனமுண்டு என்று வைத்துக் கொள்ளலாம்.

ஆனால் அதுவும் நடக்கப் போவதில்லை. கஷ்டமில்லாமல் வெற்றி பெறுவதற்கு என்ன புது சாமர்த்தியங்களும் சதியும் செய்து சமாளித்துக் கொள்ளலாம் என்றுதான் காங்கிரஸ் வட்டாரங்களில் ஆராய்வார்கள். தங்களுக்கு எதிராகவும் தடையாகவும் இருந்தவர்களை எப்படிப் பழி வாங்கலாம் என்பதைப் பற்றித்தான் தீவிரமாக யோசிப்பார்கள். அதிலேதான் தங்கள் காலத்தையும் சக்தியையும் செலவழிப்பார்கள்.

எல்லாம் காங்கிரஸ் கட்சியில் சீலம் அழிந்ததின் பயன்; பதவி அகங்காரம் தலைக்கேறியதின் விளைவு. காந்தி தந்த சுயராஜ்யம் ராமராஜ்யம் ஆகவேண்டுமானால் சீலம் வேண்டும்; தரும உணர்ச்சி வேண்டும்; சாதித் துவேஷமும் நாஸ்திகமும் வளர்க்கும் கும்பல் காங்கிரஸ் என்ற வேஷம் போட்டுக் கொண்டு அட்டூழியம் செய்யும் சுயராஜ்யம் ராமராஜ்யம் ஆகுமா?

முடிவில் சத்தியமே வெல்லும். அதற்காக மக்கள் சாவதானமாகக் காத்திருக்க வேண்டும்! வேதத்தை நம்பி, தமிழ்மறையை நம்பி, பாரதநாட்டின் மூல மந்திரத்தை நம்பி, ஆண்டவனை நம்பி, காத்திருக்க வேண்டும்!

# தென்னாடு முன்னேற வேண்டும்

*எந்தக் கட்சியாயினும் எந்தக் கூட்டமாயினும் பொறுப்பு ஏற்றுக் கொள்ளும்படியான காரியத்தில் புகுந்தால் குற்றங்களைக் களைந்து நல்ல பெயர் எடுக்க முயல்வது இயற்கை. அபவாதங்களை மறுத்து விளக்குவதும் இயற்கை. திராவிடக் கழகத்தின் தலைவரால் வளர்க்கப்பட்ட பகுத்தறிவு நிறைந்த வாலிபர்கள், அவரை விட்டுப் பிரிந்து "திராவிட முன்னேற்றக் கழகம்" என்ற பெயரில் தனிக் கழகம் ஏற்படுத்தினார்கள். அந்தத் திராவிட முன்னேற்றக் கழகத்தார் தற்போது தேர்தலில் நிற்கிறார்கள். அதன் காரணமாக அவர்களுக்குப் பொறுப்புணர்ச்சி தோன்றிவிட்டது. தி. மு. க. தலைவர் திரு அண்ணாதுரை அவர்கள் சென்னை யானைக் கவுனிக்கருகில் செய்த பிரசங்கத்தில் பின்வருமாறு கூறியிருக்கிறார்:*

"நாம் இது வரையிலும் பார்ப்பனீயம் என்ற தன்மையைக் கண்டிக்கிறோமே தவிர, அது கூடாது என்று வலியுறுத்துகிறோமே தவிர, 'பார்ப்பனர்' என்ற தனிப் பட்டோரைத் தாக்கியதே கிடையாது. நான் தி. மு. கழகத்தின் பொதுச் செயலாளராக இருந்தபோதே பார்ப்பனரைத் தாக்கிப் பேசக் கூடாது என்று கழகத் தோழர்கள் அனைவருக்கும் தாக்கீது பிறப்பித்தேன். அதைப் போலவே தி. மு. க.

தோழர்களும் பிராமணர்களைத் தனிப்பட்ட முறையில் தாக்கிப் பேசியது கிடையாது.

எனவே தி. மு. கழகம் ஒரு ஜனநாயக ஸ்தாபனம். மக்கள் பணியையே தங்கள் தூய பணியாகக் கொண்ட தொண்டர் முகாம் தி. மு. கழகம்.''

திரு அண்ணாதுரை அவர்களின் இந்த வாக்குறுதிக்கு எதிராகத் திராவிடக் கழகத்தின் தலைவர் பெரியார் ஈ. வே. ரா. அவர்களின் கீழ்க்கண்ட பேச்சுக்களைக் கவனித்து ஆராயும் படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

சைதாப் பேட்டையில் 1–10–56 நடைபெற்ற கூட்டத்தில் திரு ஈ. வே. ரா. சொன்னதை அவரது 'விடுதலை' பத்திரிகையில் வெளியானபடியே தருகிறோம் :

''இந்தக் காங்கிரஸ் காலி கால பெருமை என்று கேட்கிறோம். இனி கத்தி முனையில்தான் பார்ப்பான் ஒழிய வேண்டும். ஆதலால் அதை உணர்ந்து நீங்கள் அளித்த கத்தியையும் கேடயத்தையும் பயன்படுத்திக் கொள்வேன்.''

21-1-57 விடுதலை தலையங்கத்தில் :

''பார்ப்பானையும் பாம்பையும் கண்டால் முதலில் பார்ப்பானையே ஒழித்துக் கட்ட வேண்டும்'' என்று எழுதியிருக்கிறது.

''நேருவின் குழப்பம்'' என்ற தலைப்பில் பெரியாரின் விடுதலைப்பத்திரிகையின் 1-2-57 இதழ் தலையங்கத்திலிருந்து :

''பார்ப்பனரை உதைத்து விரட்டவேண்டும் என்று கூறுகின்ற எவரும் இன்று தேர்தலுக்கு நிற்க வில்லை. இவர்கள் தேர்தலுக்கு நின்றால் இது ஒன்று மட்டும் தேர்தல் பிரச்னையாக வைத்து 205 இடங்களில் 100 இடங்களையாவது கைப்பற்றிவிட முடியும். சட்டசபைக்குச் சென்று இந்த லட்சியத்தில் வெற்றி பெற முடியாது என்ற காரணத்தினால்தான் பார்ப்பானை வெளியேற்ற வேண்டும் என்ற லட்சியத்தைக் கொண்ட திராவிடக் கழகத்தார் சட்டசபைக்கு வெளியிலிருந்தபடியே பல கிளர்ச்சிகளைச் செய்து கொண்டிருக்கின்றனர். இன்று சட்டசபைக்குள்ளே செல்ல வேண்டும் என்று துடித்துக் கொண்டிருப்பவர்கள், பார்ப்பானை வெளியேற்றும் திட்டத்துக்கும் பரம எதிரிகள். 'பார்ப்பனர் எங்கே போவார்கள் ?' என்று கேட்பவர்கள். ஆகவே பார்ப்பானை வெளியேற்றுவதையும் தனித் தமிழ்நாடு பெறுவதையும் லட்சியமாகக் கொண்ட கட்சி சட்டசபைக்குள் செல்லவில்லை என்பதைக் குழப்பமடைந்துள்ள நேரு அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

''விரைவில் தமிழ்நாட்டுப் பார்ப்பனர் வெளியேறப் போவது உறுதி. அடுத்த பத்தாண்டுகளுக்குள்ளாகவே இதைச் சாதித்து விடப் போகிறது திராவிடக் கழகம். பார்ப்பனர் வெளியேறப் போகிறார்களா இல்லையா என்பதை முதலமைச்சர் நேரு, அவர் ஆயுட் காலத்திலேயே பார்க்கத்தான் போகிறார். ஆனால் அந்தச் சமயத்தில் இந்தப் பதவியில் இருப்பாரோ மாட்டாரோ என்பதை இப்போதே எப்படிக் கூற முடியும் ?''

இப்படியெல்லாம் பேசியும் எழுதியும் வரும் பெரியார் ஈ. வே. ரா. காங்கிரஸுக்கு ஆதரவு தருகிறார். தி. மு. க. வைத் தாக்குகிறார். அவர்கள்தான் தூத்துக்குடியில் அக்கிரகாரங்களுக்குள் சென்று அக்கிரமம் செய்தது என்று நாக் கூசாமல் கூறுகிறார். நிற்க.

தி. மு. க. வினருக்கு ஒரு வார்த்தை கூற விரும்புகிறோம். 'பார்ப்பனீயம்' என்ற சொல்லுக்குப் பொருளில்லை. தீண்டாமையை ஒழித்தவர்கள் பார்ப்பனர்கள்தான். அவர்கள் தான் இந்தக் காரியத்தில் தியாக முன்னணியில் நின்றார்கள். சுயராஜ்யப் போராட்ட முன்னணியில் நின்று தொழிலையும் பள்ளிக் கூடங்களையும் துறந்து தியாக வேள்வியில் குதித்துப் பங்கெடுத்துக் கொண்டார்கள். அவர்களை இப்போது மற்றவர்கள் மறந்தாலும் அதைப் பொருட்படுத்தாது தங்களுடைய பணியைச் செய்து கொண்டு போகிறார்கள். இதுதான் இன்றைய பார்ப்பனீயம். இதை யாரும் வெறுக்க வேண்டியதில்லை.

திராவிட நாட்டின் முன்னேற்றத்தை யார்தான் விரும்பமாட்டார்கள்? திராவிடர் என்னும் தனி சாதி கிடையாது. பிராமணர்களை வெறுப்பதற்காகப் பெரியார் உண்டாக்கிய பெயர்அது. ஆனால் பழம் இலக்கியங்களில் திராவிடம் என்றால் தென்னாடு என்றுதான் பொருள். தென்னாடு முன்னேற வேண்டும். அந்த நாடும் அதில் வசிக்கும் மக்களும் முன்னேற வேண்டும். அந்த மக்கள் ஒன்றுபட வேண்டும். எந்தச் சமூகத்தாரையும் விலக்கலாகாது : வெறுக்கலாகாது. இந்த உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு திராவிட முன்னேற்றக் கழகம் திராவிட நாட்டின் முன்னேற்றத்துக்காக வேலை செய்தால் எல்லாரும் வரவேற்பார்கள். இந்தியா முழுதுமே வரவேற்கும். திராவிட சாதி தனி சாதி என்று வைத்துக்கொண்டு, தென்னாட்டுப்பிராமணர்களை ஆரியர்கள் என்று சொல்லி மற்றவர்கள் அனைவரும் திராவிடர்கள் என்று வகுத்து சாதித்துவேஷமே தன் ஆயுள் பணியாகக் கொண்டு நாட்டைப் பாழ்படுத்தி வரும் பெரியாரின் கொள்கையை விட்டு விட்டு, திராவிட முன்னேற்றக் கழகத்து இளைஞர்கள் வேலை செய்தால் எவ்வளவோ நன்றாக இருக்கும். இந்தத் தேர்தலின் பயனாக இது நடந்தால் தென்னாட்டின் பாக்கியமேயாகும்.

## மட்டப்பாறைச் சிங்கம்

நம்மை விட்டு விட்டு மற்றொரு சுயராஜ்ய வீரரும் போய் விட்டார். தமிழ் நாட்டின் சிங்கம் என்று பெயர் பெற்ற வீரர், படுத்த படுக்கையாகப் பல நாட்கள் கஷ்டப்பட்டு ஆண்டவன் திருவடியை அடைந்து விட்டார். அவருடைய தைரியமும் அவருடைய சாமர்த்தியமும் ஏழைகளிடம் அவருக்கு இருந்த அன்பும் காந்தி மகான் நடத்திய இயக்கத்தின்போது நமக்கு எல்லாவிதத்திலும் உதவின. அதற்கு நன்றி செலுத்துவோமாக. தமிழ் நாட்டை உருவாக்கின சிற்பிகளில் மதுரை வைத்தியநாத அய்யரையும் மட்டப்பாறை ஐயரையும் எவ்வாறு மறக்க முடியும்? நாட்டின் சுதந்திரமும் மக்களின் ஒற்றுமையுமே அந்தத் தியாகிகளுக்கு அழியாத ஞாபகச் சின்னங்களாகும்.

இராஜகோபாலாச்சாரி

# காஷ்மீர் பிரச்னையும் தேர்தல் பிரசாரமும்

காஷ்மீர் பிரச்னையைத் தேர்தல் பிரச்னையாக்கிச் சிலர் வோட்டுச் சேகரிக்க முயல்கிறார்கள். 'காங்கிரஸுக்கு வோட்டுப் போடவில்லை என்றால் காஷ்மீர்ப் பிரச்னை என்ன ஆகுமோ? காஷ்மீரைப் பாகிஸ்தான் எடுத்துக் கொண்டு போய் விடுமோ என்னவோ' என்று மக்கள் மனத்தில் குழப்பத்தை உண்டு பண்ண முயல்கிறார்கள்.

காஷ்மீர் பிரச்னை காங்கிரஸ் கட்சியின் பிரச்னையல்ல. காஷ்மீர் விவகாரத்தைத் தேர்தலுக்குக் காங்கிரஸ்காரர்கள் உபயோகித்துக் கொள்ளக் கூடாது என்று சந்தேகமற ஜவாஹர்லால் நேருஜி தெரிவித்திருக்கிறார்.

ஒன்பதாண்டுகளுக்கு முன்பு காஷ்மீர் பாரத நாட்டுடன் இணைந்ததே தவிர காங்கிரஸ் கட்சியுடன் இணையவில்லை. காஷ்மீர் பாரதத்துடன் இணைந்த சமயத்தில் நாட்டில் காங்கிரஸ் ஆளும் கட்சியாக இருந்தது. அவ்வளவுதான்.

பாரத நாட்டுடன் இணைந்ததால் காஷ்மீருக்கு ஏதாகிலும் ஆபத்து என்றால் காங்கிரஸ் கட்சி மட்டுமல்ல, பாரத நாட்டிலுள்ள அத்தனை கட்சிகளும், இந்நாட்டு நாற்பது கோடி மக்களும் ஒருமுகமாக எழுந்து நின்று ஈடு கொடுப்பார்கள்.

பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்களின் தேர்தல் விஷயமும் ஸ்ரீ வி. கே. கிருஷ்ண மேனனின் தேர்தல் விஷயமும் வேறு. அவர்கள்தான் நம் அயல் நாட்டுக் கொள்கைகளை உலகத்துக்கு எடுத்துச் சொல்லும் தலைவர்கள். உலகத்தின் கண்கள் எல்லாம் அவர்கள் பக்கமே திரும்பியிருக்கின்றன. ஆகவே, தேர்தலில் அவர்கள் வெற்றிபெற்று வரவேண்டியது காஷ்மீர் பிரச்னைக்கு மிக மிக அவசியம்.

பாரதநாடு முழுமையும் ஒரு கண்ணோட்டம் செலுத்திப் பார்க்கும்போது, காங்கிரஸ் கட்சி வெற்றி பெறுவது நிச்சயம். மக்கள் சபையிலும் காங்கிரஸ் அபேட்சகர்கள் பெருவாரியாக வருவார்கள். ஆகவே, காஷ்மீர் பிரச்னை எந்த விதத்திலும் பாதிக்கப்படாது.

சென்ற தேர்தலின் முடிவில் கேரளத்தில் காங்கிரஸ் மெஜாரிட்டி வரவில்லை. நிலையான சர்க்கார் அங்கு அமைக்க முடியவில்லை. அதனால் காஷ்மீர் பிரச்னையோ, நம் அயல் நாட்டுக் கொள்கையோ எந்த விதத்திலும் பாதிக்கப்படவில்லை. எனவே, ஓரிரு ராஜ்யங்களில் காங்கிரஸுக்குப் பரிபூரண மெஜாரிட்டி கிடைக்கா விட்டாலும் காஷ்மீர் பிரச்னை ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது.

ஆகவே, தமிழ் நாட்டு வாக்காளர்கள் தங்கள் தொகுதி அபேட்சகர்கள் காஷ்மீர் பிரச்னையை முன்னிட்டு வாக்குகளைக் கேட்டார்களானால், ஏமாந்து குழப்பமடைந்துவிட வேண்டியதில்லை. தங்கள் தொகுதி அபேட்சகர் நல்லவரா, சீலமும் உள்ளவரா என்று பார்த்து வோட்டளிக்க வேண்டும்.

ஆம், நல்லவர்கள்தான் இன்று தமிழ் நாட்டுக்கு வேண்டும். ஆகவே நல்லவர்களையே தேர்ந்தெடுத்து அனுப்ப வேண்டும்!

# நேருஜி வாழ்க!

பாரத நாடு சுதந்திரம் பெற்ற இந்த ஒன்பது ஆண்டு காலத்துக்குள் எத்தனை எத்தனையோ சோதனைகள் ஏற்பட்டன. அவையெல்லாம் பயங்கரமான சோதனைகள்; பாரத மக்களின் எதிர்கால நல்வாழ்வையே சீர்குலைக்கக் கூடிய சோதனைகள். மலைபோல் வந்த அந்தச் சோதனைகளை உலகமே பிரமிக்கு மாறு இந்தியா சமாளித்து வெற்றி பெற்றது. அவ்வாறு வெற்றி பெறுவதற்கு இறைவன் அருளும் பாரதத் தலைவர்களின் திறமையும் மக்களின் பொறுமையும் துணையாக இருந்தன.

அவை போன்றதொரு பயங்கரமான சோதனை சென்ற வாரம் ஏற்பட்டது. பாரதத்தின் பிரதம மந்திரி நேருஜி மங்களூரிலிருந்து ரெய்ப்பூருக்குச் செல்லும் வழியில் விமானத்தில் உள்ள ஓர் இஞ்ஜின் தீப் பிடித்துக் கொண்டதால், விமானம் நடு வழியில் ரெய்ச்சூரில் இறங்க நேர்ந்தது. நேருஜியின் கோஷ்டியைச் சேர்ந்த ஒருவர் தற்செயலாக இஞ்ஜினிலிருந்து புகை கிளம்புவதைப் பார்த்ததால், உற்ற சமயத்தில் அதை அணைத்து விட்டார்கள். விமானியின் சாமர்த்தியத்தால் விமானம் யாதொரு அபாயமுமின்றி, உபயோகத்தில் இல்லாத ஒரு விமானத் திடலில் இறங்குவது சாத்தியமாயிற்று. இந்தச் செய்தியைக் கேட்ட பாரத மக்கள் அனைவரும் தாங்கள் ஏதோ மாபெரும் விபத்திலிருந்து தப்பியதுபோல் மன ஆறுதலும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள்.

உலக நாடுகளிடையே இந்தியாவின் இன்றையச் செல்வாக்குக்கும் சீரிய நிலைக்கும் பெரிதும் நேருஜிதான் காரணம் என்பதை யாரும் மறுக்க முடியாது. எனவே, நேருஜி இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து, பாரத மக்களுக்குத் தொண்டு புரியவும் சுதந்திர இந்தியாவை மகோன்னதமான சுபிட்ச நிலைக்குக் கொண்டு வரவும் அருள் புரிய இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

பிப்ரவரி மாதச் சிறுகதைப் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற

**'பிரார்த்தனை'** என்னும் கதை அடுத்த 'கல்கி' இதழில் பிரசுரமாகிறது

பரிசு பெற்றவர்: **திரு நா. சுப்பிரமணியம் "ஸ்ரீவத்ஸன்"**

90 A, மெயின் ரோடு, புதுப்பாளையம், கடலூர் N. T.




# மலைச்சாரல் மாதவி

ஆனந்தி

அடுத்த **கல்கி** இதழில்
ஆரம்பமாகிறது

# வம்புச் சாவடி

**கொக்கி**

பாரத நாட்டில் தேர்தல் மகோற்சவம் அநேகமாக முடிவடைந்து விட்டது! அடாடா! சென்ற ஆறு வாரங்களாக இந்த உற்சவத்தில் தேசமே திமிலோகப் பட்டதென்றால் மிகை யாகாது. இமயம் முதல் குமரி வரை நடந்திருக்கும் பிரசாரக் கூட்டங்களும், ஒலி பெருக்கி கோஷங்களும், ஊர்வலங்களும், ஏன்—அசம்பாவித நிகழ்ச்சிகளும் உண்ணாவிரத முயற்சிகளும், பயமுறுத்தல்களும், இவ்வாறாக ஒரே அமர்க்களப் பட்டன. எங்கும் தேர்தல் மனப்பான்மை குடி கொண்டிருந்த அதிசயத்தையும் பார்த்தோம். ரயில் வண்டிகளில், பஸ்களில், கடைத் தெருக்களில், குளக்கரைகளில், ஹோட்டல்களில் எங்கும் தேர்தல் பேச்சுத்தான்! வீடுகளிலே கூடத் தேர்தல் மனப் பான்மை குடிகொள்ளாமலில்லை. 'இன்றைக்கு என்ன காய்கறிகள் போட்டுச் சமையல் செய்வது?' என்று வீட்டு அம்மாள் கேட்க வேண்டியது தான் தாமதம். வீட்டில் ஒவ்வொருவர் ஒவ்வொரு காய்கறியை ஆதரித்துக் கோஷம் செய்வார்கள். கட்சிப் பிரதி கட்சிகள் தோன்றி விடும். ''வோட் பார் புடலங்காய்!'' என்று ஒரு கட்சி. கடைசியில் வீட்டு அம்மாளின் தீர்ப்புக்குச் சமையல் விஷயம் விடப்பட்டு விடும். ''உருளைக் கிழங்கு கட்சி''க்கு வெற்றியா? அல்லது ''புடலங்காய் கட்சி''க்கு வெற்றியா, என்பது சமையல் முடிந்து விஷயங்கள் பரிமாறப்படும்போதுதான் வெளிப்படும். இவ்வாறு நாட்டிலே மூலை முடுக்குகளிலேகூடத் தேர்தல் மனப்பான்மையை உண்டாக்கிய அந்தப் பெரிய மகோற்சவம் அநேகமாக முடிவடைந்துவிட்டது.

* * *

நமது தமிழ் நாட்டுப் பெரிய ஆலயங்களில் திருவிழா முடிந்த மறுநாள் போய்ப் பார்ப்போமானால் சில அபூர்வக் காட்சிகளும், உணர்ச்சிகளும் தோன்றுவதைக் காணலாம். ஆலய மண்டபங்களில் அலுப்புத் தீர ஆங்காங்கு பலர் படுத்துக் கொண்டிருப்பார்கள். வெளியூர்களிலிருந்து வந்தவர்கள் தலையில் மூட்டைகளை வைத்துக் கொண்டு புறப்பட்டுச் செல்வதைக் காணலாம். குடை ராட்டினத்துக் குதிரைகள் கீழே இறக்கிப் போடப்பட் டிருக்கும். திருவிழாக் கடைகள் பூட்டப்பட் டிருக்கும். தண்ணீர்ப் பந்தல்களில், பானைகள் கவிழ்த்து வைக்கப் பட்டிருக்கும். இவையெல்லாம் திருவிழா முடிந்த பின்தோன்றக் கூடிய சில காட்சிகள். தேர்தல் திருவிழா விஷயமும் இதே மாதிரிதான் என்று கூறலாம்.

ஒரு குறிப்பிட்ட தொகுதியில், தேர்தல் முடிந்த மறு தினம் போய்ப் பார்த்தேன். வெற்றிபெற்ற அபேட்சகர் வீட்டு வாசலில் தாறுமாறாகத் தேர்தல் சின்னங்கள் கொண்ட மூங்கில் தட்டிகள் சிதறிக் கிடந்தன. கியாஸ் லைட்டுகள் ஒரு புறத்தில் சாய்த்து வைக்கப் பட்டிருந்தன. வர்ணக் காகிதங்கள், சுவரொட்டிகள் இறைந்து கிடந்தன.

அந்த அபேட்சகருக்காகப் பசி பட்டினி பாராமல் வேலை செய்தவர்கள் அவர் வீட்டின் முன் பணத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். ''இப்போது ஐயாவைப் பார்க்க முடியாது. போங்கள்!'' என்று அபேட்சகரின் காரியஸ்தர் அவர்களை அதட்டிப் போகச் சொல்லிக் கொண்டிருந்தார். காரியம் ஆகும் வரை காலைப் பிடிப்பது, அப்புறம் மிரட்டிப் போகச் சொல்வது தேர்தல் திருவிழாவுக்குப் பிந்திய காட்சிகளில் ஒன்று.

தோற்றுப் போன அங்கத்தினர் வீட்டுப் பக்கம் போனேன். அங்கும் ஏறத்தாழ இதே காட்சிகள் தான். விளம்பர அட்டைகள் சிதறிக் கிடந்தன! எந்தப் புனிதமான சின்னத்தைத் தீட்டி அதற்கு வோட்டுக் கேட்டாரோ, அந்தப் புனிதமான சின்னம் தீட்டிய மூங்கில் தட்டிகளை மிதித்துக்கொண்டு வாசலில் சிலர் கோபமாக நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் வேறு யாருமில்லை. கூலிக்குத் தேர்தல் வேலை பார்த்த ஆட்கள். பணத்துக்காக வாசலில் நின்று கூச்சல் போட்டுக் கொண் டிருந்தார்கள். ஓயாமல் தேர்தல் கோஷம் செய்து, அவர்களுடைய தொண்டை நன்றாகக் கட்டிப் போயிருந்த படியால், பணம் பாக்கிக்காகப் போட்ட கூச்சல் நல்ல வேளையாக அக்கம் பக்கத்தார் காதில் விழவில்லை. தோற்கும் அபேட்சகர்களுக்கு (பண முடைப் பட்டவர்களாயிருந்தால்



பெங்களூர் ஆம்கோ பாட்டரீஸ் பிரைவேட் லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ. கே. ஜி. பரமேஸ்வரன் அவர்கள் குமாரத்தி சௌ. பார்வதிக்கும், கல்கத்தா அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்டைச் சேர்ந்த சிரஞ்சீவி கே. வெங்கடராமனுக்கும் சமீபத்தில் பெங்களூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

## அருள் வாக்கு

இந்த உலகத்தில் பிறந்த யாவர்க்கும் சுகத்தில் இச்சை உண்டு. புண்ணியமே செய்ய வேண்டுமென்று நினைக்கிறார்கள். பாபமே செய்யக் கூடாது என்பதும் தெரியும். ஆனால் அவர்கள் செய்வதில் நூற்றுக்கு எண்பது பங்கு பாபம்தான்; இருபது பங்கே புண்ணியம். இதை நினைத்தால் நிரம்ப வேடிக்கையாக இருக்கிறது. பாபம் வேண்டும் என்று நாம் ஆசைப்படுவதே இல்லை. ஆனாலும் பாப மூட்டை மேலும் மேலும் ஏறிக் கொண்டே இருக்கிறது. இந்த ஆச்சரியத்தின் காரணம் தெரியவில்லை. 'ஏன் இப்படி?' என்ற கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை.

பல காலத்துக்கு முன்பே அர்ஜுனன் நம் அனைவருக்கும் சேர்த்துப் பகவானைக் கேட்டு இதற்குப் பதில் வாங்கி வைத்திருக்கிறான்.

''மனிதன் பாபம் செய்கிறான். அவனுக்கு அதைச் செய்ய ஆசையில்லாத பொழுதே அவன் செய்கிறான். அவனைப் பாபம் பண்ண வைக்கிறது யார்? உபத்திரவப் படுத்திப் பாபம் செய்யச் சொல்கிற அந்தப் பேர்வழி யார்? பாபம் பண்ண வேண்டாம் என்றுதான் ஞாபகம், பாபத்தில் கொஞ்சங் கூட இச்சையில்லை. ஆனாலும் அவனைப் பாபம் பண்ண வைக்கும் ஆசாமி யார்?'' என்று கேட்டான் அர்ஜுனன். [கீதை 3-36]

பகவான் அதற்குப் பதில் சொல்லியிருக்கிறார்:

மனிதனுக்கு ஒரு வஸ்து வேண்டும் என்று ஆசையிருக்கிறது. அதை அடையப் பிரயத்தனம் செய்கிறான். நியாயமான வழியில் அகப்படா விட்டால் அநியாய வழியில் முயற்சி செய்கிறான். அதுதான் பாபம். அந்தப் பாபத்துக்குக் காரணமாக இருப்பது 'வேண்டும்' என்னும் ஆசை. அதைத்தான் காமம் என்று சொல்வார்கள். அது நமக்கு ஒரு சத்துரு. மற்றொன்று இருக்கிறது. அது குரோதம்—கோபம். ஒரு வஸ்துவின் மேல் ஆசைப் பட்டால், அது கிடைக்காத பொழுது அதற்குத் தடையாக இருந்தவர்கள் மேல் குரோதம் உண்டாகிறது. ஆசைப்பட்ட பொருள் கிடைக்காத பொழுது கோபம் உண்டாகிறது. காமம் திருப்பப்பட்ட பொழுது கோபமாகிறது. ஆகலால் இரண்டையும் ஒன்று என்றே சொல்லி விடலாம். [கீதை 3—37]

— ஸ்ரீ சங்கராச்சாரியார் காஞ்சி காமகோடி பீடம்.

அவர்களுக்கு ) இது ஒரு சௌகரியம்! கூலிக் காரர்களின் கூச்சல் அக்கம் பக்கத்தாருக்கு எட்டி விடாது!

* * *

இந்தத் தேர்தலில் உபயோகமான லட்சக் கணக்கான ஒலிபெருக்கிகள், ஆயிரக் கணக்கான சுவர் எழுத்தாளர்கள், இவர்களுக்கு—அல்லது இவைகளுக்கு, வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படாமல் போகாது. இந்தச் சாதனங்களை அடுத்த பொதுத் தேர்தல்வரை வேலையில்லாமல் விட்டு வைப்பதற்குப் பதிலாக, ஏதாவது ஒரு வழியில் இவற்றை இந்திய அரசாங்கம் உபயோகப் படுத்திக் கொள்ள வேண்டும். சுவர் எழுத்தாளர்களுக்கு நாடெங்கும், ஏன் ஒரு லட்சம் சுவர்கள் கட்டித்தரக் கூடாது? ஒலிபெருக்கிகளை மொத்தமாக விலைக்கு வாங்கி கிராம நலக் காரியங்களுக்கு ஏன் உபயோகிக்கக் கூடாது: பழுதடைந்த ஒலிபெருக்கிக் குழாய்களை மண் அள்ளிக் கொட்டுவதற்கு அல்லது இதைப்போன்ற வேறு காரியங்களுக்கு உபயோகிக்கலா மல்லவா? இந்த யோசனையை நமது அரசாங்கம் ஏற்றால் நல்லது; இல்லாவிட்டால், ஒலி பெருக்கிகளின் வேலையில்லாத் திண்டாட்டக் கூக்குரல் தோன்றி அரசாங்கத்தின் செவிகளைப் பாதிக்கத் தலைப்படும். தம்முடைய செவிகளின் நலனில் அரசாங்கத்துக்கு உண்மையான அக்கறை இருக்குமானால், என் யோசனைக்குச் செவி சாய்க்கட்டும்!

தேர்தல் முடிவு பற்றி, கடைசியாகச் சொல்லவேண்டிய ஒரு விஷயத்தைக் குறிப்பிடா விட்டால் அப்புறம் அதற்கு வாய்ப்பு இன்னும் ஐந்து வருஷங்களுக்குக் கிடைக்காது. அது வேறு எதுவுமில்லை. தேர்தலை முன்னிட்டு வெளியான சுலோகங்கள்தான். சுலோகங்களைக் கற்பனை செய்து வெளியிடுவது இலேசான காரியமல்ல. கதை, கட்டுரைகளுக்குக் கவர்ச்சிகரமான தலைப்புகள் கண்டு பிடிப்பதை விடச் சற்றுக் கடினம் என்று கூடச் சொல்லுவேன். தேர்தலில், தமிழ் நாட்டில் சில கட்சிகளும், சுயேச்சையாக நின்ற சிலரும் சுலோகங்களை வெளியிடுவதில் விசேஷ அக்கறை எடுத்துக் கொண்டதைப் பார்த்தோம். தேர்தலில் செலவானது போகப் பல்லாயிரக்கணக்கில் கட்டுக் கட்டாக சுலோகத் தாள்கள் தேங்கிக் கிடக்கலாம். அவற்றை அச்சிட்டவர்கள் 'பழைய பேப்பர்' காரர்களுக்குப் போட்டுவிடாமல், என்னைக் கேட்டால் பொதுநலக் காரியங்களில் ஈடுபடும் சங்கங்களுக்கும் தனிப்பட்டவர்களுக்கும் ஒரு விலை வைத்துத் தாராளமாக விற்று விடலாம் என்று கூறுவேன். என் யோசனைப்படி, பின்கண்டவாறு ஒரு விலை வைத்து சுலோகங்களை ஏன் விற்கக்கூடாது?

''நாட்டுக்குத் தொண்டு நாங்கள் செய்வதும் உண்டு'' விலை; ஆயிரம் பிரசுரம் கொண்ட கட்டு ஒன்று ரூ. 0—0—6.

''ஆற்றுக்கு அணை போடுங்கள், ஆனால் சோற்றுக்கும் இலை போடுங்கள்!'' விலை, ரூ. 0—0—3.

# அக்கப் போர்

எஸ்.வி.எஸ்.

நாட்டின் பல பகுதிகளில் தேர்தல்கள் மும்முரமாக நடைபெற்று வருகின்றன. சில இடங்களில் முப்பது சதவிகிதம் பேர்கள் வோட்டுச் சாவடிக்குள் சென்று வோட்டுப் போடுகின்றனர். சில இடங்களில் நாற்பது சத விகிதம் பேர்கள் சென்று வோட்டுப் போடுகின்றனர். ஆனால் இந்தத் தேர்தலில் நமக்குத் தெரிகின்ற விஷயம் ஒன்று. அதாவது நூறு வயதைக் கடந்து நிற்கும் பெரியவர்கள் நம் நாட்டில் இன்னும் பல பேர்கள் இருக்கிறார்கள் என்பதுதான்.

ஓர் ஊரில் நூறு வயதுக்கு மேற்பட்ட ஒரு கிழவர் தமது இருப்பிடத்திலிருந்து நான்கு பர்லாங்கு தூரத்திலிருக்கும் வோட்டுச் சாவடிக்கு மூன்று மணி நேரம் நடந்துபோய் வோட்டுப் போட்டாராம். அந்தக் கிழவர் எவ்வளவு கஷ்டப்பட்டு வந்திருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம்!

நம் நாட்டில் எவ்வளவோ 'வறுமையிருந்த போதிலும், யமனுக்கு டிமிக்கிக் கொடுத்து விட்டு வாழும் இந்தப் பெரியவர்களைப் பார்க்கும் போது, ஒரு பழைய கதை ஞாபகத்துக்கு வருகிறது!

ஒரு கிழவர் காட்டுக்குப் போய் விறகு வெட்டி ஊருக்குக் கொண்டு வந்து விற்று, மிகச் சிரமமான வாழ்க்கை நடத்தி வந்தார்! ஒரு நாள் காட்டில் விறகு வெட்டி, அதை ஒரு சுமையாகக் கட்டித் தலைமேல் வைத்து நடந்து வந்து கொண்டிருந்தார். அவருக்குக் களைப்பு அதிகமாகி விட்டது. அங்கொரு மரத்தையும் நிழலையும் பார்த்தார். அந்த மரத்தின் நிழலில் இளைப்பாறலாம் என்று கட்டுச் சுமையைக் கீழே போட்டு விட்டு, "அப்பாடா! இந்தப் பாழும் கட்டைக்கு எப்போதுதான் எமன் வரப் போகிறானோ?" என்று அலுத்துக் கொண்டு உட்கார்ந்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் யமன் வந்து சேர்ந்தான். "தாத்தா நான்தான் யமன். ஏதோ கூப்பிட்டீர்களே, வந்தேன். என்ன விசேஷம்?" என்று கேட்டான்.

கிழவருக்கு ஒருகணம் யமன் என்றவுடன் தூக்கி வாரிப் போட்டது. இருந்தாலும், அந்த பயத்தை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், "ஆமாம், அப்பா! உன்னைத் தான் கூப்பிட்டேன். இந்த விறகுச் சுமையைத் தலைக்குத் தூக்கி விடுபவர்கள் யாருமில்லை. ஒரு கை கொடேன்" என்றார்.

அப்படியே யமன் கை கொடுத்தான். கிழவர் விறகுக் கட்டையைச் சுமந்துகொண்டு தமது வாழ்க்கைப் பாதையில் நீண்ட நாட்கள் நடந்தார்!

இப்படி யமனை ஏமாற்றிய கிழவர்கள் தங்கள் வோட்டுரிமையை உபயோகிக்க வோட்டுச்சாவடிக்கு வருகிறார்கள் என்பது எவ்வளவு உற்சாகமாக இருக்கிறது. நம் நாட்டில் ஜனநாயக உணர்ச்சி வளர்ந்து வருகிறது என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது. இது ஒரு நல்ல அறிகுறியல்லவா?

இதைவிடப் பிறவிக் குருடான நாச்சியம்மாள் என்ற எழுபது வயதுக் கிழவி தாராபுரம் தொகுதியில் யாருடைய உதவியுமின்றி வோட்டுச் சாவடிக்குள் நுழைந்து, யாருடைய உதவியுமின்றி வோட்டுப் பெட்டியில் வோட்டுப் போட்டு விட்டு வந்திருக்கிறாள்!

தேர்தல் உத்தியோகஸ்தர், "எப்படி வோட்டுப் போட முடிந்தது?" என்று கேட்டாராம். "இது என்ன பிரமாதம்! இந்தத் தடி இருக்கிற வரை ஒரு கவலையுமில்லை" என்றாளாம். அந்தக் கிழவிக்கு அந்தக் கிராமத்தில் ஒவ்வொரு அங்குலமும் தெரியுமாம். இதுகாறும் ஒரு மனித உதவியின்றியே நடமாடிக் கொண்டிருக்கிறாள். இதெல்லாம் சாத்தியமானதற்குக் காரணம் அந்தத் தடிதான்!

*** *** ***

இப்படிப் பல இடங்களில் மக்கள் உற்சாகமாக இந்தத் தேர்தலில் வோட்டு அளித்திருக்கின்றனர். அதே சமயம் பல கிராமங்களிலிருந்து மக்கள் வோட்டுச் சாவடிக்குப் போகாமலே, தங்கள் வோட்டுக்களைப் போடாமலே இருந்திருக்கின்றனர்.

'ஏன் இப்படி உங்கள் வாக்குரிமையை உபயோகிக்காமல் இருக்கிறீர்கள்?' என்று விசாரிக்கப்பட்டது. ஒரு தேர்தல் அபேட்சகராவது அவர்கள் தொகுதிக்கு வந்து அவர்கள் வோட்டைக் கேட்கவில்லையாம். கேட்காத போது எப்படிக் கொடுக்க முடியும் என்று பதில் சொல்லுகிறார்களாம்

ஏகநாதர்கூட! "கேள்—உனக்குக் கொடுக்கப்படும்" என்று சொல்லியிருக்கிறார். இந்த அபேட்சகர்களுக்கு ஏன் இது தெரியவில்லையோ!

இப்படிப் பல ரஸமான செய்திகள் பத்திரிகைகளில் தினம் வெளியாகிக் கொண்டிருக்கின்றன! 'யாருக்கு வோட்டுப் போடுவது' என்று மாலை தேர்தல் முடியும் நேரம் வரை யோசித்துவிட்டு யாருக்கும் வோட்டுப் போடாமல் ஒரு வாக்காளர் திரும்பினாராம். அவரைப் போல் இந்தத் தேர்தல் அக்கப்போரில் எந்தத் துணுக்கைத் தேர்ந்தெடுத்துச் சொல்வது என்று ஒரு முடிவுக்கு வர முடியவில்லை!



சென்னை 'ஸ்டேட் பாங்கின்' காஷியர் ராவ்பகதூர் வி. எஸ். சுப்பிரமணியம் அவர்கள் இம்மாதம் முதல் தேதி தமது உத்தியோகத்தில் இருந்து ஓய்வு பெற்றார்.

# வட்ட மேஜை

## வைத்திய வசதி

எங்கள் ஊர் இடும்பாவனம் சுமார் நாலாயிரத்துக்கு மேற்பட்ட ஜனத் தொகையைக் கொண்டது. கடந்த 1953ம் ஆண்டு வரை இவ்வூரில் சித்த வைத்திய முறையிலுள்ள ஒரு கிராம வைத்தியசாலையைச் சித்த வைத்தியம் தெரிந்த ஒரு மருத்துவரைக் கொண்டு தஞ்சை ஜில்லா போர்டு வைத்து நடத்தி வந்தது. பிறகு மேற்படி வைத்திய சாலையில் இங்கிலீஷ் வைத்தியம் தெரிந்தவர் நியமிக்கப்பட்டு, சென்ற ஜனவரிமாத இறுதி வரை நடந்து வந்தது. பொது ஜனங்களில் அதிலும் பாமர ஜனங்களுக்கு ரொம்பச் சௌகரியமாக இருந்தது.

இந்த வைத்தியசாலை இருந்ததால் உள்ளூர் வாசிகளுக்கு மட்டுமன்றிச் சுற்று வட்டாரக் கிராமவாசிகளுக்கும் பேருதவியாக இருந்தது. ஆனால் ஜனவரி மாதம் பிற்பகுதி முதற் கொண்டு மேற்படி வைத்தியசாலை யாது காரணம் பற்றியோ பூட்டப்பட்டுக் கிடக்கிறது. காரணம் விசாரித்த அளவில் டாக்டர் லீவு எடுத்துக்கொண்டு போய்விட்டதாகத் தெரிகிறது. வேறு டாக்டரும் வரவில்லை. வைத்தியசாலையும் பூட்டப்பட்டுக் கிடக்கிறது. சமீபத்தில் வேறு வைத்திய சாலையும் கிடையாது. இப்பக்கத்து நோயாளி ஜனங்கள் கடந்த ஒன்றரை மாத காலமாகப் படும் கஷ்டங்கள் சகிக்கக் கூடிய நிலைமையில் இல்லை. வைத்தியம் செய்து கொள்ள அடுத்த ஊர் வைத்தியசாலைக்காகிலும் போகலாமென்றால் சுற்று வட்டாரத்தில் பத்து மைலுக்குள் வைத்தியசாலையே கிடையாது. திருத்துறைப்பூண்டி வைத்திய சாலையும் முத்துப்பேட்டை வைத்தியசாலையும் பத்து மைல் தூரத்தில் இருக்கின்றன. அவையும் போக்குவரத்து வசதியற்ற நிலைமையில் இருக்கின்றன. உடனடியாக இந்தக் கிராமத்துக்கு ஒரு டாக்டரை அனுப்பி வைத்து வைத்தியசாலையைத் தொடர்ந்து நடத்துவதற்குள்ள ஏற்பாடுகளைச் செய்யச் சுகாதார இலாகாவும், தஞ்சை ஜில்லா போர்டாரும் முன் வருவார்களா?

இடும்பாவனம்
26—2—57 கு. குருமூர்த்தி

## வரவேற்கிறோம்!

பிணியற்று வாழ மனிதர் பழங்காலம் முதல் பல வழிவகைகளைத் தேடி அனுஷ்டித்து நோயை அகற்றிச் சுக நிலையடையப் பெரிதும் பாடுபட்டிருக்கிறார்கள். சமீப காலம் வரை சாதாரண நோய் நொடிகளை நம் குடும்பங்களில் வீட்டு வைத்தியமுறையால் எளிதில் நிவர்த்தி செய்து வந்தார்கள். பல நல்ல விஷயங்கள் மறைந்து வருவதுபோல, இந்த நல்ல பழக்கமும் மறைந்து விட்டது. இன்று சாதாரண தலைவலிக்குக்கூட டாக்டரைத் தேடும் காலமாக இருக்கிறது. எடுத்ததற்கெல்லாம் ஊசி போடுவதென்பதும் வெகு சகஜமாகிவிட்டது. இச் சிரமங்களைத் தவிர்க்கப் பழைய நாட்டு வைத்திய முறையை அனுஷ்டிக்க முயலுவோமானால் எவ்வளவோ நன்மை பயக்குமென்று நினைக்கிறேன்.

நமது கல்கியில் 'நாட்டு வைத்தியம்' என்ற தலைப்பில் ஸ்ரீஹரி அவர்கள் தம்முடைய அனுபவ, ஆராய்ச்சி வைத்திய பொக்கிஷங்களைத் தமிழ் படித்தோர் அனைவருக்கும் வாரி வழங்கத் தாங்கள் ஏற்பாடு செய்தது பொது ஜனங்கள் மிகவும் வரவேற்கக்கூடிய விஷயம்.

மட்டஞ்சேரி
22—2—57 ஏ. கோவிந்தராஜுலு

## பஸ் பிரயாணிகள் அவதி

தேரழுந்தூர் - சீர்காழி போகும் சில பெரிய பஸ்களில் கைப்பிடியில்லாமல் பிரயாணிகள் திருப்பங்களில் திரும்பும்போது கீழே விழக்கூடிய நிலை ஏற்பட்டு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அதிலும், பெண்கள் இடுப்பில் குழந்தையும், கையில் பையும் வைத்துக்கொண்டு பஸ்ஸில் ஏறி விட்டால், படும் சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. இந்தக் குறையைப் பஸ் கம்பெனிகள் நீக்குமா?

நல்லமாங்குடி
22—2—57 ஏ. மங்களம்

## பத்திரிகையாளரின் கடமை

"வாக்காளர்களின் கடமை" என்ற தலையங்கம் மிக மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். 1952-ம் வருஷத்திய பொதுத் தேர்தலுக்குப் பின்னர் தமிழ் நாட்டின் அரசியலில்

இருந்த நிலைமையை விளக்கி எழுதியிருக்கிறீர்கள். தேர்தல் நேரத்தில் பழைய நிகழ்ச்சிகளை மறவாமல் விளக்கிக் காட்டி எழுதிய தங்களுக்கு எங்கள் நன்றி. தேர்தல் நடக்கவிருக்கும் இந்த நேரத்தில் தங்கள் பத்திரிகையின் வாயிலாகத் தமிழ்நாட்டு மக்களுக்குத் தாங்கள் தொடர்ந்து செய்து வரும் தொண்டுகளை எல்லோருமே வரவேற்பார்கள்.

இதுபோன்ற சமயங்களில் உள்ளது உள்ளபடி எழுதி மக்களை விழிப்புறச் செய்யும் பொறுப்பு தங்களைப் போன்ற பத்திரிகையாளரின் கடமையும் தர்மமுமாகும்.

பெரணமல்லூர்
18—2—57
எ. ஆதிகேசவன்

## பழிவாங்கும் நோக்கம்!

பிரிட்டனும் பிரான்சும் எகிப்தின்மீது எக்காரணமுமின்றித் தாக்கிய பொழுது, ராஜாஜி அவர்கள், ''காமன் வெல்த்திலிருந்து இந்தியா வெளியேற வேண்டும். அவ்விதம் செய்தால்தான், நாம் பிரிட்டனுக்குச் சரியான பாடம் கற்பித்தவர்களாவோம்'' என்று எடுத்துச் சொன்னார். எனினும் நேருஜி இக் கருத்தை ஏற்கச் சம்மதிக்கவில்லை.

ஆனால், இப்பொழுதோ, இந்தியா எகிப்து விஷயத்தில், பிரிட்டன் செய்த தவற்றை உலகுக்கு எடுத்துக் காட்டி, ஐ. நா. மகா சபை மூலம், பிரிட்டனையும் பிரான்சையும் கண்டித்ததற்காக, நம்மைப் பழி வாங்கும் நோக்கத்துடன், காஷ்மீர் விஷயத்தில் பிரிட்டன் முன்வந்திருக்கிறது. உலக நியதிக்கும், நியாயத்துக்கும் புறம்பான தீர்மானங்களை நிறைவேற்றுவதில் பிரிட்டன் முன்னணியில் நிற்பதை இன்று நாம் காண்கிறோம். நேரு அவர்களே, பிரிட்டன் செய்யும் அநீதியைக் கண்டு, மனம் கொதிப்படைந்து சமீபத்தில் கண்டித்தும், வருத்தம் தெரிவித்திருக்கிறார்.

மதுரை
18—2—57
சே. ராகவன்

*** *** ***

ராஜாஜி அவர்கள் சில நாட்கள் முன்பு இந்தியா காமன்வெல்த்தை விட்டு விலக வேண்டுமென்று யோசனை தெரிவித்த போது நேருஜி உள்படப் பலர் அந்த யோசனையை எதிர்த்தனர். இப்போது இந்திய சர்க்காரே காமன் வெல்த்தை விட்டு விலக யோசித்துக் கொண்டிருப்பதாகச் செய்தி வருகிறது. இப்போதைய சூழ்நிலைக்கும் அப்போதைய சூழ்நிலைக்கும் அதிக மாறுபாடு இல்லை. இக்காரியத்தை முன்பே செய்திருந்தால் ஒரு வேளை பிரிட்டனுக்குப் புத்தி வந்து காஷ்மீர் விஷயத்தில் ஒழுங்காக நடந்து கொண்டிருக்கலாம்.

பூந்தமல்லி
22-2-57
எம்.என். வெங்கடராமன் பி.ஏ.

## சிறந்த சேவை!

பிப்ரவரி 17ம் தேதி 'கல்கி' இதழில் வெளியான ''ஆந்தைச் சின்னம்'' அருமையாக இருக்கிறது. அதை தமிழாக்கித் தந்த திரு ரா. வீழிநாதன் அவர்களுக்கு எனது உளம் கனிந்த பாராட்டுதல்கள்.

இம்மாதிரியான கதைகள்தான் நாட்டுக்குத் தேவை. உண்மையாகவே, தேர்தலுக்காகத் தற்பொழுது சில நபர்கள் செய்யும் தகிடுதத்தங்களை நாம் நேரில் காண்கையில் இதுபோன்ற கதைகளைக் 'கல்கி' வெளியிட்டு வருவது சிறந்த சேவையாகும். தேர்தல் தில்லுமுல்லுகள், ஒன்றுமே தெரியாத அனுமதேயப் பேர்வழிகள் தேர்தலுக்கு நிற்பது முதலியவைகளை ஆசிரியர் உயர்ந்த ஹாஸ்ய நடையில் வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல் ஏற்றிவிட்டார்!

மயிலாப்பூர்
18—2—57
ரா. பத்மா

## " அம்மா "

பிப்ரவரி 17-ந் தேதி 'கல்கி' இதழில் பிரசுரமான ''அம்மா'' என்ற சிறுகதையை வாசித்து நான் விம்மி விம்மி அழுதேன். மிகவும் உணர்ச்சி மிகுந்த இக்கதை சில சமயத்தில் உண்மைச் சம்பவம்போல் இருந்தது. இது ஜனவரி மாதப் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற கதை என்பதை நினைக்க ஒரு ஆச்சரியமும் இல்லை. இதற்கு ஆயிரம் ரூபாய்கூடக் கொடுக்கலாம்!

புதுதில்லி
17—2—57
எஸ். விஜயலட்சுமி

*** *** ***

சென்ற மாதப் பரிசுக்கதை 'அம்மா' வெகு ஜோர். தாய்மையைத் துறந்து செல்வச் செருக்கில் போலி நாகரிகத்துக்குத் தவம் இருக்கும் பெண்மணியை, கதையின் கர்த்தா நன்கு படம் பிடித்துக் காட்டுகிறார். அதே

சமயம் பிறந்தகம் செல்லுகையில் ரயில் பிரயாணத்திலேயே அவள் தவறான செய்கைக்கு நல்ல பாடம் கற்றுக் கொள்கிறாள். சமையல்கார கேம்புவை நினைத்தால் பணியாள் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டுமென்று தோன்றுகின்றது. கதையைப் படித்த எவரும் மூர்த்தியின் குழந்தைகளை மறக்க மாட்டார்கள்.

கதையைப் படித்துக் கொண்டு போன எனக்கு உள்ளம் பிசைந்து, கலாவின் மழலை என் காதில் இசைத்து, ஒப்பற்ற அவள் புத்தி கூர்மையும் சாதுர்யப் பேச்சும் என் கண்களிலிருந்து கண்ணீர் கசியவைத்தன.

மூக்கோட்டாஞ் சேனை
19—2—57
ப. நகுலராஜா

## கண் திறந்தது!

தேர்தலில் பெண்கள் 'யாருக்கு வோட்டுப் போடுவது?' என்று குழம்பிக் கொண்டிருந்தவர்களில் நானும் ஒருத்தி; அந்தக் குழப்பத்தை அடியோடு நீக்கி விட்டார் மயிலாப்பூர் சகோதரி மீனாட்சி. அவர் கூறுவது அத்தனையும் மறுக்க முடியாத உண்மை.

மிகப் பெரிய புத்திசாலியானாலும் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கமுடியுமா?

பரமக்குடி
1—3—57
பறம்பை எஸ். சரளா

## பெண்குலத்தின் நன்றி

"லட்சியப் பெண்" என்ற கதை உள்ளத்தை உருக்கும் ஒரு உன்னதமான கதை ஆகும். அதை நான் பன்முறை படித்தேன். என் மனத்தை விட்டு அது அகலவே இல்லை. இக்காலப் பெண்மணிகளுக்கு அது எடுத்துக்காட்டாகவும், வழிகாட்டியாகவும் விளங்குகிறது. இதைப்போன்ற சிறந்த கதைகளைத் தாங்கி வரும் 'கல்கி'க்குப் பெண்குலத்தின் சார்பாக நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை
26—2—57
டி. வி. வசந்தா

## தெய்வ தரிசனம்

'ஈழநாட்டுப் பிரயாணம்' கல்கி வாசகர்களது மனத்திலே நிலையான இடம் பெற்று விட்டதென்றால் மிகையாகாது. 'தெய்வதரிசனம்' என்னும் கட்டுரையைப் படித்த பின்னர் சிவன் ஒளிபாதமலையைத் தரிசியாதவர்களும் கட்டாயம் ஒரு தடவையேனும் அங்கு சென்று உதய சூரிய தரிசனம் செய்து வருவார்களென்பதில் சந்தேகமேயில்லை.

திரு பரதனின் எழுத்துக்கள் உலகெங்குமுள்ள தமிழ் பேசும் மக்களுக்கு மேன்மேலும் புத்துணர்ச்சி ஊட்டுமென்பதில் ஐயமில்லை.

மட்டக்களப்பு
1—3—57
ரீ. பாக்கியநாயகம்

# ஆகாச வெடி

"சிவராத்திரி, அமாவாசை இரு காரணங்களினாலும் குடந்தையில் வோட்டுப் பதிவு முற்பகல் பூராவும் மிக மந்தமாகக் காணப்பட்டது." —குடந்தைச் செய்தி

தமிழ் நாட்டில் ஆஸ்திகம் மறைந்து விட்டதென்று மனப்பால் குடிக்கும் கட்சிகளுக்கு இதை விடத் தேர்தல் படிப்பினை வேறு என்ன வேண்டும்?

★

"தமது குரு தேர்தலில் ஜயித்தால் நாக்கைக் காணிக்கை செலுத்துவதாக உத்தரப் பிரதேசத்தில் ஒரு மாணவன் பிரார்த்தனை செய்து கொண்டான். அவன் நினைத்தது போலவே, குரு ஜயித்து விடவே, மாணவன் தனது நாக்கை வெட்டிக் கொண்டான்." —செய்தி

இப்படி முட்டாள்தனமான காரியத்தில் இறங்கிய சிடனை அடைந்தது குறித்து குரு அவமானத்தால் தமது நாக்கைப் பிடுங்கிக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே!

★

"சோஷலிஸ்டு தேர்தல் ஏஜண்டு ஒருவரும் காங்கிரஸ் ஏஜண்டு ஒருவரும் சண்டையிட்டுக் கொண்டதில், காங்கிரஸ் ஏஜண்டின் கையை சோஷலிஸ்டு ஏஜண்டு கடித்துவிட்டார்." —காசிச் செய்தி

தேர்தல் என்றாலே, பணச் செலவும் கையைக் கடிக்கும் காரியமும்தானே!

★

"காங்கிரஸிலிருந்து விலகி அதை எதிர்ப்பவர்கள் நல்ல பாடம் கற்றுக் கொள்ளப் போகிறார்கள்!"

—திரு காமராஜ், ஒரு தேர்தல் கூட்டத்தில்

ஆனால் அந்தப் பாடம், 'எந்தக் கல்வித் திட்டத்தின் கீழ்?' என்று ஒருவர் கேட்கிறார்.

★

"ஐ. நா. ஆதரவில் நடைபெறும் ஒரு பள்ளிக்கூடத்துக்கு, ஸ்ரீ வி. கே. கிருஷ்ண மேனன் சென்ற போது பள்ளிச் சிறுவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு வெகு நேரம் வரையில் விடவேயில்லையாம்." —செய்தி

"அந்தக் குழந்தைகளுக்கு ஸ்ரீ மேனன் ஒரு கணக்குப் போட்ட பிறகுதான் விட்டார்களா?" என்று ஒரு மக்குப் பிள்ளையாண்டான் கேட்கிறான்.




# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 5. "வசிஷ்டர் வாயால்.... ."

"அஹோ! வாரீர் பிரும்மரிஷியே! உமது தவ மகிமையினால் நாங்கள் எல்லோரும் அளவற்ற சந்தோஷமடைந்தோம். உங்களுடைய உக்கிரமான தவத்தை நிறுத்துவீராக!" என்று மும்மூர்த்திகளும் ஒரு முகமாகக் கூறினர், கடுந்தவம் புரிந்து கொண்டிருந்த விசுவாமித்திரர் முன்தோன்றி. இந்திராதிதேவர்கள், வசுக்கள் யாவரும் இதையே ஒரு முகமாகத் தெரிவித்தனர். விசுவாமித்திரர், "முடியாது. தவத்தை நிறுத்தவே முடியாது. "பிரும்மரிஷி பதவிபெற்றதால் செருக்குற்று என்னை அவமானப் படுத்திய வசிஷ்டர், என்னை பிரும்மரிஷி என்று அழைக்க வேண்டும். அதுதான் எனது இலட்சியம்! அது கிட்டினால்தான் என் தவம் பூர்த்தியாகும்" என்றார். இப்படி ஒரு கதை. நான் வசிஷ்டரைப் பார்க்கவில்லை. விசுவாமித்திரரையும் பேட்டி காண வில்லை. ஆனால் இக் கதை நவீனம் பெற்று நடைமுறையில் இருப்பதைக் ாண்கிறேன்.

நம் நாட்டில் எந்த விஷயத்தைச் சொன்னாலும் இன்றைய மக்கள் ஏற்க மறுக்கின்றனர். நாம் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே 'சூள்' கொட்டி விட்டு ஒரு ஏளனச் சிரிப்பால் முத்தாய்ப்பு வைக்கின்றனர். இந்த அலட்சிய புத்திக்குக் காரணம் என்ன? இதை நாம் சொல்கிறோம்; நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன என்பதுதான். இதை மேல் நாட்டு விஞ்ஞானி ஒருவர் சொல்கிறார் என்றுதெரிவிப்போமானால் உடனே ஆர்வத்துடன் அதை ஏற்கின்றனர். இதைக் காணும்போது 'வசிஷ்டர் வாயால் பிரும்ம ரிஷியே!' என்று அழைக்க வேண்டும் என்று பிடிவாதம் பிடித்த விசுவாமித்திரரின் கதைதான் நினைவுக்கு வருகிறது.

மனம், மனத்துக்கும் சரீரத்துக்கும் உள்ள சம்பந்தம்; மனத்துக்கும் ஆத்மாவுக்கும் உள்ள சம்பந்தம்-இவற்றைப் பற்றி வசிஷ்டர்களான மேல் நாட்டு அறிஞர்கள், கலைஞர்கள், விஞ்ஞானிகள் தெளிந்து விஷயங்களை எடுத்துச் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் இவ்விஷயமாக நமது சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் விஷயங்களையெல்லாம் நம் நாட்டில்; இன்றைய நம் நாட்டில் உள்ள விசுவாமித்திரர்கள் கொஞ்சங்கூட ஏற்க மாட்டார்கள்.

உலகப் புகழ்பெற்ற மனோ சாஸ்திர நிபுணரான பிரெண்டிஸ் முல்போர்டு என்பவர், மனம் என்பது நமது உடலைப் போல் உடலினுள் இருக்கும் ஓர் உண்மைப் பொருள். உடலில் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் புலன்கள் இருப்பது போலவே மனத்தைச் சேர்ந்த நுட்பமான புலன்களும் உண்டு. உடலில் இயக்கம் இருப்பது போலவே மனத்துக்கும் இயக்கம் உண்டு. அதைத்தான் எண்ணம் என்கிறோம். ஒளியும் வெப்பமும்போல் மனமும் மனத்தில் உதிக்கும் எண்ணங்களும் ஒன்றியிருப்பதால் எண்ணத்தையும் மனத்துடன் சேர்த்துப் பொருள் என்று கூறலாம். இவ்வுலகில் புலன்களால் அறியக் கூடியது-அறிவினால் தெளியக் கூடியது யாவும் எப்படிப் பொருள்கள் எனப்படுகின்றனவோ, அப்படியேதான் மனத்தில் எழும் எண்ணங்களும் பொருள்களாகும் என்கிறார். மேலும், 'இம்மனம் இருவகை; ஒன்று உடலோடு இயங்கும் பௌதிக மனம், (The material mind) மற்றொன்று, உயிருடன் தொடர்பு பெற்ற ஆத்மீக மனம் (The spiritual mind) என்கிறார். நெடுநாளையச் சிந்தனைக்கும் ஆராய்ச்சிக்கும் பிறகு இவர் தாம் தெளிந்துள்ளவைகளைத் தக்க ஆதாரங்கள் உதாரணங்கள், சான்றுகளுடன் எழுதியுள்ளார். அவை உடல், மனம், உயிர் ஆகியவற்றின் தொடர்பை நமது சாஸ்திரங்கள் தெளிவுபடுத்தும் விதத்தையே ஒத்ததாயிருக்கின்றன.

இவர் தெளிவுபடுத்தியுள்ள சில தத்துவங்களைப் பாருங்கள்:—

உடலுடன் இயங்கும் பௌதிக மனம் உலகில் இந்திரியங்களின் வாயிலாய்க் காணும் துக்கம், மரணம், நாசம் இவற்றுக்கு நடுங்குகிறது. இதன் விளைவாக இந்திரியங்கள் சுகமென்று விரும்பும் விஷயங்களைப் பெற முனைகிறது; நியாயம், நேர்மை, நெறி முதலியவற்றை முற்றும் புறக்கணித்து வீண் வழியில் வாழ்நாளைச் செல்ல விடுகிறது. இது முறையல்ல.

ஆத்மாவுடன் இயங்கும் மனம் எப்பொழுதும் விழிப்புப் பெற்றதாக, அவ்விழிப்பினால் அதிசயமான சில புதிய சக்திகளைப் பெற்றதாக இருக்கிறது. நமது சரீரத்திலுள்ள புலன்கள் செயல் புரியும் வகையைக் கட்டுப்படுத்தும் திட்டமான நியதி ஒன்று உண்டு என்பதையும் தெளிந்திருக்கிறது. இந்தக் கட்டுத் திட்டமான நியதியைப் பின்பற்றி நடக்க நாம் பயிற்சி பெறுவோமாயின், வாழ்க்கையில் நமக்கு ஏற்படும் அனுபவங்கள் அப்படியொன்றும் பயப்பட வேண்டிய—துக்ககரமானவையல்ல என்னும் உண்மை தெரியவரும். இந்நிலையை அடைந்த ஆத்மீகமனம் நம்முள்ளும் வெளியுலகத்திலும் உள்ள வஸ்துக்கள், சக்தி விசேஷங்கள் இவற்றின் உண்மை நிலையை அறியும் வாய்ப்பைப் பெறுகிறது. இவ்வுண்மை நிலையை அறிந்த மனம், 'நித்யசுகமென்னும் ஒரு லட்சியம் உண்டு, இது ஒரு தனி மனிதனுக்கு மட்டும் ஏற்படுவதல்ல; உலகம் யாவற்றுக்கும், தனக்கும்கூடச் சேர்ந்துதான் ஏற்படுவது ஆகும்' என்னும் மாபெரும் உண்மையை அறிகிறது. இந்நிலை எய்திய மனத்தினன் தன் சுயநலம் என்பதை அறிய மாட்டான். உலகம் யாவற்றுக்கும் நலமானதே தனக்கும் நலம் என்பதை அறிவான். இவன் தன் நலத்துக்காகச் செய்யும் சிந்தனைகள், முயற்சிகள், புரியும் செயல்கள் யாவும் தன்னோடு பிறர் நலனுக்கும் ஏற்றவைகளாகவே இருக்கும்.

தக்க அமைப்பிலுள்ள தசைகள் நரம்புகள் ஆகியவற்றுடன் கட்டுமஸ்தான சரீரத்தைத் திடகாத்திரத்துடன் சமைத்திடும் பணியில் மனமும் மனத்தில் எழும் எண்ணங்களும் ஓய்ச்சலொழிவின்றிச் சதா முனைந்தவண்ணம் இருக்கின்றன.

இவ்வித மனம், அதில் எழும் எண்ணத்தையொட்டி, குறிப்பிட்ட நபரின் சரீரத்துக்கு ஆரோக்கியத்தையும் தேகபலத்தையும் அளிக்க வல்லதாகும்; அல்லது ரோகங்களையுண்டாக்கிப் பலத்தையும் போக்கவும் கூடும். பிறருடைய

மனத்தில் எழும் எண்ணங்களினால் இம் மனமும் பாதிக்கப்பட்டுக் குறிப்பிட்ட அச் சரீரத்துக்கு மேற்சொன்ன நிலைகளைப் பயக்கவும் நேரும்.

மனத்தெழுந்த சில எண்ணங்கள் காரணமாகவும், பயம் போன்ற அனுபவங்கள் காரணமாகவும், சில மணி நேரங்களில் ஒருவனுடைய முடிகள் முழுவதுமே வெள்ளை வெளேரென்று நரைத்துப் போவதும் உண்டு.

கோபம், நையாண்டித்தனம், வியாகூலம் அல்லது பொறுமையற்ற நிலையிலுள்ள மனம்காரணமாக ஒருவனுடைய ஜீரணகோசம் நாசமடைகிறது. திடீரென்று உண்டாகும் அதிர்ச்சியால் பசியே இல்லாமலாகிறது. சோறு ஜீரணம் ஆகாமல் வெளிப்படுகிறது. 'டிஸ்பெப்ஸியா' என்னும் அக்கினி மாந்தியம் பெரும்பாலோரில் அவர் மனத்தெழும் எண்ணங்களின் தரத்தால் ஏற்படுகிறது; ஆகாரத்தின் தரத்தால் மட்டுமல்ல.

எப்பொழுதும் பரபரப்புள்ள மனோநிலை பெற்ற அவசரக் குடுக்கைகளுக்குத் தோள்கள் கூம்பிப்போய் முன்புறம் வளைந்து கூன் விழுந்து விடுகிறது. ஆத்மீக மனத்தில் எழும் எண்ணங்கள்தான் வெளியுலகில் காணும் பொருள்களாகத் தோற்றம் பெறுகின்றன.

சரீரத்தில், சரீரமாகச் சமைக்கப்பட்டுள்ள மூலப்பொருள்கள் யாவும், மனத்தில் எழும் எண்ணங்களுக்கு ஏற்ப, கணத்துக்குக் கணம் மாறிக்கொண்டே இருக்கின்றன. சிலவகை எண்ணங்களால் இம் மூலப் பொருள்களுக்கு விருத்தி ஏற்படுகிறது. சிலவற்றால் நலிவும் தேய்வும் ஏற்படுகின்றன; சில எண்ணங்களால் தேக பலமும் நீண்ட ஆயுளும் நிலையான வாழ்வும் விளைகின்றன. எண்ணங்களும், மனத்தில் நிலைபெறும் நம்பிக்கைகளுமே தோற்றம் பெற்று மாமிசம், ரத்தம் என்ற நிலையை யடைகின்றன. முதுமையும் மரணமும் தடுக்க முடியாதவை என்ற எண்ணம் மனத்தில் அடிக்கடி எழுமானால் அவை விரைவில் வந்து விளைகின்றன. எப்பொழுதும் இளமையோடிருப்பது சாத்தியம் என்ற நம்பிக்கை மனத்தில் உதிக்குமானால் அவன் மார்க்கண்டனாகவே இருப்பான்.

இம் முறையில் மனத்துக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பை மேற்சொன்ன மேனாட்டு விஞ்ஞானியான வசிஷ்டர் விளக்குகிறார்.

ஆகவே, ஆரோக்கிய வாழ்வுக்கு அனுகுணமென்று தெளியும் கட்டுத் திட்டங்கள் தேகத்துக்கு மட்டுமின்றி மனத்துக்கும் ஏற்றவையாக அமைய வேண்டுமென்னும் நமது வைத்திய நூல்களின் கொள்கையை ஏற்க மறுக்கும் விசுவாமித்திரர்கள் சாந்தம் பெற வேணும். (தொடரும்)

# வைகறைப் பொழுது

**வை**கறைப் பொழுதின் இன்பம் துய்க்காதவர், வாழ்க்கையில் ஒரு முக்கியமான அம்சத்தை இழந்தவர்கள் என்றே கருத வேண்டும்.

பல பல வென்று பொழுது விடியும் அந்த வேளையில் சிலு சிலு என்று வீசும் காற்று உடலுக்கும் உள்ளத்துக்கும் எவ்வளவு இன்பம் தருகிறது!

அந்த வேளையில் புள்ளினங்கள் தத்தம் கூட்டை விட்டுப் பேடைகளுடனும் குஞ்சு குட்டிகளுடனும் 'கீச்சு கீச்சு' என்று சப்தித்துக்கொண்டு, வானில் இறக்கைகளைப் படபடத்துக் கொண்டு செல்லும் காட்சி கண்கொள்ளாக் காட்சி அல்லவா?

குளங்களிலும் குட்டைகளிலும் சூரியனின் வரவை எதிர் நோக்கியிருக்கும் தாமரை போன்ற மலர்கள் எல்லாம் மொட்டு அவிழக் காத்திருக்கும் அந்தக் காட்சியும் எவ்வளவு ரம்மியமானது!

இப்படி உலகமே கதிரவனின் உல்லாச வரவை ஆனந்தத்தோடு எதிர்நோக்கி யிருக்கும்போது கீழ்வானம் தகதகவென்று தங்கத் தகடுபோல் சிவந்து காட்டுகிறது. பிறகு சற்று நேரத்துக் கெல்லாம் பளபளவென்று மின்னிக் கொண்டு சூரியதேவன் ஆனந்தக் கூத்தாடிக்கொண்டு வானவீதியில் எழுகிறான்!

சூரியன் வருகிறான் என்று அறிந்த மாத்திரத்திலேயே இருள் மெல்ல மெல்ல விலகுகிறது! அதைப் பார்க்கும்போது, அழகிய இளம் நங்கை தன் காதலன் முன் நிற்க நாணிக் கோணிக் கொண்டு செல்லுகிற பாவம்தான் நினைவுக்கு வருகிறது. அத்துடன் கவிச் சக்கரவர்த்தி கம்பர் எங்கோ ஓர் இடத்தில் கூறும் இந்த இரண்டடிகளும் நினைவுக்கு வருகின்றன.

"நாணினள் என ஏகினள் நளிர்
கங்கு லாகிய நங்கையே!"

இப்படிப் பஞ்ச பஞ்ச உஷத் காலத்திலே சூரியோதயமும், கங்குலின் மறைவும் உள்ளத்தில் பலப் பல இன்ப உணர்ச்சிகளை யெல்லாம் ஊட்டுகின்றன!

அவற்றுக்குக் கவிஞன் சொல்லாலே சித்திரம் தீட்டுகிறான். ஓவியர் கலு வர்ணங்களைக் கொண்டு அற்புத சித்திரம் வரைகிறார்.

அந்த அற்புத சித்திரத்தை இவ்விதழ் அட்டையிலே காண்கிறோம். அதைப் பார்க்கும்போது நாள் எல்லாம் பார்த்துக் கொண்டேயிருக்கலாம் போல் தோன்றுகிறதல்லவா?

# சோனியின் வெற்றி

அக்ஷயம்

வேலுசாமியின் கடைவாசலில் நின்று நான் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தேன். பின்னாலிருந்து வந்த ஆத்மநாதன் ஓங்கி என் முதுகில் ஒரு குத்து விட்டு, "ஏண்டா, பழி! தெரியுமாடா சங்கதி? உன் வேணுவைப் பற்றி என்னவோ பிரமாதமாகப் புகழ்ந்து கொண்டிருந்தாயே! வானத்தை வில்லாக வளைத்து விடுவான். கயிறை மணலாகத் திரித்து விடுவான் என்றெல்லாம்! இன்று என்ன ஆயிற்று, தெரியுமா?" என்றான்.

அவன் குத்தைத் தாளாமல் துள்ளிக் குதித்த நான், "நேற்று நம் ஊர் நமசிவாயத்தினிடம் தோற்றான். இன்று உன்னிடம் தோற்று விட்டானாக்கும்!" என்றேன் முதுகைத் தடவி விட்டுக் கொண்டு.

"என்னிடம் தோற்றாலாவது தேவலையே! நம் ஊர்ச் சோனியிடம் அல்லவா தோற்று விட்டான்!" என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான் ஆத்மநாதன்.

"யார்? சோனியா? எந்தச் சோனி?"

"வேறு எந்தச் சோனி? நம்ம நமசிவாயத்தின் சிஷ்யன் சோனிதான்!"

"என்ன? 'ஊப்!' என்று ஊதினால் ஆடிக் காற்றில் இலவம் பஞ்சு பறக்கிற மாதிரி பறப்பானே, அந்தச் சோனியினிடமா? எதற்காக இப்படிக் கதை அளக்கிறாய்?"

"நானா கதை அளக்கிறேன்? நீயே வேண்டுமானாலும் நேரில் வந்து அந்தச் சோனியையே கேட்டுக் கொள்!" என்று கையைப் பிடித்து இழுத்தான் ஆத்மநாதன்.

நேற்று மாலை நடந்த நிகழ்ச்சி நினைவிருந்தால் யாருமே இந்தப் பேச்சை நம்ப மாட்டார்கள். எங்கள் ஊருக்கு வேணு வந்து ஒரு மாதம் தான் ஆகிறது. 'நல்ல சரக்காயிருந்தால் உள்ளூரிலேயே விலை போகாதா?' என்பார்களே, இந்தப் பழமொழி எவ்வளவு தூரம் உண்மையோ, தெரியாது. இல்லாவிட்டால் ஊர்விட்டு ஊர் வந்து குடியேறுவானேன் என்றும் கேட்கத் தோன்றுகிறது.



அதற்கேற்றாற் போல் உள்ளூர் நமசிவாயத்தையும் வேணுவையும் நிறுத்தி வைத்துப் பார்த்தால் அஜகஜாந்தரமான வித்தியாசம் தெரியவரும். ஆஜானுபாகுவான நமசிவாயம் எங்கே? அடக்கமே உருவான வேணுவின் சாதாரணத் தோற்றம் எங்கே? வஸ்தாத் என்னும் அடைமொழி இல்லாவிட்டால் அவனை யாருமே வஸ்தாத் என்று மதிக்க மாட்டார்கள்.

பொதுவாக எங்கள் ஊருக்கு வரும் வஸ்தாதுகள் எல்லாம் தங்களைப்பற்றிப் பிரமாதமாகப் பேசிக் கொண்டு வருவார்கள். நமசிவாயத்தோடு ஒரு முறையாவது சண்டையிட்டுத் தோற்காமல் அவர்கள் ஊரைவிட்டுச் செல்வதில்லை. நமசிவாயம் வெற்றி காண முடியாத வீரராக எங்கள் ஊர்க் கௌரவத்தைக் காப்பாற்றி வந்தார்.

வேணுவும் வந்தது முதல் அவரிடம் வால் ஆட்டவும் இல்லை; வம்புச்சண்டைக்கு அவரை இழுக்கவும் இல்லை. அவன் அவ்வளவு சாதுவாக அடங்கியிருக்கவே, 'நாம் தான் இந்த ஊருக்கு ராஜா!' என்ற முறையில் தைரியமாக இருந்தார் நமசிவாயம். அதற்கேற்றாற் போல் வேணுவும் அவரிடம் அலாதி மரியாதையும் மதிப்பும் வைத்திருந்தான். இருந்தாலும் தன் பெருமையை நிலை நாட்டிக் கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிட்டாதா என்றே நமசிவாயம் எதிர்பார்த்தார்.

நேற்று மாலை இதே நேரத்துக்குத்தான் வேலுசாமியின் கடை வாசலில் நின்று கொண்டு வேணு சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தான். வேலுசாமியிடம் வேடிக்கையாகப் பேசியவாறே, சிகரெட் முழுவதையும் ஊதித் தள்ளிவிட்ட வேணு கடைசி முறையாக ஒரு முறை புகையை உறிஞ்சி விட்டுச் சிகரெட் துண்டை விட்டெறிந்தான். நமசிவாயம் அப்பொழுது அந்தப் பக்கமாக வருவதற்கும், அவன் சிகரெட் துண்டை விட்டெறிவதற்கும் சரியாக இருந்தது. அவர் வந்ததை அவன் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால் கட்டாயம் அவன் அப்படி விட்டெறிந்திருக்க மாட்டான்.

அவன் விட்டெறிந்த சிகரெட் அவர் மேல் போய் விழுந்து 'சுர்ர்' என்று சுட்டது. அவருக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது.

"எலே! கண்ணு மண்ணு தெரியாத ஆளா யிருக்கிறாயே! பெரிய வஸ்தாது என்ற நினைப்போ?" என்று சீறினார் நமசிவாயம்.

திரும்பிப்பார்த்த வேணுவுக்குத் தன் தவறு தெரிய வந்தது. "மன்னிக்கவேணும். ஏதோ நினைவுப் பிசகாக விட்டெறிந்து விட்டேன். உங்களைப் பார்க்க வில்லை!" என்று கூறினான்.

"மன்னிக்கவா வேணும், காலிப்பயலே!" என்று கூறிய நமசிவாயம் அவன் கழுத்தைப் பிடித்துத் தள்ளினார். அவர் தள்ளின வேகத்தில் நான்கு அடி போனபின்தான் தன்னைச் சமாளித்துக் கொண்டான் வேணு. இருந்தாலும் அவன் கோபம் கொள்ள வில்லை. தன் பிசகுக்குத் தான் வருந்துவதாகவே கூறினான்.

"ஊரை விட்டு ஊர்வந்த பயலுக்கு இந்தக் கொழுப்பா?"

"தவறு என்று தான் ஒப்புக் கொள்கிறேனே?"

"டேய்! கொஞ்சம் நாவை அடக்கிப் பேசடா!"

"இப்பொழுது தான் என்ன தவறாகப் பேசிவிட்டேன்?"

"எதிர்த்து வேறு பேசுகிறாய்? உன்னை ஒரு கை பார்க்கிறேன்!"

"செய்த தவறுக்கு மன்னிப்புக் கோருகிறேன். ஒரு கை பார்க்கத்தான் வேண்டும் என்று தாங்கள் எண்ணினால் இன்று சாயந்திரம் மைதானத்தில் சந்திப்போமே!"

"மைதானம் எதற்கு? மண்ணுங்கட்டி எதற்கு? இங்கேயே உன்னை மண்ணைக்

கவ்வச் செய்கிறேன். பார்! என்னை என்ன நினைத்தாய்? என்று கறுவினார் நமசிவாயம்.

இவ்வாறு கூறிய நமசிவாயம் பாய்ந்து வேணுவின் கையைப் பற்றி முறுக்கினார். வேணு ஒரு துள்ளல் துள்ளித் தன்னை விடுவித்துக் கொண்டான். மறுமுறையும் அவனைப் பிடிக்க முன்னேறிய நமசிவாயத்தின் கை அவன் கையில் சிக்கிக் கொண்டது. தம் கையை விடுவித்துக் கொள்ள அவர் எத்தனையோ முயன்றார். அவன் பிடி இரும்பாக இறுகியது. அவர் விழி பிதுங்கியது; புழுவாகத் துடித்தார்.



"என்னங்க?" என்று மிகவும் சாந்தமாகவே கேட்டான் வேணு.

"தோற்றேன், தோற்றேன், தோற்றேன்!" என்று மூன்று தரம் கூறித் தம் தோல்வியை ஒப்புக் கொண்டார் நமசிவாயம்.

கடை வாசலில் நின்றவர்கள் கைகொட்டி ஆரவாரித்தார்கள்.

நமசிவாயத்துக்கு முகம் தொங்கியது. உள்ளூர்வாசிகளில் சிலருக்கு அவர் தோற்றதில் அலாதி மகிழ்ச்சி. ஊர்க்காரர் ஒருவர் பெரியவர் என்று பெயர் வாங்கினால் பொறாமை பெருகி ஊராருக்குப் பிடிக்காமற் போவது உலக இயல்புதானே?

யாரையும் ஏறிட்டுப் பார்க்காமல் நமசிவாயம் தம் வீட்டை நோக்கி நடந்தார்.

ஆனைப்பட்ட நமசிவாயமே அயர்ந்து விட்ட பொழுது, அவருடைய சிஷ்யன் சோனியா வேணுவை ஜயித்தான்? சோனி பெயரில் மட்டும் சோனி அல்ல, உருவத்திலும் சோனிதான். அப்படிப் பட்டவன் ஒரு பெரிய வஸ்தாதை ஜயிப்பதென்றால் யாருக்குத்தான் வியப்பாயிராது?

உடனே ஆத்மநாதனுடன் சோனியைக் காணப் புறப்பட்டு விட்டேன். அவனை வீடு வரை தேடிக் கொண்டு போக வேண்டிய அவசியம் கூட ஏற்பட வில்லை. நடு வழியிலேயே சந்தித்து விட்டேன். "விஷயம் உண்மையா?" என்று கேட்டேன்.

"உண்மையில்லாமல்? இந்தப் பக்கத்திலே நம் வாத்தியாரை ஜயிக்க ஆள் ஏதுங்க? ஏதோ எக்கச் சக்கமாகக் கையைக் கொடுத்து விட்டாரு. திமிறித் தப்ப முடியாமற் போய் விட்டது. தோற்று விட்டதாக ஒப்புக் கொண்டாரு. இன்றுகாலையில் வேணுவைப் போய்ப் பார்த்தேன். ஏன் அண்ணே! எக்கச் சக்கமாகமாட்டிக்கொண்டு விட்டார் என்பதற்காக எங்கள் வாத்தியார் தோற்றவராகி விடுவாரோ? முதலில் இந்தச் சோனிக்கே உன்னாலே பதில் சொல்ல முடியாது. வாத்தியாரை ஜயித்து விடுவாராக்கும்!" என்று கூறி முதுகில் ஒரு குத்து விட்டேன். அவ்வளவு தான். ஆள் 'அடேயப்பா!' என்று சொல்லிக் கொண்டே ஓடிவிட்டான். என் ஒரு குத்துக்கே நிற்காத ஆள் எங்கள் வாத்தியாரைத்தான் ஜயித்து விடுவானாக்கும்!" என்றான் சோனி.



சோனி சொன்னதைப் பார்த்தால் உண்மையாகவே பட்டது. ஆகா! சோனிக்குத்தான் என்ன குரு பக்தி! என்ன குரு விசுவாசம்!

இருந்தாலும் இந்த மனம் எதையும் சட்டென்று நம்பி விடுகிறதா? நமசிவாயத்தை வென்ற வேணு சோனியைக் கண்டு பயந்து ஓடுவானா? நேரிலேயே கேட்டு விடுவதென்று அவன் வீடு தேடிச் சென்றேன். என்னைப் பார்த்ததும், "வாங்க, வாங்க!" என்று முக மலர்ச்சியுடன் வரவேற்றான்.

"சோனியிடம் பயந்து ஓடி வந்து விட்டாயாமே!" என்றேன்.

"ஆமாங்க!"

"பெரிய வஸ்தாது என்று சொல்லிக் கொண்டு இப்படி ஓடிவர வெட்கமாயில்லை?"

"வெட்கப்பட்டால் கட்டி வருமா? உயிர் அல்லவா பெரிசு?"

"சீ! நீயும் ஒரு மனிதன் மாதிரி! நேற்று நமசிவாயத்தைத் தோற்கடித்த உனக்குச் சோனி ஒரு பிரமாதமா?"

"எதற்கும் ஆள் தராதரம் இல்லீங்களா?"

"நமசிவாயத்தைக் காட்டிலும் சோனி என்ன பலசாலியோ?"

"எனக்கு அவனோடு முகம் கொடுத்துப் பேசவே இஷ்டமில்லை. திரும்பினேன்."

"என்னங்க இப்படி ஒரேயடியாக, அவனிடம் கோபித்துக் கொண்டு போகிறீங்க?"

"பின்னே?"

"நீங்களே சொல்லுங்கள்! எனக்குக் கோபம் வந்து சோனியை இசை கேடாக ஒரு குத்து விடுகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் அங்கேயே வாயைப் பிளந்து வைத்தால் போலீஸுக்கு யார் பதில் சொல்லுகிறது? அதனால் தான் அந்தச் சோனிப் பயலோடு பேச்சே கொடுக்க வேண்டாம் என்று திரும்பி வந்து விட்டேன். என்னங்க! நான் செய்தது தவறுங்களா?" என்று கேட்டான் வேணு.

"அப்படியா சமாசாரம்! சோனியின் வெற்றிக்குக் காரணம் இப்பொழுது நல்லவா தெரிகிறது!" என்று வெற்றிப் பார்வையோடு ஆத்மநாதனைத் திரும்பிப் பார்த்தேன். அவன் எனக்கு முன்னால் எட்டிநடை போட்டுக்கொண்டிருந்தான்!



தேர்தலில் சதா டிபாஸிட்டை இழப்பவர்: ஏன் ஸார்! பாங்குகளிலே இருக்கிற மாதிரி இதிலேயும் ஸேப் டிபாஸிட்டுன்னு ஒன்றுகிடையாதா?

# மேலும் மலிவானது!




## குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ரம்மியமணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியாவெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

**இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?**

குணம் உத்தரவாதம் கால்கேட் பாமாலிவ் அளிக்கிறது




**ப்ரோடெக்ஸ்**

**சர்வப்பிரயோக**

**வாசனைப்பௌடர்**

வெள்ளித்திரை

# ஆண்டி பெற்ற செல்வன்

## காந்தன்

ஒரு காரியத்தைச் செய்யும் போது அதனால் கிடைக்கக் கூடிய ஒரு குறிப்பிட்ட நன்மையைக் கருதி அதில் ஏற்படும் சிரமங்களை நாம் பொருட் படுத்துவதில்லை. 'ஏர் கண்டிஷண்டு' தியேட்டரில் பார்க்கும் படம் எப்படியிருந்தாலும் அந்தத் தியேட்டரின் குளிர்ச்சி மனகக்கும் குளிர்ச்சியாயிருப்பதால் அது வரையில் நமக்குத் திருப்தி ஏற்பட்டு விடுகிறது.

அது போல, சில படங்களில் சில நல்ல அம்சங்கள் யாருக்கும் தெரியாமலே சேர்ந்து விடுவது உண்டு. அந்த நல்ல அம்சங்களுக்காக அந்தப் படத்தைப் பார்க்கலாம். ஒரு குறிப்பிட்ட பேச்சாளர் எந்தக் கட்சியைச் சேர்ந்தவரா யிருந்தாலும், அவரது சொல் வன்மைக்காக அவர் பேச்சைக் கேட்கலாம்.

நியூ ஏஞ்சல் புரொடக்ஷன்ஸ் வெளியிட்டிருக்கும் "ஆண்டி பெற்ற செல்வன்" என்னும் படம் எந்த அம்சத்திலும் பிரமாதமாயில்லை. ஆனால் அதில் அரசனாக நடிக்கும் எஸ். வி. ரங்கராவ் நல்ல முக பாவங்களுடன் அபாரமாக நடித்திருக்கிறார்.

"பங்காரு பாப்பா", 'எங்கள் வீட்டு மகாலக்ஷ்மி" முதலிய படங்களில் அற்புதமாக நடித்து மேற்படி படங்களுக்கு நல்ல பெயரைத் தேடித் தந்த அவர் இந்தப் படத்திலும் தம்மைப் பொறுத்த வரையில் குறை சொல்ல முடியாமல் தம் பாகத்தைப் பூர்த்தி செய்திருக்கிறார்.

ஆனால் மண்ணில் பதித்த மரகதக் கல்லை மக்கள் மதிக்க மாட்டார்கள். அதை மக்கள் மதிக்க வேண்டுமானால், மதிப்பில் உயர்ந்த தங்கக் கிரீடத்தில், மாணிக்கக் கற்களுக்கு இடையே மங்காமல் இலக வைக்க வேண்டும். மணம் வீசும் மலர்கள் பூத்துக் குலுங்கும் பூங்கொடிகள், அழகிய நந்த வனத்தை அலங்கரிக்க வேண்டும். அப்பொழுது தான் மதிப்பு இருக்கும். அப்படியில்லாமல் அவைகள் ஒரு பாழ் வீட்டைச் சுற்றிப் படருமானால் என்ன பயன் ?

எஸ். வி: ரங்கராவின் நடிப்பு பல இடங்களில் மனம் கவரக் கூடியதா யிருந்தது. பிறக்கப் போகும் குழந்தையை ஆவலோடு எதிர் பார்த்த போதும், குழந்தை பிறந்ததும் அதன் தாய் இறந்து போனதை அறிந்து கண்ணீர் வடித்த போதும், நோய் வாய்ப்பட்டுப் படுக்கையில் கிடந்தபோதும், அரசிளங் குமரனுக்கு அறிவுரைகள் புகன்றபோதும், மகன் புத்தி மாறுாட்டம் கொண்டதாக நினைத்து வேதனையால் நெஞ்சம் குமுறிய போதும், அரசியல் அலுவல்களைக் கவனித்த படியே இறந்தபோதும் அவர் நடிப்பின் சிகரத்திலிருந்தார்.

அடுத்த படியாக இந்தப் படத்தில் குறிப்பிட வேண்டிய முக்கியமான நடிகர் என். டி. ராமாராவ். அவர், ஆண்டியாக (அதாவது ஆண்டி பெற்ற செல்வனின் தந்தையாக) நடிக்கிறார். அவரது நடிப்பும் மேக்கப்பும் ஒன்றையொன்று மிஞ்சுகின்றன. சோற்றுவேளை தவறாமல் வீட்டுக்கு வந்து மனைவியை இம்சிப்பது, பொறுப்பற்ற தன்மையுடன் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் நடந்து கொள்வது எல்லாம் பாராட்டத் தக்க முறையில் அமைந்திருக்கின்றன. பொது ஜனங்களின் ஏகோபித்த பாராட்டுதல்களைப் பெறுவதற்கு ராமாராவுக்கு இன்னொரு சந்தர்ப்



பாமும் கிடைத்திருக்கிறது. இப்படத்தில் கத்திச் சண்டை, குத்துச் சண்டை முதலியவைகளை மிகவும் சமத்காரமாகப் புரிகிருர்.

கல்யாண வீட்டுக்கு எப்படி வாழை மரம் கட்டுவது இன்றியமையாத அம்சமோ, அதே மாதிரி நம் படங்களுக்கு நடனம் இன்றியமையாதது. குசல குமாரி இப்படத்தில் நடனமாடியிருக்கிருர். கல்யாண வீட்டில் வாழை மரம் கட்டா விட்டால் எல்லாரும் குறிப்பாகக் கவனிப்பார்கள். ஆனல் வாழை மரம் கட்டியிருந்தால் அதைப் பார்த்து விசேஷமாக எதுவும் சொல்ல மாட்டார்கள். 'சரி; வாழைமரம் கட்டியிருக்கிறது. இது கல்யாண வீடுதான்' என்று தீர்மானித்துக் கொள்வார்கள். அதுபோலத் தான் இந்த நடனமும்; இது தமிழ்ப் படந்தான் என்று தீர்மானித்துக் கொள்ளக் குசல குமாரியின் நடனம் பெரிதும் உதவியாயிருக்கிறது.

*    *

விளையாட்டே வினையாகும் என்ற முதுமொழியின் விளக்கம் தான் ''ஆண்டி பெற்ற செல்வன்''. பி. ஏ. சுப்பாராவ் தெலுங்கில் தயாரித்த ''ராஜு பேதா'' என்னும் படத்தின் தமிழாக்கம் இது.

வயது முதிர்ந்த அரசன். அவனுக்கு அந்திம தசையில் ஒரு மகன் பிறக்கிருன். அந்த அரசைக் கைப் பற்றுவதற்குச் சூழ்ச்சிகள் புரிகிருன், சேனதிபதி விக்ரம். அந்த ஊரில் பொன்னன் (ஆண்டி) ஒரு சோம்பேறி; மனைவி மக்களை இம்சித்து, பிச்சை எடுக்கச் சொல்லி வாழும் மதியிலி. மன்னன் மகன் நரேந்திரனைப் போலவே ஆண்டியின் மகன் கண்ணன் இருந்தான். இருவரும் ஒரே மாதிரி தோற்றத்துடன் இரட்டைப் பிள்ளைகள் மாதிரியிருந்தனர். தகப்பனின் அடிக்குப் பயந்து அரண்மனைக்குள் ஓடி வந்த கண்ணனைப் பார்த்த அரசிளங்குமரன் நரேந்திரன் அவனை உள்ளே அழைத்துச் சென்று அவன் உடையைத் தான் மாற்றிக் கொண்டு, தன் உடையை அவனுக்கு அளிக்கிருன். இது தான் திரைக்கதை — அதன் ஆரம்பம்; முடிவு எல்லாம்!

மன்னன் மகன், ஆண்டியினிடம் சிக்கி அடிபடுகிருன்; ஆண்டி பெற்ற செல்வன் அரசவாழ்வு வாழ்கிருன். கடைசியில் உண்மை இளவரசனுக்கு முடிசூட்டப் படுகிறது.

ரேலங்கியின் கோணங்கி நடிப்பும், குத்துச் சண்டைகளும், குதிரை சவாரியும், அசட்டு ஹாஸ்யங்களும் படத்தில் நிறைய இடம் பெற்றிருக்கின்றன. அவற்றை ஹாஸ்யங்களாக நினைத்து யாராவது சிரித்து விட்டால் அதனல் பாதகம் ஒன்றுமில்லை!

இந்தப் படத்தில் பாடல்களைப் பற்றி அதிகமாகப் பொருட்படுத்த வேண்டியதில்லை. அவைகளும் அப்படி ரசிகர்கள் மனத்தில் இடம் பெற முயலவில்லை. அவைபாட்டுக்குச் சாதுவாக ஒதுங்கியிருக்கின்றன. பாவம், பிழைத்துப் போகட்டும்!

குதிரை சவாரி, அடி பிடிப் போர், அரண்மனைக் காட்சி ஜோடனை, ஆண்டியின் வீட்டுச் சூழ் நிலை ஆகியவைகளெல்லாம் இப்படத்தில் நன்றுயிருக்கின்றன.

தான் பெற்ற மகனைப் போலவே ஒரு சிறுவன் உருவ ஒற்றுமை யுடையவனுயிருந்தாலும் தாய் அவனைத் தன் மகன் என்று ஏமாந்து விடுவாளா? ஆண்டி மகன் எத்தனை நவநவமான ராஜ உடைகள் தரித்தாலும், கொஞ்ச காலத்துக்குள் அவன் உருவம் அடியோடு மாறிவிடுமா? தாய்க்குத் தன் மகனைத் தெரியாமற் போய் விடுமா? நாடாளும் மன்னன் முதல், சேனதிபதி, மந்திரிமார்கள், அரண்மனைச் சேடிமார்கள், காவலாளர்கள் வரையில் எல்லோரும் ஆண்டி பெற்ற செல்வனை அரசிளங்குமாரனுகவே நம்பி ஏமாந்து போய் விடுவார்களா என்னும் கேள்விகளுக்கெல்லாம் விளக்கமாகப் பதில் கூற முடியாது. மேலே என்ன நடந்தது என்னும் விளக்கத்தை வெள்ளித் திரையில் காணுங்கள் என்று வழக்கம்போல் இப்படத்தில் கூறுவதற்கில்லை. மேற்கூறிய ஒரே மாதிரி கேள்விகளுக்கெல்லாம் பதில் கூற முடியாமல் வெள்ளித் திரையும் வெட்கத்தினல் இருண்டு விடும்!

இந்தப் படத்தில் நடித்திருக்கும் நல்ல நடிகர்களின் நடிப்பைக் காணும்பொழுதும் சரி, நடிப்பு, பேச்சு, பாட்டு முதலியவற்றின் தரக் குறைவைக் காணும்பொழுதும் சரி மனசுக்கு ஆயாசம்தான் உண்டாகிறது. நல்ல படங்களை தமிழில் தயாரிக்க முடியாதா என்று எண்ணத் தோன்றுகிறது.



# ஈழநாட்டுப் பிரயாணம் 9

ரத்தினபுரி நகரத்து ஏற்றமும் இறக்கமுமான மலைச் சாலை வழியாகக் கதிர்காமத்தை நோக்கி மோட்டார் வண்டி சென்று கொண்டிருந்தது. காலை வேளை. வானத்தை நாலா புறமும் மேகங்கள் மூடியிருந்தன.

''இந்த நாட்டில் எல்லாத் துறைகளிலும் குறிப்பாக அரசியல் துறையில் இன்றைய தினம் இப்படித்தான் மேகங்கள் மூடி யிருக்கின்றன'' என்றார் உடன் வந்த மட்டக்களப்புத் தமிழ் அன்பர் திரு நவம்.

''இந்த நாட்டில் மட்டும்தானா? எங்கள் தமிழ் நாட்டில்கூட ஏறக்குறைய இப்படித்தான் இருக்கிறது'' என்றேன்.

''தமிழ் நாட்டின் அரசியலுக்கும், ஈழ நாட்டின் அரசியலுக்கும் வித்தியாசம் உண்டு, ஐயா! இங்கு தமிழ் மக்களின் உரிமை பறி போய்விட்டது. இன்னும் கொஞ்ச நாட்கள் ஆனால் தமிழும் தமிழ் மக்களும் என்ன ஆவார்களோ தெரியாது'' என்றார்.

தமிழ் சாதியைப் பற்றியும் அவர்கள் எங்கே இருந்தாலும் அவர்களுக்கு ஏற்படும் தொல்லைகளைப் பற்றியும் சிந்தனை செய்யத் தொடங்கினேன். கார் 'விர்' என்று போய்க்கொண்டிருந்தது. சாலையின் இருபுறங்களிலும் இதற்கு முன்னால் பார்த்த இனிய காட்சிகளேதான். வானோங்கி நிற்கும் மலைகள். அடர்த்தியான தோப்புகள். தேயிலைக் கொழுந்து பறிப்பதும், ரப்பர் பால் எடுப்பதும் முக்கியமான தொழில்கள். தளதளவென்று காட்சி தரும் தேயிலைத் தோட்டமும், அடர்த்தியான ரப்பர்மரக் காடுகளும் வழியில் நமக்கு முகமன் கூறிக் கொண்டிருந்தன.

நடுநடுவே நெல் வயல்கள். அந்த வயல்களுக்கு அருகில் சிறு சிறு வீடுகள். ஆங்காங்கு மக்கள் பலவிதமான வேலைகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். சிலர் ஒரு வேலையும் செய்யாமல் உட்கார்ந்து வெறும் வெட்டிப் பேச்சு பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் பேச்சில் அப்படி ஒன்றும் சுறுசுறுப்போ உற்சாகமோ உணர்ச்சியோ இல்லை.

அவர்கள் பேச்சில்மட்டும் என்ன? ஈழநாட்டிலேயே சிங்கள மக்களின் வாழ்க்கை அப்படித்தான் இருந்தது. அவர்கள் செய்யும் காரியங்களில் முன் யோசனையும், வன்மையும், வேகமும் மருந்துக்குக்கூடக் கிடையாது. என்ன சோம்பல்! என்ன சிரத்தைக் குறைவு! நிலத்தை உழுகிறவன் ஏரின் கொழு முனை நிலத்தில் நன்றாகப் படும்படி பிடித்து உழுவதில்லை. மரத்தை அறுக்கும் போதும், பலகைகளை இழைக்கும் போதும் அவர்கள் கைகள் மிகமிக மெதுவாகச் செல்கின்றன. யானையை அதட்டி ஓட்டும் போதுகூடச் சிங்கள யானைப் பாகன் ஏதோ சப்புச் சவுக்கென்று ரகசியமாக எதையோ சொல்லி அதட்டுகிறான். பூரண பலத்தையும் உபயோகித்து, கடுமையாக உழைத்து, கடினமான காரியங்களைச் செய்து முடிப்பதில் ஊறிவரும் மன எழுச்சியையும் மகிழ்ச்சியையும் அனுபவித்துப் பாடுபடுபவர்கள் ஈழநாட்டில் இருக்கும் தமிழ் மக்கள்தான். அவர்கள் உழைப்பால் உயர்ந்தது ஈழ நாடு. அதனால் உயர்ந்தவர்கள் சிங்கள மக்கள். இன்று தமிழ் மக்கள் செய்த உதவியை மறந்து அவர்கள் உரிமைகளைப் பறித்துக் கொண்டு அவர்களை ஊரைவிட்டே துரத்துவதற்கு ஏற்பாடு செய்து வருகின்றனர் சிங்கள மக்கள். இந்த நிலைமை விரைவில் மாற வேண்டும்; மாற்றியே ஆக வேண்டும். அதற்கான உருப்படியான காரியங்





களில் தமிழ் மக்கள் முழுமூச்சுடன் ஈடுபட வேண்டும். வெறும் சோம்பல் வாழ்க்கை நடத்துபவர்களும், பெரு முயற்சியினால் வரும் இன்ப சுகத்தை அனுபவித்தறியாத வர்களுமான சிங்களவர்களிடமா வீரத் தமிழ் மக்கள் சீர்குலைந்து சிதைந்து போவது?

இவை யெல்லாம் பற்றி எண்ணிக் கொண்டு தமிழ் மக்களின் வாழ்க்கையில் இருக்கும் இன்ப துன்பங்களைச் சிந்தித்துப் பார்த்துக்கொண்டு மணிக்கு ஐம்பது மைல் வேகத்தில் போய்க் கொண்டிருந்தேன். அரைமணி நேரப் பிரயாணத்துக்குப் பிறகு சாலை ஓரத்துக் கிராமம் ஒன்று வந்தது. ஒரு பக்கத்தில் பத்துப் பன்னிரண்டு கடைகள் இருந்தன. சிங்கள மக்களும் தமிழ் மக்களும் இந்தப் பகுதியில் சேர்ந்தே வசித்து வந்தனர்.

கடைகளில் எல்லாவிதமான சாமான்களும் இருந்தன. கருவாட்டின் மணம் மூக்கைத் துளைத்தது. கருவாட்டில் இருந்து நவீன நாகரிக அலங்காரப் பொருள்கள், துணி மணிகள், ரேடியோப் பெட்டிகள், மருந்துச் சாமான்கள், தின—வாரப் பத்திரிகைகள் எல்லாம் இருந்தன. கருவாட்டை எடுப்பதற்கு முயன்று கொண்டிருந்தது ஒரு நாய். அதைக் கூடக் கவனியாமல் ஏதோ சிந்தனையில் உட்கார்ந்திருந்தார் ஒரு பெரியவர்.



மோட்டார் வண்டி நின்றது. மட்டக்களப்புத் தமிழ் நண்பர் நவம் வண்டியிலிருந்து அவசரமாக இறங்கினார். ஏதோ சொந்தக் காரியம் போலிருக்கிறது, இறங்குகிறார் என்று நினைத்தேன்.

''ஐயா! தயவுசெய்து இங்கே கொஞ்சம் இறங்குங்கள். உங்களுக்கு இந்த நாட்டு அரசியல் அலங்கோலத்தைக் காண்பிக்கிறேன்'' என்றார்.

இந்த மனிதரிடம் அகப்பட்டுக் கொண்டோமே என்று அலுத்துக் கொண்டே மோட்டார் வண்டியில் இருந்து இறங்க மனமில்லாமல் இறங்கினேன்.

# சிங்கள ஏகாதிபத்தியம்

''என்ன அலங்கோலம்?'' என்றேன்.

''அதோ பாருங்கள்!'' என்று சாலைக்குப் பக்கத்தில் வரிசையாக இருந்த கடைகளில் ஒரு மாடி வைத்துக் கட்டியிருந்த கடையைக் காண்பித்தார்.

''என்னத்தைப் பார்க்கிறது! இடிந்தும் சிதைந்தும் கிடக்கும் இந்த அலங்கோலத்தில் என்ன அதிசயம்? இதுமாதிரி தமிழ் நாட்டில் எத்தனையோ இடிந்தும் சிதைந்தும் போன கட்டடங்கள் இருக்கின்றனவே!'' என்றேன்.

'' இல்லை ஐயா! அவசரப்படாமல் நிதானமாய்ப் பாருங்கள்! இந்தப் புத்தம் புதுக் கட்டடம் தானே இடிந்து போகவில்லை. சில மாதங்களுக்கு முன்னால் இங்கு நடந்த சிங்கள — தமிழ் தகராறில் சிங்கள மக்களால் இடித்துச் சூறையாடப்பட்ட ஏழைத் தமிழ் மக்களின் கடைகள்'' என்றார்.

''ஆ! அப்படியா? இந்த மாதிரியா சூறையாடினார்கள்?'' என்று கேட்டேன்.

'' அதோ அந்த போர்டைப் பாருங்கள்'' என்று சாலையில் இருந்த ஒரு பெரிய போர்டைக் காண்பித்தார். அதில் இருந்த தமிழ் எழுத்துக்கள் எல்லாம் தாரைக் கொண்டு அடியோடு



பகீரதன்

அழிக்கப்பட்டிருந்தன. 'அடாடா! இந்த எழுத்து அழிப்பு இயக்கம் இங்கேயும் வந்து விட்டதா!' என்று எண்ணி வியந்தேன்.

"இடிந்துபோன கடைகளையும், தமிழ் எழுத்துக்கள் கோரமாக அழிக்கப்பட்டுக் கிடப்பதையும் பார்த்தீர்களா, ஐயா!" என்று உணர்ச்சித் துடிப்புடன் கேட்டார்.

ஆம், அவர் உணர்ச்சியைப் பார்த்ததும் தான் இங்கு சிங்கள—தமிழர் தகராறும், அதனால் தமிழ் மக்கள் எவ்வளவு தூரம் கஷ்டப் பட்டிருக்கிறார்கள் என்பதையும் நன்றாக உணர்ந்துகொள்ள முடிந்தது.

"ஆமாம்: அலங்கோலத்தைப் பார்த்தேன். ஏன் இப்படித் தமிழ் எழுத்தைக்கூட அழித்திருக்கிறது?" என்று கேட்டேன்.

"இவைதான் சிங்களம் ஆட்சி மொழி ஆனதின் சின்னங்கள்" என்றார். இதைச் சொல்லும்போது அவர் மெலிந்த உடல் முழுதுமே படபடவென்று ஆடித் துடிதுடித்தது.

அதிகார ஆசையும் ஏகாதிபத்திய வெறியும் ஒரு தேசத்தின், ஒரு இனத்தாருக்குத் தான் உண்டு என்பது இல்லை. உலகமெங்கும் சர்வ வியாபகமாக நிறைந்திருக்கின்றன. அந்த ஆசையும் வெறியும் இப்போது ஈழ நாட்டில் உள்ள சிங்கள மொழி வெறியர்களையும், சிங்கள அரசியல் வாதிகளையும் பிடித்துக் கொண்டு ஆட்டுகின்றன.

சிங்கள மொழி ஈழ நாட்டின் அரசியல் மொழி ஆவதுடன் அவர்கள் திருப்தியடையத் தயாராயில்லை. ஈழ நாட்டில் சிங்கள ஏகாதிபத்தியத்தையே நிலைநாட்டப் பிரியப் படுகிறார்கள். தமிழைச் சிங்களத்துக்கு அடிமையாக்கிவிட வேண்டும் என்று எண்ணுகிறார்கள். இதைத் தாய்மொழிப் பற்றுள்ள யாருமே ஒப்புக் கொள்ள முடியாது.

சிங்கள ஏகாதிபத்தியம் ஈழநாட்டில் இப்பொழுது பல இடங்களில் பல உருவங்களில் தலைதூக்கித் திருவிளையாடல் புரிவதைப் பத்திரிகைகளில் பார்த்து வருகிறோம். சில மாதங்களுக்கு முன்பு நடந்த திருவிளையாடலின் அலங்கோலத்தின் சின்னமாகத்தான் இந்த இடிந்து போன தமிழரின் கடைகளும் தமிழ் எழுத்தைத் தாரைக் கொண்டு அழித்த போர்டும் நமக்குக் காட்சி தருகின்றன.

"இது ஒன்றும் அதிசயமில்லை. இது ஒரு தூசிதான். அப்பொழுது நடந்த கலவரத்தைக் கேட்டால் இப்பொழுதுகூட மயிர்க் கூச்சம் எடுத்து விடும். ஐயாவுக்குக் கேட்க இஷ்டமென்றால் சொல்லுகிறேன்" என்றார்.

"இது என்ன வார்த்தை! இஷ்டமிருந்தால் என்று கேட்பானேன்! நானும் தமிழன் தானே! எனக்கு மட்டும் உணர்ச்சி இல்லையா என்ன? உடனே சொல்லும்!" என்றேன்.

*** *** ***

கடலிலிருந்து அடித்த குளிர்ந்த காற்று, கொழும்பு காலிமுகக் கடற்கரையை அடுத்த தலைநகரத்தில் ஒரு சோக கீதத்தைத் தாங்கி அப்பிரதேசத்தில் வியாபித்திருந்தது. 'கள்' என்று அடித்த கடு வெய்யிலையும் பொருட்படுத்தாமல் பதினாயிரக் கணக்கான மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தமிழ்த் தலைவர்கள்; தமிழரசுக் கட்சியைச் சேர்ந்த ஈழநாட்டுப் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் பத்துப் பேர்கள் கடற்கரையை அடுத்துள்ள புல்வெளியில் அமர்ந்திருக்கின்றனர். அவர்கள் சிங்கள ஏகாதிபத்தியத்தை எதிர்த்து உண்ணாவிரதம் எடுத்து வருகின்றனர். சிங்கள மொழிக்கு எதிராக அவர்கள் உண்ணாவிரதம் பூண்டு சத்தியாக்கிரகம் செய்யவில்லை. தமிழின் கௌரவத்தைக் காப்பதற்காகத்தான் உண்ணாவிரதம் எடுத்தனர். 'அவர்கள் உண்ணாவிரதம் நியாயமானது. அவர்களுக்கு உடனே நீதிவழங்க வேண்டும்' என்று கொழும்பு பாராளுமன்றத்து உயர்ந்த கட்டடங்கள்கூட வாயிருந்தால் வாதாடியிருக்கும். அதுசொல்லியிருந்தால்கூடப் பண்டாரநாயகா சர்க்கார் எடுத்துக் கொண்டிருப்பார்களோ என்னவோ?

தாய்மொழியின் உயர்வைக்காப்பாற்ற உண்ணாவிரத நோன்பிருந்த தமிழ்த் தலைவர்களைப் பார்த்துச் சிங்கள மக்கள் கேலி செய்தனர். கெக்கலி கொட்டினர். கடைசியில் அவர்கள் மீது கற்களைக்கூட வீசி எறிந்தனர். இந்தக் கொடுமைகளை எல்லாம்கூட லட்சியம் செய்யாமல், தங்கள்உடம்பிலே பட்ட காயத்தையும் பொருட்படுத்தாமல், சிங்களவர்களின் சிறுமைத்தனத்தால் தங்கள் ஆடைகள் கிழிந்ததைக்கூட அகற்றாமல் தாங்கள் மேற்கொண்ட தவ வாழ்க்கையில் ஈடுபட்டிருந்

### அருள் வாக்கு

பாபம் என்பது என்ன? புண்ணியம் என்பது என்ன? எதை நாம் செய்யக் கூடாது என்று மனத்துக்குத் தோன்றுகிறதோ, அதுதான் பாபம்; எதைச் செய்வது நல்லது என்று தோன்றுகிறதோ அதுதான் புண்ணியம்.

ஆசையின்றி ஒரு காரியத்தைச் செய்தால் அப்பொழுது பாபமில்லை. ஆசைப் பட்டு ஒன்றைச் செய்வதுதான் பாபம். பாபம் பண்ணிப் பண்ணி அந்தப் பழக்கம் பல காலமாக ஊறியிருக்கிறபடியால், எப்பொழுதும் பாபம் பண்ணச் செய்கிறது.

நாம் எப்படிப் பாபம் செய்கிறோம் என்பதை யோசித்துப் பார்க்கலாம்; வாயாலும் மனத்தாலும், தேகத்தாலும் பணத்தாலும் நாம் பாபம் செய்கிறோம். மனசில் கெட்ட நினைவுகளை நினைத்துப் பாபம் செய்கிறோம். வாயினால் உத்ஸாகமாகப் புரளி பண்ணிப் பாபம் செய்கிறோம். தேகத்தால் கெட்ட காரியங்களைப் பண்ணிப் பாபம் செய்கிறோம். பணத்தினால் பலவகையாகப் பாபம் செய்கிறோம். நாம் இந்தப் பாபங்களைப் பண்ணக் கூடாது என்று நினைத்தாலும் அப்படி இருக்க முடியவில்லை. பிசாசு போலப் பாபம் பண்ணும் பழக்கம் நம்மைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. நம்மை விடாமல் சுற்றிக் கொண்டேயிருக்கிறது. பல காலமாகப் பாபம் பண்ணியிருக்கிறோம். அதனால் தான் அந்தப் பழக்கம் விடவில்லை. அந்தப் பழக்கத்தை எப்படிப் போக்குவது?

கயிற்றை எப்படிச் சுற்றினோமோ, அப்படியே அவிழ்க்க வேண்டும். எந்த நாளினால் நாம் பாபம் பண்ணப் பழகிக் கொண்டோமோ, அந்த நாளினாலேயே புண்ணியம் செய்யப் பழகிக் கொள்ளவேண்டும். ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடிபீடம்.

தனர். அன்பு வழியைக் கடைப்பிடித்துப் புன்முறுவல் பூத்த முகத்துடனேயே இருந்தனர்.

தமிழ்த் தலைவர்கள் கொடுமைப் படுவதைக் கண்டு தமிழ் மக்கள் எத்தனை காலம் பொறுமையாக இருக்க முடியும்? பொறுமைக்கும் எல்லை உண்டல்லவா? தங்கள் தலைவர்கள் அவமானப்படுவதைக் கண்டு சில தமிழர்கள் சீறி எழுந்தனர். அதனால் பல இடங்களில் சிறு பூசல்கள் ஏற்பட்டன. நகரத்தில் கலகம் ஏற்பட்டது. தனிமையில் அகப்பட்ட அப்பாவித் தமிழர்கள், சமூகத்தில் கண்யமாக வாழ்ந்து வந்த உபாத்தியாயர்கள், வக்கீல்கள், இன்னும் பல வியாபாரத் துறையில் உள்ள தமிழர்கள் எல்லாம் நையப் புடைக்கப் பட்டார்கள். இந்தச் சமயத்தில்கூட தமிழ்த் தலைவர்கள் "ஏதோ சிங்களவர்கள் அறியாமையால் செய்கிறார்கள்! அவர்களைத் திருப்பித் தாக்காதீர்கள்!" என்று அறிவுறுத்தினார்கள். மனித குலத்தின் உயர்ந்த நாகரிகத்தைக் காப்பாற்ற அரும்பாடு பட்டார்கள்.

தமிழ் மக்களின் இந்தப் பொறுமையைச் சிங்களவர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்தத் தலைப்பட்டு விட்டனர். மட்டக்களப்பில் பட்டிப்பளையாற்றில் கல்லோயா அணைத்திட்டம் நடைபெற்று வந்தது. இங்குள்ள மக்கள் எல்லாரும் தமிழர்கள்தான். ஆனாலும் இலங்கை சர்க்கார் இங்கு சிங்கள மக்களைக் குடியேற்றினர். எப்படிப்பட்ட சிங்களவர்கள்? கொலைக்குற்றம் செய்தவர்கள், கொள்ளையடித்தவர்கள், கேடிகள், முடிச்சுமாறிகள் போன்ற பயங்கரக் குற்றவாளிகளை, சிறைக் கைதிகளைத் தமிழ் மக்கள் மத்தியில் குடியேற்றியிருந்தனர். அவர்களிடம் யாரோ வீண் புரளியைப் பரப்பி விட்டு விட்டனர்; "மட்டக்களப்புத் தமிழர்கள் சிங்களவர்மீது படையெடுக்கப் போகிறார்கள்" என்று.

அடுத்த கணம் அணைக்கட்டுப் பகுதியில் வசித்த தமிழ் மக்களை எல்லாம் வெறிபிடித்த சிங்களக் கூட்டம் தாக்க ஆரம்பித்து விட்டது. குழந்தைகள் பெரியவர்கள் என்று பாராமல் அவர்களைக் கண் மூடித்தனமாகக் கையில் எது அகப்பட்டதோ அதைக் கொண்டு மனம் போனபடி தாக்க ஆரம்பித்து விட்டனர். தமிழ்ப் பெண்களின் கற்புக்கே உலைவைக்க ஆரம்பித்து விட்டனர். சர்க்கார் லாரிகளையே உபயோகப் படுத்திக் கொண்டு மட்டக்களப்புக்குள்ளே புகுவதற்கும் முயன்று விட்டனர்.

விபுலானந்த அடிகளைப் பெற்றெடுத்த புண்ணிய கிராமமான காரைத் தீவுக்கு ஆபத்து ஏற்படும் என்ற நிலை வந்து விட்டது. தமிழ் மக்கள் திரண்டு எழுந்து விட்டனர். அவர்களிடம் இது வரையில் அடங்கிக்கிடந்த வீரம் விசுவரூபம் எடுத்து விட்டது.

**கா**ரைத் தீவின் சாலையில் கூடியிருந்த தமிழ்க் கூட்டம் கடலை நினைவூட்டியது. அது சாவதானமாக முன்னேறிச் நகர்ந்து சென்றது. கடல் அலைகள் தாங்கி நிற்கும் அழுக்கேறிய நுரையைப் போலிருந்தது தமிழ் மக்களுடைய சாம்பல்நிறமான வீரமுகங்கள்.

கோபத்தினால் அவர்கள் கண்கள் ஜ்வலித்தன. ஆச்சரிய பாவத்துடன் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். தங்களுடைய உறுதியைத் தாங்களே நம்ப முடி



''ஏண்டா! நம்ப அனந்தசயனம் ஒரு கட்சி ஆரம்பித்தாரே! என்ன ஆச்சு அது?''
''படுத்துப் போச்சு!''

யாதவர்களைப் போல் அவர்கள் காணப் பட்டனர். சிறு பறவைகளின் கூச்சலைப்போல் கூட்டத்திலே வார்த்தைகள் வட்டமிட்டன.

தாங்கள் சொல்லுவதை நியாயமென்று சிங்களவர்களுக்கு உணர்த்துவதைப் போல் அவர்கள் தாழ்ந்த குரலிலே பேசினார்கள்.

''இந்தக் கொடுமையை இனியும் சகிப்ப தென்பது முடியாததாக இருந்தது. அதனாலேயே நாங்கள் திரண்டு வந்தோம்....''

''தமிழ் மக்களே! ஏமாற்றத்துக்கு இடம் கொடுத்து விடாதீர்கள்'' என்று கூட்டத்தில் அடிக்கடி சொல்லிக் கொண்டார்கள்.

சட்டென்று ஒரு சலசலப்பு ஏற்பட்டது. கண்ணுக்குப் புலப்படாத ஆயுதங்களால் தமிழ் மக்களின் கூட்டம் தாக்கப்பட்டதைப் போலிருந்தது. ஒரு கணம் அனைவருடைய குரலும் ஒடுங்கியது. ஆனாலும் கூட்டம் தயக்கமில்லாமல் முன்னேறிச் சென்றது.

தமிழ் மக்களைப் பார்த்துச் சிங்களவர்கள் துப்பாக்கியால் சுட்டனர். அங்கும் இங்கும் கூக்குரல்கள் கேட்டன. கூட்டத்தில் இருந்தவர்கள் காலடியில் பலர் மூர்ச்சையாகியும் அடிபட்டும் விழுந்து கிடந்தனர்.

மீண்டும் துப்பாக்கிகளின் கர்ஜனை கேட்டது. கூட்டம் பின்னே சாய்ந்தது. நூற்றுக் கணக்கானவர்களின் தொண்டையிலிருந்து உடலை நடுங்க வைக்கும் காட்டுமிராண்டித்தனமான கூச்சல் கிளம்பியது.

தமிழர்கள் திருப்பித் தாக்க ஆரம்பித்தனர். மிக ஆவேசத்துடன் கத்திகளாலும் கம்புகளாலும் தாக்கினர். சிங்களவர்களின் கூட்டம் சிதறிஓடத் தலைப்பட்டது. பீதியினால் குழப்பமடைந்து காற்றில் அடித்துச் செல்லப்படும் உலர்ந்த சருகுகளைப் போல் கண்மண் தெரியாமல் அவர்கள் ஓடி மறைந்தனர். நியாலனை என்ற இடத்தில் சிங்களவர்களைத் தமிழ் மக்கள் தடுத்து நிறுத்தி மட்டக்களப்புத் தமிழ் மக்களின் உயிர்களைக் காப்பாற்றினர். வெறி பிடித்த சிங்களக் குண்டர்களை முறியடித்து வெற்றி கொண்டனர். இந்தக் கலவரத்தில் எண்ணற்ற சிங்கள மக்களும், தமிழ் மக்களும் உயிர் துறந்தனர்.

தமிழ் மக்கள் அன்பு இதயம் படைத்தவர்கள் அல்லவா? காயமடைந்த சிங்கள மக்களுக்கு உதவியும் செய்தனர். அவர்களுடன் பேசவும் செய்தனர். கோபமாக அல்ல; வருத்தமும் அனுதாபமும் கலந்த குரலில். 'சத்தியம் நிலைக்கும்' என்ற நம்பிக்கை அவர்கள் குரலிலே தொனித்தது. எத்தகைய பாதகத்தை இந்தக் குண்டர்கள் இழைத்திருக்கிறார்கள் என்பதைச் சிங்களவர்களுக்கு உணர்த்த முடியும் என்ற நம்பிக்கைஅதில் தொனித்தது.

இந்தச் சம்பவத்துக்குப் பின்னர் மட்டக்களப்பில் ஊரடங்குச் சட்டம் பிறப்பிக்கப் பட்டது. இந்தச் சமயத்தில் உண்டான விண்புரளியில் ரத்தினபுரி போன்ற பல இடங்களில் சிங்கள மக்கள் மத்தியில் வாழ்ந்த தமிழ்க் குடும்பங்களின் வீடுகள், கடைகள் எல்லாம் சூறையாடப்பட்டன.

இலங்கை சர்க்கார் மிகப் பிரயாசைப்பட்டு இந்தக் கலவரங்களை அடக்கி ஒடுக்கினர். ஆனாலும் சிங்கள மக்களின் வெறி மட்டும் தணிந்தபாடாக இல்லை. அது உள்ளுக்குள் குமைந்து கொண்டேதான் இருந்தது.

*** *** ***

ஒரு நாள். பகல் பன்னிரண்டு மணி. வெண்ணிற மேகங்களால் ஆகாயம் மூடப்பட்டிருந்தது. அவ்வப்போது ஏதாவது இடைவெளியினூடே சூரியன் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். உலர்ந்த சருகுகளை அடித்துக்கொண்டு வருவது போல் காற்று மக்களைத் தெருவினூடே தள்ளிக் கொண்டு வந்தது. 'உஸ்'ஸென்ற ஓசையுடன் காற்றடித்தது. மட்டக்களப்பு தமிழ் மக்கள் அமைதியில்லாமல் வீதிகளில் நடமாடிக் கொண்டிருந்தனர்.

ஒரு வீட்டிலிருந்து ஒரு வாலிபன் வெளிப் பட்டான். அழகாக உடை உடுத்தியிருந்தான்.

கைகூப்பி வணங்கி, '' எங்கே போகிறாய்?'' என்று கேட்டார் அந்த வாலிபனுக்கு எதிரில் வந்த வயது முதிர்ந்த ஒரு பெரியவர்.

அந்த வாலிபனின் கம்பீரமான முகத்தில் இலேசான முறுவல் மலர்ந்தது.''எங்கே என்று தெரியவில்லையா? சிங்களவர்களிடமிருந்து தமிழ் மக்களைக் காப்பற்றத்தான் போகிறேன்'' என்றான் அந்த வாலிபன்.

''அன்றையதினம் நீங்கள் எல்லாம் காரைத்தீவுச் சாலையில் சிங்களவர்களைத் தடுத்து நிறுத்தி இருக்கா விட்டால் மட்டக்களப்பில் இன்றையதினம் தமிழ் மக்கள் நிம்மதியாகவே இருக்க முடியாது'' என்றார் பெரியவர்.

''என் போன்ற வாலிபனின் கடமையைத் தானே செய்தேன்?'' என்றான்.

நான்கு பேர் சவப்பெட்டி ஒன்றைத் தெரு வழியே தூக்கிச் சென்றனர். அப்பெட்டிக்கு முன்னும் பின்னும் ஏராளமான சிங்கள மக்கள் அணிவகுத்து வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் முகங்கள் எல்லாம் கல்லில் செதுக்கியது போல் உறுதியாக இருந்தன.

''யாரோ இறந்து விட்டார்கள் போல் இருக்கிறது'' என்றார் பெரியவர்.

''இல்லை; இதில் ஏதோ சூது இருக்கிறது. இவர்களைப் பார்த்தால் சவப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு போகிறவர்கள்போலில்லை.''

''சூதோ வாதோ! பிணம் எதிர்ப்பட்டால் நல்ல சகுனம் என்பார்கள். வா, போகலாம்!'' என்றார் பெரியவர்.

''இல்லை; தமிழ் மக்களுக்கு இந்தச் சவப் பெட்டி மூலம் பெரிய அபாயம் வரப் போகிறது. உடனே மக்கள் தயார்ப்படுத்தப்பட வேண்டும்'' என்று சொல்லிவிட்டு அங்கிருந்து வேகமாகச் சென்றான் வாலிபன்.

அந்த வாலிபன் சென்ற சற்று நேரத்துக்கெல்லாம் திடீர் என்று அங்குவந்த சிங்கள போலீஸ் படையினர் அந்தச் சவ ஊர்வலத்தை அங்கேயே தடுத்து நிறுத்தினார்கள்.

சவப்பெட்டியுடன் வந்தவர்கள் எல்லாம் "சவ ஊர்வலத்தைத் தடை செய்யலாமா?" என்று ஆவேசத்துடன் கேட்டனர்.

"பெட்டியில் இருப்பது உண்மையில் சவம் தானு?" என்றனர் போலீஸார்.

"ஆமாம்."

"நாங்கள் அதைப் பார்த்த பிறகுதான் மேலே ஊர்வலம் தொடரலாம்."

"சவப்பெட்டியை நடுவீதியில் வைத்துத் திறந்து பார்க்கக் கூடாது."

இந்த வாதத்தை யெல்லாம் பொருட்படுத்தாமல் சவப்பெட்டியைத் திறந்து பார்த்தனர் போலீஸார். என்ன ஆச்சரியம்! எல்லாம் துப்பாக்கிகள்; குண்டுகள் அடைத்த கைத்துப்பாக்கிகள். உடனே அந்தச் சவ ஊர்வலத்தினர் பலரைக் கைது செய்தனர். பலர் சிதறி ஓடிவிட்டனர். அன்றையதினம் சிங்களப் போலீஸ் அவ்வளவு கவனத்துடன் இல்லாமல் இருந்திருந்தால் எத்தனை தமிழ் மக்கள் உயிர் துறந்திருப்பார்களோ! இந்த நல்ல காரியத்தைச் செய்த சிங்கள சர்க்காரைப் பாராட்ட வேண்டியதுதான்!

பாராட்டவாவது! அதற்குத்தான் அவர்கள் இடம் வைத்துக் கொள்ளவில்லையே! கையும் மெய்யுமாக அகப்பட்ட சிங்கள குண்டர்களைச் சிலநாட்களுக்குப்பின் எவ்வித விசாரணையும் செய்யாமல் விட்டு விட்டனர்.

இதுபோன்று இன்னும் எத்தனை எத்தனையோ சம்பவங்கள் என்றார் மட்டக்களப்பு அன்பர் திரு நவம். அவர் கூறிய பயங்கரச் சம்பவங்கள் ஒவ்வொன்றும் சோகம் நிறைந்த பல சிறுகதைகள். அவை எல்லாவற்றையும் எடுத்துச் சொல்வதா யிருந்தால் அதுவே பெரும் பாரதமாகும். ஆகையால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். திரு நவம் கூறிய இந்தச் சம்பவங்களைக் கேட்டவுடன் எதிரில் தெரிந்த இடிந்துபோன கட்டடம் மிகப் பயங்கரமாகத் தோற்றமளித்தது.

நாங்கள் அங்கிருந்து மோட்டார் வண்டியை நோக்கித் திரும்பினோம். நவம் தமது இடது கையால் தலையைத் தடவிக்கொண்டு வலது கையை உயரத்தூக்கி ஓங்கி ஆட்டிக் கொண்டு நிமிர்ந்து நடந்தார்.

"சிங்களவர்களைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லையே! ரொம்ப சாதுக்களாகத் தானே இருக்கிறார்கள்?" என்றேன்.

"அவர்கள் ரொம்ப சாதுக்கள்தான். கிராமங்களில் இருக்கும் சிங்களவர்கள் ரொம்ப நல்லவர்கள். எல்லாம் இந்த அரசியல் வாதிகள் செய்யும் துவேஷப் பிரசாரத்தால் தான் இவ்வாறு சிங்கள மக்கள் வெறிபிடித்துத் தடுமாறுகிறார்கள்."

"அவர்களுக் குள்ளாவது ஒற்றுமையாக இருப்பார்களா? இல்லை...."

"தமிழ் மக்களை எதிர்ப்பதில் மட்டும் அவர்களுக்குள் ஒற்றுமைதான். மற்றப்படி.."

"அப்படி என்றால் ஒன்றும் புரியவில்லையே! அவர்களைப் பற்றிச் சற்று விவரமாகச் சொல்லுங்களேன், கேட்போம்" என்றேன்.

திரு நவம் சிங்களவர்களைப் பற்றியும் அவர்களுடைய அதிசயமான வாழ்க்கையைப் பற்றியும் சொல்லஆரம்பித்தார். (தொடரும்)

# Pan-Cake gives your beauty that exciting *plus* called glamour

IDA LUPINO
in RKO'S
"WHILE THE CITY SLEEPS"

the one and only

## PAN-CAKE*

MAKE-UP by

## MAX FACTOR

HOLLYWOOD

* Pan-Cake (trademark) means Max Factor Hollywood Cake Make-Up



*GLORIOUSLY, It Reveals The True Beauty Of Your Own Natural Colorings*

*BEWITCHINGLY, It Veils Your Complexion With The Soft, Alluring Velvet Finish That Only Pan-Cake Can Create*

Available at all Leading Cosmetic and General Stores

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA.




வோட்டுக் கேட்க வந்தவர் :— உங்கள் வீட்டில் இரண்டே வோட்டுத்தானு?

வாக்காளர் :—இப்பொழுது இரண்டு வோட்டுக்கள் தான்! இன்னும் இருபது வருஷங்



களுக்குப் பிறகு வாருங்கள். ஏராளமான வோட்டு நம் வீட்டில் கிடைக்கும்!



மாஜிஸ்திரேட் (கைதியிடம்) :— வாதாட நீ ஒரு வக்கீல் வைத்துக் கொள்வதுதானே?

கைதி :—அதைவிட எனக்கு இரண்டு சாட்சிகளுக்கு எசமான் ஏற்பாடு செய்து கொடுத்தால் நன்றுயிருக்கும்!



"என் வோட்டைக் குப்பையில் போட்டாலும் போடுவேன். ஒருநாளும் அவருக்குப் போடமாட்டேன்!"



"அப்படியானுல் அவருக்கே போடுங்கள்! இரண்டும் ஒன்று தான்!"



ஒரு பெண்மணி (பெருமையுடன்):—எங்கள் வீட்டுக்காரர் துணி சலவை செய்யும் ஒரு இயந்திரம் வாங்குவதாக இருக்கிறார்!

மற்றொரு பெண்மணி :—நீ அதிர்ஷ்டசாலி! என் கணவர் என்னையே ஒரு சலவை செய்யும் இயந்திரமாக நினைத்துக் கொண்டிருக்கிறார்!



கம்பெனி மானேஜர் (வேலைக்கு வந்தவரிடம்) :— ஆபீஸ் வேலைகளைத் திறமையாகக் கையாள உங்களுக்கு முடியுமா?

வேலைக்கு வந்தவர் :—தெரியாமல் இருந்தால், இதற்கு முன் இருந்த ஆபீசில், ஆபீஸ் நேரத்திலேயே இத்தனை பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுதி அவைகளுக்கு நான் பரிசுகள் வாங்கி யிருக்க முடியுமா?

வீட்டுக்காரர்:—அப்பப்பா! அந்தப் பூனை படுத்தின உபத்திரவம் தாங்க முடியாமல் ஒருநாள் என்ன பண்ணினேன், தெரியுமா? அதைப் பிடித்துக் கண்காணுத காட்டிலே கொண்டு போய் விட்டு விட்டேன்!

விருந்தினர்:-அப்படியா? ஆனுல் எனக்கு என்ன ஆயிற்று, தெரியுமோ? காட்டுக்குள்ளே போனவன் வழி தெரியாமல் திண்டாடிப் போய் விட்டேன்.

வீட்டுக்காரர்:—அடடா!

விருந்தினர் : — கடைசியிலே அந்தப் பூனையைப் பின் தொடர்ந்து வந்ததனுல்தான் நான் திரும்பி உங்கள் வீட்டுக்கு வர முடிந்தது!



"அதெல்லாம் வேண்டாம்! நீங்க இவர் பேச்சைக் கேளுங்க!"



"பேஷாகக் கேட்கிறேன். சொல்லுங்க!"

"இவர் ரேடியோவிலே பேசப்போகிறர், அதையல்லவா கேட்கச் சொல்கிறேன்!"



நண்பர்:—இப்பொழுது மணி என்ன ஸார்?

மற்றவர்:—நாளைக்குத்தான் கடிகாரம் வரப் போகிறது. இதே நேரத்திலே நாளைக்கு வந்து கேளுங்கள், சொல்கிறேன்!



"நான் தேர்தலில் ஜெயித்ததற்கு எல்லாரும் மாலையோடு வருகிறர்கள்; நீங்கள் சுண்ணும்பைக் கரைத்துக் கொண்டு வந்து கொடுக்கிறீர்களே! எதற்கு?"

"என் வீட்டுச் சுவரிலெல்லாம் எழுதிப் பாழாக்கி யிருக்கிறீர்களே, அதற்கெல்லாம் உடனே சுண்ணும்பு அடியுங்கள்! உம், சீக்கிரம் கிளம்புங்கள்!"



# நட்பின் பெருமை

வசுமதி ராமசாமி

அன்புமிக்க சுஜாதா,

'பெண்களிடையே உண்மையான சிநேகம் இருக்குமா?' என்று கேட்டிருக்கிறாய்?

கொஞ்ச காலத்துக்கு முன் வரையில் தோழிகள் என்றால் நாடகத்தில் அரச குமாரிகளுக்கு வரும் தோழிகள்தான் நினைவுக்கு வரும். அல்லது சாகுந்தலம் போன்ற மகா காவியங்களில் தான் தோழிகள் வருவார்கள். நம்மைப் போன்ற சாதாரணப் பெண்களுக்குத் தோழிகள் என்ற பதத்துக்கு இடமில்லை எனக் கருதுவோம்.

இன்றைய நிலை மாறி விட்டது. பெண்கள் சின்ன வட்டத்தில் அடுத்த வீடு, எதிர்த்த வீடு என்று மட்டும் பழக வில்லை. பெரிய சுற்றளவில் பழகுகிறோம்; பேசுகிறோம். ஒருவர் வீட்டுக்கு ஒருவர் போகிறோம். ஆனால் இன்றும் இரண்டு குடும்பத்தினர் ஒன்றாகப் பழகினால் அதைப் பற்றி வம்பாகப் பேசுவது மட்டும் நிற்கவில்லை. சற்று நிதானித்துப் பார்த்தால் அது பொறாமையால் ஏற்படுகிறது என்பது தெரியவரும். இன்றும் உண்மையான சிநேகம் இருப்பதே தவறு என்ற அடிப்படையான நோக்கமும் இருக்கிறது.

மதிப்புக்குரிய ஒரு அம்மாள் தங்களுடன் சிநேகமாகப் பழகும் ஒரு குடும்பத்தைப் பற்றித் தவறாகப் பேசுவதைச் சொல்லி வருத்தப்பட்டார். இரு குடும்பங்களும் மதிப்பான குடும்பங்கள். உண்மைச் சிநேகிதத்துக்குப் பாத்திரமானவர்கள். இருந்தும் என்ன செய்வது? சிநேகம் என்பது அவ்வளவு முக்கியமானதா? உறவினர்களை விடச் சிநேகிதர்கள் உயர்ந்தவர்களா எனக் கேள்வி எழலாம். ஒரு கல்யாண அழைப்பு அனுப்புகிறோம். பந்து மித்திரர்கள் எனக் குறிக்கிறோம். நம் உயிருக்குச் சமானமான அல்லது உயிரை விட உயர்ந்தவர்களென உற்றவர்களை மதிக்கின்றோம். அடுத்தபடி உறவினர்கள், அவர்களுடன் கிட்டத்தட்ட சிநேகிதர்களையும் மதிக்கிறோம். எனவே, சிநேகம் என்பது வாழ்க்கையில் முக்கியமான அம்சம் தான். ஆனால் அவைகளில் சில தர்மங்கள் இருக்கின்றன.



நகைகளோ, புடவைகளோ, வாங்கிக் கொள்வதற்காக ஏற்படும் சிநேகம் உண்மைச் சிநேகம் அல்ல. நம் நகை, புடவைகளைப் பார்க்க நம் வீட்டுக்குச் சில நண்பர்கள் அடிக்கடி வரலாம். ஆனால் அந்த நிலை சீக்கிரமே மாறிவிடும். நம் நிலைக்கு ஏற்ப நம் குணத்துக்கு ஒற்றுமையாய்ப் பண்பட்ட சிநேகிதர்கள்தான் தேவை. நமக்கும், அவர்களுக்கும் மனம் பிடித்துப் பழகுவது தான் உண்மைச் சிநேகிதம். கஷ்ட சுகங்களில் ஒருவருக்கொருவர் பங்கெடுத்துக் கொள்வது தான் உண்மைச் சிநேகம். கஷ்ட காலத்தில் பராமுகமாகவோ அலட்சியமாக இருப்பதோ சிநேக தர்மத்துக்கு உகந்ததல்ல.

உண்மைச் சிநேகிதர்களுக்காக உழைக்கிறோம். அவர்கள் வீட்டுக் கல்யாணங்களில் பெரும் பங்கெடுத்துக் கொண்டு பாடுபடுகிறோம். அதற்குக் கலகமாகப் பேசச் சில புல்லுருவிகள் இருப்பார்கள். 'இவளுக்கு ஏதோ லாபம் இருக்கிறது. அதனால் தான் செய்கிறாள்' என்பார்கள். இவைகளையெல்லாம் நாம் காதில் ஏற்றுக் கொள்ள வேண்டிய அவசியமில்லை.

முதலில் நம்முடைய சிநேகிதத்துக்குத் தகுதியான தோழியா என அறிந்து கொள்வது முக்கியம். அப்படி ஓரளவு பழகி அன்பு வளர்ந்த பின் மூன்றாவது பெண்ணுடைய கலகத்தால் நம் சிநேகிதி மாறலாம். நாம் அதற்காகக் கவலைப் பட வேண்டாம். தகுதி வாய்ந்த நம்முடைய சிநேகிதியிடம் நாம் ஒரே மாதிரி அன்புடன் இருந்து விடுவோம். சிறிது காலத்தில் கலகம் செய்யும் பெண்ணின் தன்மையைச் சிநேகிதி உணர்ந்து விடுவாள். எல்லாம் சரியாகி விடும். மித்திர பேதம் செய்பவர்கள் சமூகத்தில் நல்ல கௌரவமான நிலையைப் பெறமாட்டார்கள்.

பம்பாயில் எனக்குத் தெரிந்த இரு குடும்பங்கள் முப்பத்தைந்து வருஷங்களாகச் சிநேகமாக இருந்து வருகிறார்கள். அத்துடன் மட்டுமல்ல, நாளடைவில் சம்பந்தங்கள் செய்து கொண்டு இன்றும் அன்புடன் இருந்து வருகிறார்கள். இதைப் பார்க்கச் சந்தோஷமாக இருக்கிறது.

சிநேக தர்மத்தில் இன்னொன்று முக்கியம். அன்புடன் நெருங்கிப் பழகும் சிநேகிதிகள் ஒன்றிரண்டுபேர்களே போதுமானவர்கள். அதிகமானால் போட்டி மனப்பான்மையும், சச்சரவும் ஏற்படுகின்றன.

கடைசியாக, சுஜாதா! நீ ஒரு பெண்ணுக்கு உண்மைச் சிநேகிதியாக இருக்க விரும்பினால், அல்லது உனக்கு ஒரு உண்மைச் சிநேகிதியை அடைய நினைத்தால் உண்மை அன்பையும், உயர்ந்த பண்பையும் வளர்த்துக் கொண்டு வா.

இப்படிக்கு,
பூமாதேவி

# ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

ஆசைக் குழந்தைகளுக்கு

அருமைப் பவுடர்




**இலவச புத்தகம்:** ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது தமிழ் பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிட்டு எழுதவும்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், பி.ஓ. பாக்ஸ் 1976, டிபார்ட்மெண்ட் 36 B பம்பாய்




காற்றுக் குதிரைகள் ஒன்று, இரண்டா, நூற்றுக் கணக்கில், வானம் என்னும் நீண்ட பசும்புல் வெளியில் வட்டமிட்டுத் திரிகின்றன. பதறாமல், ஒரே சீரான கதியில், அவை செல்கின்றன. இருந்தாலும், என்ன வேகம், என்ன வேகம்! சில சமயம், இடி என்னும் தேர்ப் பாகன், தன்னுடைய தேரிலே இக் குதிரைகளைப் பூட்டி, விரட்டுகிறான். வீறிட்டு அலறிக் கொண்டு, வானவெளி அதிர, தேரை இழுத்துப் பாய்கின்றன காற்றுக் குதிரைகள். அவற்றின் காலடி பட்ட இடமெல்லாம், மின்னல் சிதறுகிறது, வானமெல்லாம் சேறுகிறது.

இறைவனிடமிருந்து தப்பி ஓட முயலும் உயிராகத் தன்னைப் பற்றிப் பேசும் பிரான்சிஸ் தாம்ஸன், இந்தக் காற்றுக் குதிரையின் மேல் ஏறி, தப்ப முயன்றதையும் கடைசியில் தோல்வியுற்றதையும் சொல்கிறான்:

விரைந்து சென்ற பொருள்களிடம்
வேகம் இரந்தேன்: வெளி எங்கும்
துருவும் காற்றின் பிடரியினைத்
தொத்திப் பறந்தேன்: பயன் இல்லை.
பரந்த வானப் பரப்பென்னும்
பசும்புல் வெளியில் அனுங்காமல்
விரைந்து சென்றன துரகமிவை:
வீறிட்டு அலறி இடி விரட்டப்
பின்னிப் பாய்ந்தன: பாயும் அடி
பதறி உதைத்த இடமெல்லாம்
மின்னற்சேறு சிதறிட, வான்
முகட்டில் இடியின்தேர் உருட்டி
முன்னே சாடின: இவை ஏறி
முடுகி விரைந்தேன் எனினும் அவன்
அன்பை முந்திட வலியிலை என்
அச்சம் ஒளித்திட வழி இல்லை.

[இரந்தேன் - பிச்சை கேட்டேன். அனுங்காமல் - வாட்டமின்மையல். துருவும் - குடைந்து செல்லும். துரகம் - குதிரை. வலியிலை - வலிமை இல்லை.]

தொடர்ந்து வரும் இறைவன் என்ற வேட்டை நாயின் காலடிச் சத்தம் கேட்கிறது. அந்தச் சத்தத்தையும் விஞ்சி, குரல் ஒன்று முழங்குகிறது:

கலக்கமில்லா அயர்வில்லாக்
கதியில் அமைந்து நேர் அதிர
விலக்க மாகா விதியேயாய்
வீறுகொண்டு தொடரும் அடித்
தலத்தில் எழுந்த பெருந்தமரம்
தணியக் குரலொன்று இவைபேசும்:
'விலக்கி என்னை ஒதுக்கிவிடில்
விலக உனக்கிங்கு இடமேதோ?'

[தமரம் - பேரொலி.]

இப்படியாக, இறைவன் ஆடுகின்ற ஆன்ம வேட்டை ஓயாமல் நடைபெறுகிறது. உயிரோ, அங்கும் இங்கும் அலைந்து, தப்பி ஓட வழி காணாமல் மருள்கிறது.

இயற்கையின் அழகு, உயிருக்கு அடைக்கலம் அளிக்கவில்லை. இயற்கையின் சக்திகள், எவ்வளவோ வேகம் உடையவைதாம் என்றாலும், இறைவனுடைய வேகத்திலிருந்து தப்புவதற்கு, உயிருக்கு வலிமை தரவில்லை. மனித உறவுகள் என்ற இதயச் சாளரங்களோ ஆன்மாவுக்கு உள்ளே நுழைய இடம் தராமல் அடைத்துக் கொண்டன. என்னதான் செய்வது? இன்னொரு முறை மனிதத் தொடர்புகளை நோக்கி, புகலிடம் தேடித் திரும்புகிறது உயிர். மனித உறவுகளில் மிகப் புனிதமானது குழந்தைகளிடம் நமக்கு உள்ள அன்பு. இந்த அன்பிலே முழுநிறைவு காணலாமா என்று பார்க்கிறான் கவிஞன்:

மக்கள் முகத்திலே ஏதேதுவோ நாடி
அலைந்தேனே
அதைக் கைவிட்டேன். ஆனால்...
சிறு குழந்தைகளின் விழியிலே ஏதோ
பேசுகிறதே. என்ன அது?
என் நாட்டத்திற்குப் பதிலா?

என் வேதனைக்கு மருந்தா?
ஆம் என எண்ணினேன்.
ஆசையோடு திரும்பினேன்.
மதலையர் இளம் விழிகளில்
என் தாபத்திற்கு மாற்று உதயமாகி,
சரேலென, புதிய சோபையாக மலர்ந்தது.
பிழைத்தேன் என்று திரும்பினேன். ஆனால்...
குழந்தைகளைக் காணோம்.
காலதேவதை அவற்றைப் பற்றிச் சென்று விட்டது.

மறுபடியும் இயற்கைப் பொருள்களை நோக்கித் திரும்புகிறான் கவிஞன். அவற்றின் ஆயிரம் ஆயிரம் இரகசியங்களைத் தெரிந்து கொள்கிறான். மனிதர்களோடு உறவாடுவது போல இவற்றோடு பழகுகிறான்:

இயற்கை இரகசியங்கள் என்ற கதவின் தாளைத் திறந்தேன்.
கணந்தோறும் புதுப்பொலிவு பூண்ட வானத்தின் முகத்தில்
அலைஅலையாகப் புரண்ட பற்பல குறிப்பின்
பொருளெலாம் தெளிந்தேன்.
வெறிகொண்ட கடல் குமுறிக் கனைத்தது.
அதன் பெருமூச்சில் வெண்ணுரை திரண்டது.
இந் நுரையிலிருந்து மேகங்கள் எழுந்தன.
எவ்வாறு என்று அறிந்தேன்
பிறக்கும் ஒவ்வொன்றோடும் பிறந்தேன்,
இறக்கும் ஒவ்வொன்றோடும் இறந்தேன்.
அவற்றைக் கொண்டே என் மனநிலைகளை வனைந்தேன்.
அவற்றோடு களித்தேன்.
அவற்றோடு கவன்றேன்.
பகற்பொழுதின் புனித சமாதியைச் சுற்றி
மினுமினுக்கும் தீபங்களை ஏற்றி வைத்துத் தொழுதது அந்தி.
அந்தியோடு அந்தியாய்ச் சோர்ந்திருந்தேன்.
காலையின் விழியில் நகைத்துக் களித்தேன்.
பருவகாலம் ஒவ்வொன்றோடும் பூத்தேன். புழுங்கினேன்.

..................................

பயனில்லை, பயனில்லை. என்னசெய்தும் என்ன?
என் பேச்சோ சொல், இயற்கையின் பேச்சோ மோனம்.
ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ள வழி ஏது?

..................................

இறைவனுடைய தளராத காலடி ஓசை நெருங்குகிறது. அந்தப் பேரொலியை வென்று, குரலொன்று பேசுகிறது: 'என் குறையைப் போக்காமல் ஓடுகிறாய். ஓடும் உனக்கு நிறைவு ஏது?' இது கவிஞன் காதில் விழுகிறது. இனி ஓட இடமில்லை, வழியில்லை என்று உணர்கிறான். பாடுகிறான்:

'இறைவனே, ஓங்கிய உன் அன்புக்கரம்
விழுவதை எதிர்நோக்கிப் பாதுகாப்பின்றி
நிற்கிறேன், திகம்பரமாய்.
என் கவசத்தையெல்லாம் பிளந்தெறிந்து
விட்டாய், அணு அணுவாய்.
என்னைக் கீழே வீழ்த்தி, மண்டியிட வைத்து விட்டாய்.
எனக்குப் பாதுகாப்பு ஏது? இல்லை. ஒன்றுமே இல்லை.

..................................

இளமை முறுக்கின் வெறியில்,
காலத் தூண்களைப் பிடித்து அசைத்தேன்.
வாழ்க்கை என்னும் மண்டபம் இடிந்து சரிந்தது
என்மேலேயே சரிந்து விழுந்தது.
காலமேட்டுப் புழுதியின் நடுவிலே,
புழுதிக் கறை படிந்து நிற்கிறேன்.
மேட்டின்கீழ் அடிபட்டு நசுங்கி,
என் இளமை உருக்குலைந்து கிடக்கிறது.
என் வாழ்நாள் காட்டுச் சுள்ளியைப்போல்
படபடவென்று வெடித்து, கரிந்து, புகைந்து போயிற்று....'

..................................

பேசுகின்றவன் கவிஞன். அவனுக்கு, வாழ்க்கை என்றால், கவி புனைவதும், அழகிய கனவு காண்பதும், இசை பாடுவதுந்தானே! இப்போது அவை அவனைக் கைவிட்டு விடுகின்றன:

கனவு, காண்போனைத் துறந்தது.
வீணை, மீட்டுவோனைக் கைவிட்டது.

கற்பனைச் சங்கிலியின் மலர் வளையிலே
இந்த உலகைக் கோத்துத் தொங்கவிட்டு,

என் கையில் கடகமாக அணிந்தேன்
கற்பனைச் சங்கிலி அறுந்தது.

துயரங்களின் மாளாச்சுமை அழுத்தும்
இவ்வுலகைத் தாங்க அதற்குவலிமையில்லை.

எல்லாம் ஒழிந்தன. தன்னுடையது என்று சொல்லிக் கொள்ள, ஒன்றுமே இல்லை என்பதைக் கவிஞன் உணர்கிறான். இறைவனைக் கேட்கிறான்:

இறைவனே, உன் அன்பு என்ன,
அது தெய்வ மலர்க் கொடிதான்.

ஆயினும், அது என்ன. வேறொரு மலரும்
வளர விடாத களைப் பூண்டா?

அகண்ட சித்திரம் அமைக்கும் கலைஞனே
என்னை - இந்த மரக் கட்டையை—

எரித்துக் கரித்துண்டாக்கிய பிறகே,
அதைக்கொண்டு, சித்திரம் வரைய
வேண்டுமா?

* * *

மனித இதயம் என்ற வயலில்
நல்ல விளைவு காண எண்ணுகிறாய்.

அதற்காக, சாவு என்னும் அழுகிய எருவிட்டு
அதைக் கறைப்படுத்த வேண்டுமா?

உயிரைத் தொடர்ந்து வரும் இறைவன் அதை நெருங்கி விட்டான். உயிரைச் சுற்றி, அவன் குரல் கடல் போல் முழங்குகிறது:

பேதையே, உன் உலகம் உடைந்துவிட்டதா,
அணு அணுவாகச் சிதைந்து விட்டதா?

என்னிடமிருந்து ஓடினாயே,
உன்னைத் துறந்து எல்லாப் பொருள்களும்
ஓடிவிடும்,

என்பதை உணர்ந்தாயா?
என்ன விசித்திரமான பொருள் நீ!

ஒன்றும் இல்லாதவன்,
உன்னிடம் தனியாக அன்புகாட்ட
யார்தான் முன் வருவார்?

ஒன்றும் இல்லாதவர்க்குப்
பெருமை தருவது நான் அல்லவா?

இதை உணர வில்லையே நீ!

மனிதர் உறவை நாடினாய்:

மனிதர் அன்பைத் தேடினாய்:
பெறுவதற்கு உன்னிடம் தகுதி ஏது?

எந்த அன்பைப் பெறுவதற்கும்
உன்னிடம் தகுதி இல்லை என்பதை நீ
உணரவில்லையே!

உனக்கு, ஒன்றுமற்ற ஏழை உனக்கு,
அன்புகாட்ட யார் வருவார்,
என்னைத் தவிர, என் ஒருவனைத் தவிர?
வா....!

<u>அருள்வாக்கு</u>

நாம் மிகவும் பாபம் பண்ணியிருக்கிறோம் என்று பயப்படக்கூடாது. நம்மைப் போல் இருந்தவர்கள் எவ்வளவோ பேர் பக்தர்களாகி யிருக்கிறார்கள். நம்மைவிட மகா பாபிகளானவர்கள் கூட நல்ல ஸ்திதிக்கு வந்திருக்கிறார்கள். பாபிகளை ரக்ஷிப்பதனால்தான் ஈச்வரனுக்குப் பெருமை ஏற்படுகிறது. அதனால் நாம் தைரியமாக இருக்க வேண்டும்.

நாம் பாபம் செய்துவிட்டோம் என்று நினைத்து அழக்கூடாது. 'நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபடச் செய்கிறேன்; அதனால் நீ அதைரியப் படாதே; அழாதே!' என்று பகவான் சொல்கிறார். [கீதை 18-66]

— ஸ்ரீ சங்கராச்சாரியார்

உன்னிடமிருந்து பொருளை எல்லாம்
பறித்தேன்.
எதற்காக? உன்னை வருத்தவா? இல்லை.
என் கையில் அவற்றை நீ பெறவேண்டும்
என்பதற்காக...

வா, எழுந்திரு!
இழந்து விட்டோம் என்று குழந்தையைப்
போல் நீ கருதும்
அனைத்தையும் உனக்காகச் சேமித்து
வைத்திருக்கிறேன், வீட்டிலே.
வா, என் கையைப் பிடித்துக் கொள்.
எழுந்திரு, வா, என்னோடு வா!'

அன்பினால், உயிரை விடாமல் தொடர்ந்துவந்த இறைவன், இப்போது அதைப் பிடித்து விட்டான். அந்த அன்பின் தன்மையை உணராமல், வெருண்டு ஓடிய உயிர், இப்போது அவனுடைய அருட்கரத்தின் நிழலில் நிற்கிறது. அது ஓடிய இடமெல்லாம் கூடவே ஓடி, அதைத் தடுத்து நிறுத்தி ஆட்கொண்டு விட்டான் இறைவன். இவ்வுலகப் பொருள்களை நம்பி, இந்த உலக வாழ்க்கையிலேயே நிறைவு கண்டு விடலாம் என்று எண்ணிய உயிர், கடைசியில் தோற்றது. இறைவனுடைய பேரன்பின் திறத்தை இதுவெனத் தெரிந்தும், அதில் தன்னைக் கரைத்துக் கொள்ளத் தயங்கி, இந்த உலகை நோக்கித் திரும்பிய உயிர், இப்போது வீடு நோக்கித் திருப்பப் பெற்றது. எதையோ இழந்து விட்டோம், இழந்து விடுவோம் என்று கலங்கிய அது, இப்போது இறைவன் கையைப் பிடித்து எல்லாவற்றையும் பெற, வீட்டை நோக்கி நடக்கிறது.

பிரான்சிஸ் தாம்ஸன் என்ற ஆங்கிலக் கவிஞன் எழுதிய 'ஆன்ம வேட்டை' என்ற பாடலின் முடிவு இது. (தொடரும்)



கொழும்பு ஸ்ரீ எம். எஸ். சௌரி ராஜன் குமாரி சௌ. ஜலஜாவுக்கும் திருவனந்தபுரம் ஸ்ரீ வி. சங்கர நாராயணய்யர் குமாரர் சிரஞ்சீவி எஸ். வெங்கிட்டராமனன் I. A. S. க்கும் (Under Secretary, Finance, Govt. of Madras) சென்ற ஜனவரி 17ம் தேதி அன்று கும்பகோணத்தில் திருமணம் அதிவிமரிசையாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்!

# மாலவல்லியின் தியாகம்

முன் கதை



பெருமை பொருந்திய சோழ சாம்ராஜ்யம் கரிகாலன், நலங்கிள்ளி முதலிய பேரரசர்கள் பெருமையுடன் ஆண்ட பின் நிலைகுலைந்து, தாழ்வுற்ற நிலைக்கு வருகிறது. காஞ்சியிலிருந்து பல்லவப் பேரரசும் மதுரையிலிருந்து பாண்டியப் பேரரசும் சாம்ராஜ்ய ஆசை கொண்டு போராடும் காலம். இந்நிலையில் இடையே இருந்த சோழநாடு பலவித இன்னல்களுக்கு உள்ளாகிறது.

சோழநாட்டு மக்கள் தாங்கள் அடையும் இன்னல்களுக்கிடையே மறுபடியும் நாட்டில் சோழ சாம்ராஜ்யம் ஏற்பட்டால்தான் நாடு நலமடையும் என்பதை உணர்கிறார்கள். ஒரு புறம் அரசியல் போராட்டம், ஒருபுறம் மதப் போராட்டக் குழப்பமுமாயிருக்கும் வேளையில் நாட்டு நலனை எண்ணி மறுபடியும் சோழ சாம்ராஜ்யம் ஏற்பட வேண்டுமென்பதற்காக முயற்சி செய்யும் வீரவாலிபர்களும் தோன்றுகிறார்கள்.

சோழ மன்னர்களின் தலைநகராக ஒரு காலத்தில் விளங்கிய காவிரிப்பூம்பட்டினம் என்னும் பெருமை பொருந்திய நகரில் கதை ஆரம்பமாகிறது. பூதுகன் என்றொரு நாஸ்திக வாதி. வாலிபன். புரட்சிகரமான சிந்தனையுள்ளவன். நெஞ்சகத்தில் மறுபடியும் நாட்டிலே சோழ அரசு நிலவ வேண்டும் என்ற எண்ணம் கொண்டவன். காவிரிப்பூம் பட்டினத்துக் கடை வீதியில் வேடிக்கை பார்த்தவண்ணம் வருகிறான். அங்கொரு வாலிபன் தன் காதலிக்கு முத்துச்சரம் வாங்கிக் கொடுக்கத் தயங்குகிறான். பூதுகன் உலகில் இன்ப வாழ்க்கை வாழவேண்டியதை அவனுக்கு உபதேசம் செய்யும்போது அந்த வாலிபனும் தாக்கப்படுகிறான்.

பொறுமையும் பெருந்தன்மையும் கொண்டு பூதுகன் தன்னைத் தாக்கிய வாலிபனுக்குச் சில எச்சரிக்கைகள் செய்து விட்டுப் போகிறான். அவன் சிறிது தூரம் சென்றதும் ஒரு பிரபு இரு யவன நங்கைகளை விலைக்கு வாங்கத் தயங்கியபோது 'உலகில் இன்பம் அனுபவிக்கவே பிறந்தோம்' என்று கூறி அவர் தயக்கத்தைப் போக்குகிறான். பிறகு பூதுகன் கடற்கரையை நோக்கிச் செல்கிறான்.

பூதுகன் கடற்கரைப் பக்கம் வரும்போது பெருமழை பிடித்துக் கொள்கிறது. அவன் மழைக்குத் தப்புவதற்காகக் கடற்கரைக்குச் சமீபமாக உள்ள சம்பாபதிவன புத்த விஹாரத்துக்குச் சென்று ஒதுங்குகிறான்.

புத்த விஹாரத்தில் பூஜை நேரம். பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் புத்த பெருமானின் சிலைக்கு மலர் அர்ப்பணித்து வணங்குகின்றனர். அச் சமயத்தில் இளம் வயதுடைய ஒரு பிக்ஷுணி பகவானுக்கு மலர் சமர்ப்பிக்கப் போகும்போது அவள் ஏதோ பெரும் குற்றம் செய்தவள் — தகாதவள் என்று சொல்லி ஒரு பௌத்த பிக்ஷு அவளைத் தடுக்கிறார். தலைமை பிக்ஷுவாக இருக்கும் அக்கமகாதேரர். அந்த பிக்ஷுவைச் சமாதானம் செய்து அந்த பிக்ஷுணியை மலர் சமர்ப்பிக்கச் செய்கிறார். இவைகளை எல்லாம் மறைவிலிருந்து பூதுகன் கவனிக்கிறான்.

அங்கு பிரார்த்தனை முடிந்தபின் பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் கலைந்து விடுகின்றனர். ஆனால் ஒரு பிக்ஷு மாத்திரம் தனியே நின்று கொண்டிருக்க, பூதுகன் அவரை இன்னாரென்று தெரிந்து கொண்டு அவரிடம் நெருங்கிப் பேசுகிறான். அந்த பிக்ஷு தஞ்சையை ஆளும் மாறன் முத்தரையன் என்னும் அரசனின் சேனாபதியாக இருந்த கலங்கமாலரையர். மறுபடியும் நாட்டில் சோழ சாம்ராஜ்யம் ஏற்படாத வண்ணம் சூழ்ச்சி செய்பவர். பூதுகன் அவரிடம் நெருங்கிப் பேசி அவரை வெளியே அழைத்துக் கொண்டு வந்து அவ

கி. ரா. கோபாலன்

ருடைய அபிப்பிராயத்தை அனுசரித்தவன் போல்பேசி அவரிடமிருந்து பல உண்மைகளைத் தெரிந்து கொள்ளப் பிரயாசைப்படுகிறான்.

இந்தச் சமயத்தில் அந்த புத்த விஹாரத்திலிருந்து அன்று மாலை எந்தப் பெண் புத்த பகவானுக்கு மலர் அர்ப்பணிக்க அருகதை வந்தவள் என்று சொல்லப்பட்டாளோ, அந்தப் பெண் எங்கோ போவதைப் பார்க்கிறார்கள். அந்தப் பெண்ணைத் தொடர்ந்து அன்று மாலை அந்தப் பெண் மீது குற்றம் சுமத்திய பிக்ஷுவும் போகிறார். இதைக் கண்டு ஆச்சரியமடைந்த பூதுகன் அவர்களைப் பின் தொடர்ந்து செல்கிறான். அந்த இளம் பிக்ஷுணி கடற்கரை,மருவூர்ப்பாக்கம் முதலிய இடங்களைத் தாண்டி, பட்டினப்பாக்கத்தில் இசைக் கணிகையர்களும், நாட்டியக் கணிகையர்களும் வசிக்கும் வீதிக்கு வருகிறாள். அவ் வீதியில் அந்த பிக்ஷுணி ஒரு வீட்டில் நுழைவதைக் கண்டு பூதுகன் ஆச்சரியப்படுகிறான். அந்த பிக்ஷுணியைத் தொடர்ந்து வந்த பிக்ஷு அந்த வீட்டுக்குள் செல்ல முடியாமல் நிற்கும் போது பூதுகன் வந்து அவருக்குக் கேலியாகப் பணிந்த உபதேசங்களைச் செய்து அனுப்பி விட்டு அந்த வீட்டுக்குள் செல்கிறான்.

பூதுகன் எதிர்பாராத விதமாக அவ்வீட்டுக் கூடத்தில் ஒரு அழகான பெண் நாட்டியமாடவும், பிக்ஷுணிக் கோலத்திலிருந்த பெண் அவள் நாட்டியத்துக்குத் தக்க வண்ணம் வீணையை மீட்டிப் பாடிக் கொண்டிருப்பதையும் பார்க்கிறான். நாட்டியம் ஆடும் பெண் 'வைகைமாலை'; பூதுகனின் காதலி. அவள் பூதுகனைக் கண்டதும் தன் நாட்டியத்தை நிறுத்திக் கொண்டு அவனோடு தனித்து வந்து பேசுகிறாள். பூதுகன் அந்த இளம் வயதுள்ள பிக்ஷுணிக்கும் அவளுக்கும் ஏற்பட்டுள்ள நட்பு பற்றி விசாரிக்கிறான். அவள் மாலவல்லி என்னும் அந்த பிக்ஷுணியைப் பற்றிச் சொல்கிறாள். பூதுகன் அந்தப் பிக்ஷுணியைப் பற்றித் தனக்கு ஏற்பட்டுள்ள சந்தேகத்தைச் சொல்கிறான். இந் நிலையில் அந்த மாலவல்லி என்னும் பிக்ஷுணி விடைபெற்றுக் கொண்டு செல்கிறாள்.

பூதுகனிடமிருந்து மாலவல்லிக்கு எதிரியாக ஒரு பௌத்த பிக்ஷு அவளைக் கண்காணிக்கிறான் என்பதை அறிந்து கொண்ட வைகைமாலை அந்த நடுநிசி வேளையில் தன் தோழியாகிய மாலவல்லிக்கு ஏதேனும் ஆபத்து ஏற்படப் போகிறது என்று சொல்லிப் பூதுகனை அனுப்புகிறாள். பூதுகன் வைகைமாலையின் வார்த்தையைத் தட்ட முடியாதவனாய்க் கிளம்பிக் கடற்கரைப் பக்கம் வருகிறான். அப்போது கடற்கரை நிலவொளியில் புத்த பிக்ஷுணியாகிய மாலவல்லி ஒரு அழகான வாலிபனுடன் அமர்ந்து சல்லாபமாகப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்துத் திகைக்கிறான்.

மாலவல்லி ஒரு அழகான வாலிபனோடு காதல் கொண்டிருக்கிறாள் என்று எண்ணிய போது, திடீரென்று புத்தபிக்ஷு வேடத்தில் இருந்த கலங்கமாலரையர் அவன் மீது பாய்ந்து தாக்கவே, பூதுகன் அவரைத் தூக்கிக் கடலில் பல தடவைகள் எறிகிறான். இந்தச் சமயம் மாலவல்லியோடு பேசிக்கொண்டிருந்த வீரவிடங்கன் என்னும் வாலிபன் வந்து பூதுகனைத் தாக்குகிறான். கடைசியில் கலங்கமாலரையரின் கபட எண்ணங்களை அறிந்து கொண்ட வீரவிடங்கனும் கலங்கமாலரையரைக் கண்டித்து மன்னித்து அனுப்புகிறான்.

## அத்தியாயம் 11

# ரவிதாசனின் கொலை

**வீ**ரவிடங்கனும் மாலவல்லியும் மரத்தடியிலிருந்து விடைபெற்றுச் சென்றதும், பூதுகன் வைகைமாலையின் வீடு நோக்கி நடந்தான். அவன் மனத்தில் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் எழுந்தன. அவன் எதிர்பாராத வண்ணம் அன்று நடந்த காட்சிகள் அவன் மனத்தை மிகவும் சிந்திக்க வைத்தன. வைகைமாலை வீட்டுக்கு வருவது போல் புத்த விஹாரத்தை விட்டு வெளிவரும் மாலவல்லி, இடை வழியில் தன் காதலனைச் சந்திப்பது எதிர்பாராத ஒரு நிகழ்ச்சியாகத்தான் இருந்தது.

அதோடு மட்டுமல்ல; அன்று மாலை புத்த விஹாரத்தில் தன்னோடு மிகவும் அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருந்த கலங்கமாலரையர் அன்று இரவு வேளையில் எதிர்பாராத வண்ணம் தன் மீது திடீரென்று பாய்ந்து கொல்ல எத்தனித்ததும் அவனுக்குச் சிறிது வியப்பைத் தான் அளித்தது. அது மாத்திரமல்ல; மாலவல்லியின் காதலன் வீரவிடங்கன் தன்னை ஒரு சாதாரணப் போர்வீரன் என்று சொல்லிக் கொண்டதையும் அவனால் நம்ப முடியவில்லை.



"என்னங்க! கண்ணெல்லாம் சிவந்திருக்கே?"

"இரவு முழுதும் தூங்க முடியவில்லே. ஸார்! நம்ம வீட்டுக்குப் பக்கத்திலே தேர்தல் கூட்டத்திலே பேசுறவங்க எல்லாரும் 'தமிழா! தூங்காதே!' என்று அடிக்கடி கத்திக் கொண்டே இருந்தாங்க!"

அவனுடைய கம்பீரமான உருவமும், அழகும் அவன் சவாரி செய்யும் குதிரையின் லட்சணமும் அவனை ஒரு சாதாரண வீரன் என்று மதிக்கக் கூடிய நிலையில் இல்லை. கங்கபாடியைச் சேர்ந்தவனா அல்லது வேறு நாட்டைச் சேர்ந்தவனா என்ற கவலை அவனுக்கு இல்லை. அவன் சாதாரண வாலிபன் அல்ல என்பது மாத்திரம் அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. 'மாலவல்லி, பிக்ஷுணிக் கோலம் பூண்டு திரிவதுபோல் அவனும் ஏதோ ஒரு காரணத்துக்காகத் தன் பெயரை மாற்றி அமைத்துக் கொண்டிருக்கிறான்' என்று அவன் திடமாக நம்பினான். ஆனால் அவனுக்கு ஒரு உண்மை விளங்கி விட்டது. அவன் ஜைன மதத்துக்கு ஆதரவாக நின்று தன் காதலி மாலவல்லியினிடமே தர்க்கம் செய்யத் தொடங்கியதிலிருந்து அவன் ஜைன சமயத்தைச் சேர்ந்தவன் தான் எனத் திடமாக நம்பினான். கங்கை குல மன்னர்களும், கங்க நாட்டு மக்களும் ஜைன சமயத்தைச் சேர்ந்தவர்கள் என்பது அவனுக்குத் தெரியும். மிகவும் கம்பீரமாக விளங்கும் வீரவிடங்கன் கங்கை குல அரச பரம்பரையைச் சேர்ந்தவனாக இருப்பானோ என்ற சந்தேகம் வேறு அவனுக்கு ஏற்பட்டது. நிச்சயம் அவன் ஒரு சாதாரணப் போர் வீரனல்ல என்ற முடிவுக்குத்தான் அவன் வந்தான்.

'கலங்கமாலரையன் ஏன் கடற்கரைக்கு இந்தச் சமயத்தில் வந்தான்' என்ற குழப்பம் வேறு அவனுக்கு ஏற்பட்டது. மாலவல்லி புத்த விஹாரத்தை விட்டுக் கிளம்பியபோது அவளைப் பற்றிய விவரம் தனக்கு ஒன்றும் தெரியாது போலத் தன்னிடம் பேசிய கலங்கமாலரையன் அதற்கு முன்பே அவளைப் பற்றி ஏதோ சில விவரங்கள் அறிந்து அவளை உளவு பார்த்துக் கொண்டு வந்திருக்கிறான் என்றும் பூதுகனுக்குத் தோன்றியது. பூசைக்குப் பின் எல்லாப் பிக்ஷுக்களும் சபையை விட்டுக் கலைந்ததும் பின்னும் கலங்கமாலரையன் அங்கு நின்று கொண்டிருந்தது. ஏதோ ஒரு காரணத்துக்காகத் தான் இருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. எப்படி இருந்தாலும் இவ்விஷயத்தில் அதிக கவனம் செலுத்தித் தெரிந்து கொள்ள வேண்டுமென்று அவன் தீர்மானித்தான்.

பூதுகன் வைகைமாலையின் வீட்டை அடைந்தபோது நடுநிசியிலும் அந்த வீட்டின் கதவு திறந்திருந்தது. வீட்டுக்குள் சரவிளக்குகள் பிரகாசித்துக் கொண்டிருந்தன. வீட்டின் வெளி வாசலில் வெளிப்புறத்தை நோக்கியவாறு உட்கார்ந்திருந்த வைகைமாலை அவன் வரவை எதிர்நோக்கி இருந்தவன்போல் பரபரப்போடு காணப்பட்டாள். அவன் வீட்டில் நுழைந்ததும் எதிரே ஓடிவந்து, "என்ன நடந்தது? மாலவல்லி பத்திரமாகப் போய்ச் சேர்ந்துவிட்டாளா?" என்றுகேட்டாள்.

பூதுகன் விஷமமாகச் சிரித்துக் கொண்டே, "ஒரே வார்த்தையில் உன்னிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட முடியாது. அவளுக்கு எவ்வித ஆபத்தும் இல்லை.ஆனால் நீ ஆச்சரியப்படக் கூடிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. மனத்தைக் கொஞ்சம் அமைதியாக வைத்துக் கொண்டு என்னோடு வா! நான் மிகவும் களைத்திருக்கிறேன். பொழுது விடிவதற்கு இன்னும் அதிக நேரம் இல்லை. இன்ப வேட்கையில் அலைபவன் இந்தச் சிறிது நேரத்தையும் வீணாக்கி விட்டானானால் வாழ்வின் முக்கால் பாகத்தையும் இருளில் தடுமாறி வீணாக்கியதற்கு ஒப்பாகும். வைகைமாலா! இன்பம் சொரியும் வெண்ணிலவு மேல்வானில் சென்று அமிழ்வதற்கு முன்னால் நாம் மேல் மாடத்துக்குச் செல்வோம், வா!" என்று சொல்லியபடியே அவளுடைய மெல்லிய கரத்தைப் பற்றி இழுத்த வண்ணமே மாடத்துக்கு நடந்தான். அவனுடைய கைப்பிடியில் சிக்கி நடந்து கொண்டிருந்த வைகைமாலை, "கிணற்று நீரை வெள்ளமா கொண்டு போய் விடும்?" என்று சொல்லிக் கொண்டே நடந்தாள்.

அவன் அவளுக்கு எதுவுமே பதில் சொல்லாமல் அவள் கையையும் விடாமல் பற்றிக்கொண்டு மேல் மாடத்துக்கு வந்து அங்கிருந்த மஞ்சத்தில் அவளை அமர்த்தி அவளுக்குப் பக்கத்தில் தானும் அமர்ந்து கொண்டான். "கிணற்று நீரை வெள்ளம் கொண்டு

போய் விடாது— எனக்குத் தெரியும். ஆனால் அந்தக் கிணற்று நீர் வற்றி விடக் கூடாதல்லவா? வைகைமாலா! உன்னுடைய மனத்தில் தோன்றும் உணர்ச்சி ஊற்றும் எப்பொழுதும் ஒரேவிதமாக இருப்பதில்லை. இன்று மனத்தில் ஏற்படும் ஆசையும் நாளை வா என்றால் வருவதில்லை. இன்று அனுபவிக்க வேண்டியதை இன்றே அனுபவித்து விடவேண்டும். இப்பொழுது இளமையும் அழகும் கொண்ட இவ்வுருவம் தளர்ந்து அழகு குன்றி விடுகிறது. இந்த உடல் வேறு, ஆன்மா வேறு என்று சொல்கிறவர்களின் வாதத்தை மறுக்கிறவன் நான். ஒவ்வொரு ஜீவனின் பருவ முதிர்ச்சிகளுக்குத் தக்கவாறு, தேக நிலையின் மாறுதலுக்குத் தக்கவாறு அவனுடைய எண்ணங்களும் செய்கைகளும் மாறு படுகின்றன. இதனால் ஆத்மாவும் தேகத்தோடு சம்பந்தம் உள்ளதுதான். இந்த உடல் சுகத்தை விரும்பும் போது அதுவும் சுகத்தை விரும்புகிறது. இந்த உடல் அழியும் போது அதுவும் அழிந்து விடுகிறது. இந்தப் பிறப்பிலேயே இந்த உடலை ஒட்டிய ஆத்மா அல்லது இந்த ஆத்மாவை யொட்டிய உடல் தன் சுகத்தையும் துக்கத்தையும் அனுபவித்துத் தீர்த்துவிட வேண்டும். இந்த உலகத்தில் சுகமும் இன்பமும் அனுபவித்தால் அதுவே சுவர்க்கம். இந்த உலகத்தில் துக்கமும் கஷ்டமும்அனுபவித்தால் அதுவே நரகம். இதுதான் நாஸ்திக வாதிஎன்று உலகம் சொல்லும் எங்களுடைய கொள்கை. வைகைமாலா! எனக்கு நீ இன்பமும் சுகமும்தந்து சுவர்க்க போகத்தைக்கொடு. துடிப்புக்கும் துக்கத்துக்கும் உள்ளாக்கி என்னை நரகத்தில் ஆழ்த்தி விடாதே!'' என்றான்.



வைகைமாலை ஏளனமாகச் சிரித்தாள். ''உங்கள் கொள்கைகளைப் பற்றி வேறு எங்கேனும் பிரசாரம் செய்து கொண்டு போங்கள். உங்களிடமிருந்து இதைப் போன்ற வார்த்தைகளை ஆயிரம் தடவை கேட்டு விட்டேன். இப்பொழுது நான் உங்களிடமிருந்து எதைக் கேட்க விரும்பினேனோ, அதைப் பற்றிப் பேசுவதுதான் இலட்சணமாகும். நீங்கள் எத்தகைய கொள்கை உடையவர்கள் ஆயினும் உங்களுக்காக என்னை எப்பொழுதோ அர்ப்பணித்துக் கொண்டு விட்டேன். உங்கள் விருப்பத்தை நிறைவேற்றத்தான் நான் இருக்கிறேன். உங்களுக்குள்ள மன ஆர்வமும் துடிப்பும் எனக்கும் உண்டு. ஆனால் நடந்த விவரங்களைத் தெரியப்படுத்தினால் என் மனம் ஆறுதல் அடையும். எனக்கு மன ஆறுதலை அளிக்காமல் நீங்கள் பேசுவதையே பேசிக்கொண்டே போனால்...'' என்று சொல்லி ஒருவித மான கோபமும் பரிவுணர்ச்சியும் கொண்டவள் போல் பார்த்தாள்.

'' அட! ஒரு பௌத்த பிக்ஷுணிகூடத் தன் காதலனிடம் பிணக்கம் காட்டாத போது உனக்கு இவ்வளவு பிணக்கம் ஏற்படுவதுதான் மிக்க ஆச்சரியமாய் இருக்கிறது. இது அவன் செய்த பாக்கியம்!'' என்றான்.

பூதுகனின் வார்த்தையைக் கேட்டதும் வைகைமாலை ஆச்சரியம் அடைந்தவளாக ''நீங்கள் என்ன சொன்னீர்கள்?'' என்றாள் அவன் முகத்தை உற்று நோக்கிக்கொண்டே.

'' என்ன சொன்னேனா? நான் எதைச் சொல்லியிருந்தாலும் அதை உனக்குப் புரியும்படியாகத்தான் சொல்லி இருப்பேன்'' என்றான் பூதுகன்.

''எல்லாம் புதிர் போடுவது போல் இருக்கிறதே?'' என்றாள் அவள்.

'' ஆமாம்! புதிர் போடுவது போலத்தான் ஒவ்வொன்றும் நடக்கிறது. இவைகளைப் புரிந்து கொள்ள முடியாமல் நான் எவ்வளவு திணறுகிறேன் தெரியுமா? வைகைமாலை! நான் இந்தச் சந்தர்ப்பத்தில் உயிர் பிழைத்து வந்ததே துர்லபம் என்றுதான் சொல்ல வேண்டும். அதனால்தான் இந்த இன்பகரமானஇரவைப் போல் வாழ்க்கையில் மறுபடியும் ஓர் இரவு கிடைக்குமோ, கிடைக்காதோ என்று எண்ணி இதைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறேன்'' என்றான்.

வைகைமாலை அவனுடைய பேச்சைக் கேட்டதும் மேலும் திகைப்படைந்தவளாய், ''உங்கள் உயிருக்கு அபாயம் நேர்ந்ததா? அப்படி என்ன நடந்தது?'' என்று கேட்டாள்.

''அவைகளை யெல்லாம் விவரமாகச் சொன்னால் தான் விளங்கும். நாஃ'

நிறைந்த குழந்தையை ஆயிரத்தில் ஒன்று, பத்தாயிரத்தில் ஒன்றாகத்தான் காணமுடியும்.

குழந்தையை மறுபடியும் போர்த்தி விட்டேன். அது தூக்கத்தில் புரண்டு படுத்தது. சிரிப்புக் கொஞ்சும் அந்தப் பிஞ்சு இதழ்கள் எந்தக் கல் மனத்தையும் இளக்கி விடும்.

"டிரைவர்! உட்காரு....கொஞ்ச நேரம் காத்திருந்து பார்ப்போம். வரவில்லையானால் பின்பு குழந்தையையும் கொண்டு போக வேண்டியதுதான்."

நேரம் கடந்து கொண்டே இருந்தது. மணி பத்தே கால். இரண்டு பேருக்கும் பசி வயிற்றைக் கிள்ளியது. "இனிமேல் பார்ப்பதில் பயனில்லை. புறப்பட வேண்டியதுதான். அவசியமானால் ஊருக்குப் போய்க் குழந்தையைப் புகைப்படம் பிடித்துப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்து கொள்ளலாம்" என்ற தீர்மானத்துடன் இருவரும் கிளம்பினோம்.

யார் செய்த புண்ணியமோ! அந்த இருளில் அவ்வளவு பயங்கரமான மழை பெய்து முடிந்த பிறகு, குறுகியமேடுபள்ளம் நிறைந்த மலை ரஸ்தாக்களில் ஒரு துன்பமுமின்றி ஜீப் மலை அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தது. 'குழந்தை தூக்கம் கலைந்து அழுதால் சமாதானப்படுத்த முடியாதே' என்று கவலைப் பட்டோம். நல்ல வேளையாக ஊர் வருவதற்குள் குழந்தை தூக்கத்திலிருந்து ஒரு தடவை கூட விழித்துக் கொள்ளவே இல்லை.

ஊர் வந்து சேர்ந்த போது இரவு ஒன்றரை மணி. இரண்டாவது ஆட்டம் சினிமா விடுகிற நேரம். டிரைவர் காலையில் வருவதாகக் கூறி விட்டுத் தன் வீட்டுக்குப் போனான். நான் என் மனைவியை அழைத்துச் சுருக்கமாக அந்தக் குழந்தையின் வரலாற்றை அவளுக்குச் சொல்லி அதை அவளிடம் கொடுத்தேன்.

அவள் குழந்தையைத் தோளில் சாத்திக் கொண்டு சமையலறைக்குள் போனாள். நான் வருகிற வழியிலேயே ஒரு சினிமாக் கொட்டகை வாசலில் இருந்த ஹோட்டலில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வந்திருந்தேன்.

"குளுகோஸைப் போட்டுக் குழந்தையை அழாமல் தூங்கப் பண்ணு" என்று அவளை எச்சரித்து விட்டுப் படுக்கச் சென்று விட்டேன் நான். அலைச்சலும் மனக் குழப்பமும் மிகுந்து ஓய்ந்திருந்த உடல் விரைவில் தூக்கத்தின் வசப்பட்டது.

மறுநாள் காலை எழுந்திருக்கும் போது ஒன்பது மணிக்கு மேல் ஆகிவிட்டது.

"குழந்தை ரொம்பச் சமர்த்தாக இருக்கே? அழுகை, முரண்டு, ஒண்ணும் கிடையாது! காலையிலே எழுப்பிப் பால் காய்ச்சிப் போட்டினேன். புது முகம்னு கொஞ்சமாவது சிணுங்கணுமே? பெற்ற குழந்தை மாதிரி ஒட்டிக் கொண்டு விட்டது!" இடுப்பில் அந்தக் குழந்தையும் கையில் காப்பி தம்ளரும் காட்சியளிக்க என் மனைவி என்னை நோக்கி வந்தாள்.

"எப்படியானால் என்ன? திருமூர்த்தி மலைக்குப் போய்விட்டு இப்படி ஒரு குழந்தையோடு வருவேன் என்று நீ கனவில் கூட நினைத்திருக்க மாட்டாய்!"

"எல்லாமே நாம் நினைக்கிறபடி நடக்கிறதா என்ன?" குழந்தையை ஆசை தீரக் கொஞ்சிக் கொண்டே காப்பித் தம்ளருடன் திரும்பிப் போனாள் அவள்.

நான் அன்றைக்கு ஆபீஸ் போகவில்லை; லீவு போட்டுவிட்டேன். பதினொன்றரை மணி சுமாருக்கு டிரைவர் வந்து சேர்ந்தான்.

"வாப்பா! வா..குழந்தை அம்மாவிடம் எவ்வளவோ நாள் பழகினாப்போல இருக்கிறது. அழவே இல்லை. 'போட்டோ' பிடித்து எல்லாப் பத்திரிகைகளிலும் விளம்பரம் போட்டு விடுவோமா? அவளுக்குத் தெரிந்தவர்கள் யாராவது பத்திரிகை பார்த்துச் சொன்னால் அதைக் கேட்டு இங்கே வரமாட்டாளா? வந்தால் குழந்தையைக் கொடுத்து அனுப்பி விடுவோம்."

"எதற்கும் நாளை ஒருநாள் பார்த்துவிட்டுச் செய்யலாமுங்க! எனக்கென்னவோ அவள் உயிரோடு இருப்பாள் என்கிற நம்பிக்கையே இல்லீங்க."

கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு வீட்டுக்குப் போய் விட்டான் அவன்.

மறுநாள் பத்திரிகையில் அந்தச் செய்தியைப் படித்த போது நான் திடுக்கிட்டேன். வியப்பும் வேதனையும் ஒருங்கே அடைந்தேன்.

"மூணாறில் சோத்துப் பாறை எஸ்டேட் அருகே இளம் பெண் தற்கொலை. ஏற்கனவே அவள் போலீஸாரால் தேடப்பட்டுக் கொண்டிருந்தவளாம். அவளுக்கு ஒன்றரை வயதில் ஒரு பெண் குழந்தை உண்டென்றும், அவள் வேலை பார்த்து வந்த எஸ்டேட் முதலாளி அவளிடம் தவறாக நடந்து கொள்ள முயன்றதனால் அவரைக் குத்திக் கொலை செய்து விட்டுத் தன் குழந்தையோடு ஓடிய அவள், நேற்றிரவு தற்கொலை செய்து கொண்டு விட்டாள். அவள் குழந்தை என்ன ஆயிற்றென்று தெரியவில்லை. போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்."

என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துப் போய் உட்கார்ந்தேன்.

பத்திரிகையைப் படித்தீர்களா? விளம்பரத்துக்கு அவசியமே இல்லை! குழந்தை இங்கேயே வளரட்டும்" என்று கூறிக் கொண்டே வந்தான் டிரைவர்.

"இதோ பாருங்கள். குழந்தை என்ன அழகாகச் சிரிக்கிறது? 'அம்மா' என்றே என்னைக் கூப்பிடுகிறது!"—என் மனைவி குழந்தையைத் தூக்கிக் கொண்டு வந்தாள். குழந்தை, உலகத்தை யெல்லாம் விலையாகக் கொடுத்தாலும் சுடு காணாத அழகுச் சிரிப்பு ஒன்றைத் தன் சின்னஞ்சிறு மாதுளை இதழ்களில் சிந்திக் கொண்டிருந்தது. டிரைவர் அதையே பார்த்துக் கொண்டிருந்தான். நான் எதிரே சுவரில் மாட்டியிருந்த சர்வேசுவரனின் படத்தைப் பார்த்தேன்.

"இறைவா! நீ நல்ல வீணைகளைப் படைக்கிறாய். மண்ணுலகம் தாங்காத அழகையெல்லாம் உருவாக்கி அனுப்புகிறாய்! சேற்றில் செந்தாமரை! குப்பையில் குருக்கத்தி! ஆனாலும் என்ன பயன்? அந்த நல்ல வீணைகளைச் சில சமயம் நலங்கெடப் புழுதியிலும் எறிந்து விடுகிறாயே!" என்று என் மனம் இறைவனை இறைஞ்சிக் கேட்டது.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

அருள் வாக்கு

ஹிருதயம் யாருடைய இடம் என்பதை அறிய வேண்டும். அது பகவானுக்குரிய இடம். அந்த இடத்தை நாம் குப்பைத் தொட்டியாக்கி இருக்கிறோம். அதை மெழுகிச் சுத்தப்படுத்தி அதில் பகவானை உட்கார வைத்து நாமும் உட்கார வேண்டும். அதற்கு என்ன வழி? பகவானின் பாதத்தைத் தியானம் செய்ய வேண்டும். நித்தியம் ஐந்து நிமிஷமாவது தியானம் செய்ய வேண்டும்.

ஸ்ரீ சங்கராச்சாரியார்

ரையனும் என்னை வீராவேசத்தோடு தாக்க ஆரம்பித்தான். மாலரையன் என்னைத் தாக்க ஆரம்பித்தவுடன் மாலவல்லியின் காதலன் என்னைத் தாக்குவதை நிறுத்திக் கொண்டான். உடனே மாலரையனைத் தூக்கிக் கடலில் எறிய எத்தனித்தேன். உடனே மாலவல்லியும் அவள் காதலனும், மாலரையனை மன்னித்து விடும்படி வேண்டிக் கொண்டனர். நானும் அவர்களுடைய வார்த்தைகளுக்கிணங்கி, அவன் மறுபடியும் இந்தக் காவிரிப்பூம் பட்டினத்தில் தலைநீட்டக்கூடாது என்று சொல்லி விரட்டி அனுப்பிவிட்டேன். அதற்குப் பின் நாங்கள் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டோம். மாலவல்லி புத்த விஹாரத்துக்குச் சென்றாள். அவளுடைய காதலன் தன்னுடைய கம்பீரமான குதிரையில் உல்லாசமாக அமர்ந்து எங்கோ சென்றான். நான் இந்த இரவு வீணாகிவிடுமோ என்றெண்ணி ஓடோடி வந்தேன், உன்னைப் பார்க்க. அவ்வளவுதான்'' என்று சொல்லி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு நிறுத்தினான்.

''அதிருக்கட்டும். அந்த மாலவல்லியின் காதலன் என்றீர்களே அவன் யார்?'' என்றாள் வைகைமாலை.

''அவன் தான் கங்கபாடியைச் சேர்ந்தவன் என்றும், சாதாரணப் போர் வீரன் என்றும், தன் பெயர் வீரவிடங்கன் என்றும் சொல்லிக் கொள்கிறான். இது எவ்வளவு தூரம் உண்மையோ? என்னால் நம்பவே முடியவில்லை. காதல் விவகாரம் என்றால் இப்படிப்பட்ட பொய் பித்தலாட்டங்களெல்லாம் நிறைய உண்டு...'' என்றான் பூதுகன்.

''ஏன் உங்களால் நம்ப முடியவில்லை? இதெல்லாம் பொய் பித்தலாட்டமென்று நீங்கள் நினைக்கக் காரணம் என்ன?'' என்று கேட்டாள்.

''அவன் சவாரி செய்யும் குதிரை சாதாரணப் போர்வீரன் சவாரி செய்யும் குதிரையாகத் தோன்றவில்லை. அத்தகைய உயர்ந்த சாதிக் குதிரை ஒரு அரசனையோ அல்லது அரச குமாரனையோ தான் தன் முதுகில் கம்பீரமாக ஏற்றிச் செல்லும் என்று நினைக்கிறேன்'' என்றான் பூதுகன்.

''அப்படி என்றால் அவனை ஒரு அரச குமாரன் என்கிறீர்களா?''

''ஆம்! அவனைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது. ஒருவேளை அவன் சொல்லுகிறபடி சாதாரணப் போர் வீரனாக இருந்தால் இத்தகைய அழகோடும், கம்பீரத்தோடும், அதிர்ஷ்டத்தையும் பெற்றவன் என்றுதான் சொல்ல வேண்டும்'' என்றான்.

வைகைமாலை பேசாது மௌனத்தில் ஆழ்ந்திருந்தாள். அவள் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறாள் என்பதை அவள் முகக்குறி எடுத்துக் காட்டியது.

''என்ன யோசிக்கிறாய்? இவைகளையெல்லாம் யோசித்துக் கண்டுபிடித்து விடமுடியாது. அதோ அந்த நிலவைப் பார், நம்மிடம் விடைபெற்றுக்கொள்ள மன்றாடுகிறது. உடலைச் சிலிர்க்க வைக்கும் இந்தத் தென்றல் காற்றில் ஏதோ ஒரு மணம் வீசுகிறது பார்! இது எந்த மலரின் மணம் என்று கண்டுபிடிக்க முடியாதபடி எல்லா மணங்களின் மலரையும் கலந்தல்லவா எடுத்துக் கொண்டு வந்து வீசுகிறது? நீ அதிகமாக மனம் குழம்பி யோசித்தால் தாமரையின்மேல் நிழல் படர்ந்தாற்போல் உன் அழகு சிறிது மங்கி விடுகிறது. இன்று நீ உன் நீண்ட அழகிய கூந்தலை எடுத்துச் சுருட்டிக் கொண்டை போட்டிருப்பது எவ்வளவு அழகாக இருக்கிறது தெரியுமா? வைகைமாலா! கொஞ்சம் என்னைப் பார்! அதோ சந்திரனை மறைக்க மேகம் ஒன்று வருகிறது. அதற்குள் நீ ஒரு புன்சிரிப்பு சிரித்து உன் முகத்தின் முழு சௌந்தர்யத்தையும் எனக்குக் காட்டிவிடு'' என்று சொல்லித் தன் அகன்ற விழிகளால் அவளை விழுங்கிவிடுவதுபோல் பார்த்தான். அவன் விழிகளில் காதல் களிநடம் புரிந்தது.

அவள் மிகவும் வெட்கம் நிறைந்தவளாக, ''அதிருக்கட்டும். மாலவல்லியைப் பற்றியும் அவள் காதலனைப் பற்றியும் நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''இந்த இன்பகரமான இரவு வேளையில், இருவரும் அவர்களையே பற்றிப்

பேசிப் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தால் இந்த நிலவு நம்மைப்பார்த்து ஏளனம் செய்து சிரித்து விட்டுப் போய் விடும். இதோ பார். அவ்விரு காதலர்களைப் பற்றியும் நாம் அப்புறம் பேசிக் கொள்ளலாம். இப்பொழுது நாம் இருவரும் காதலர்கள் என்பதை மாத்திரம் நினைவு வைத்துக்கொள்'' என்றான் பூதுகன் காதல் பொங்கி வழிய.

''போதும் உங்கள் பரிகாசம்'' என்றாள் வைகைமாலை.

மேல் வானத்தடியில் நகர்ந்து கொண்டிருந்த வட்ட நிலவை ஒரு கருமேகம் வந்து தழுவிக் கொண்டது. காதலர்கள் இருவரும் இவ்வுலகையே மறந்து இன்பப் பேச்சுகளிலே மூழ்கி யிருந்தனர்.

மறுநாட் காலை பூதுகன் வைகைமாலையிடம் ஏதோ சொல்லிவிட்டு அவளிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினான். அவன் பட்டினப்பாக்கம் தாண்டி மரூர்ப் பாக்கத்துக்கு வந்தபோது அங்கிருந்த வர்த்தகர்கள் வியாபாரத்தை ஆரம்பிப்பதற்காகத் தங்கள் கடைகளைத் திறந்து கொண்டிருந்தனர். என்றும்போல் இல்லாமல் இன்று மரூர்ப்பாக்கத்திலிருந்த வியாபாரிகளிடையே ஏதோ பரபரப்பு மிகுந்திருந்தது. பலர் பல இடங்களில் சிறு சிறு கும்பலாகக் கூடி எதையோ பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். பூதுகனுடைய ஆவலெல்லாம் முதல் நாளிரவு சந்தித்த மாலவல்லியின் காதலன் வீரவிடங்கனை அங்கெங்கேனும் காணலாமோ என்பதுதான்.

ஆனால் அங்குமிங்கும் வர்த்தகர்கள் கூடி எதையோ பற்றிக் கவலையாகப் பேசிக் கொண்டிருப்பதிலிருந்து நகரிலோ அல்லது அதன் சுற்று வட்டாரங்களிலோ ஏதோ ஒரு சம்பவம் நடந்திருக்கிறது என்பதை அவனுக்கு அறிவுறுத்துவதுபோல் இருந்தது. அவன் ஓரிடத்தில் பேசிக்கொண்டிருக்கும் ஒரு கூட்டத்தினரை நெருங்கி, அவர்கள் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டான்.

அவன் அங்கு கேள்விப்பட்ட விஷயம் அவனுக்கே பெருத்த ஆச்சரியத்தையும் திகைப்பையும் அளிப்பதாக இருந்தது. அன்று காலையில் பௌத்த விஹாரத்தில் காஞ்சியிலிருந்து புதிதாக வந்திருந்த பௌத்த பிக்ஷு ரவிதாசர் என்பவர் கத்தியால் குத்தப்பட்டு இரத்த வெள்ளத்தில் இறந்து கிடந்தார் என்ற செய்திதான் அது. அவனுக்கு எல்லாம் ஆச்சரியத்துக்குமேல் ஆச்சரியமாக இருந்தது. முதல் நாள் இரவு நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியும் அவன் நினைவுக்கு வந்தது. 'ரவிதாசன் யாரால் கொல்லப்பட்டிருப்பான்? ஒருவேளை கலங்கமாலரையன் அவனைக் கொன்றிருக்கலாமோ? அல்லது தனக்கு எதிராக இருந்து தன் ரகசியங்களைத் தெரிந்து கொண்டு தன்னை அவமானப்படுத்துவதற்கு நினைக்கும் ரவிதாசனைக் கொல்வதற்கு மாலவல்லியும் அவள் காதலன் வீரவிடங்கனும் ஏதேனும் சூழ்ச்சிகள் செய்திருக்கலாமோ' என்றெல்லாம் மனங் குழம்பியவாறு அவன் நிற்கும்போது அவனுடைய தோளை யாரோ பின்புறத்திலிருந்து தொடவே சட்டென்று திரும்பிப் பார்த்தான். அவன் எதிரே வீரவிடங்கன் நின்றுகொண்டிருந்தான். (தொடரும்)

# பொன் விழா

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியார் பட்டத்துக்கு வந்து ஐம்பதாண்டுகள் ஆகின்றன. இந்த ஐம்பதாண்டு நிறைவைப் பொன் விழாவாக, மார்ச் 10ந் தேதியிலிருந்து 24ம் தேதி வரை மிக விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. இந்த வைபவத்தை முன்னிட்டுத் தேசமெங்கிலுமுள்ள ஆஸ்திக பக்தர்கள் தங்கள் தங்கள் ஊர்களில் இரண்டு நாட்கள் விழா கொண்டாடும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். முதல் நாள் ஆதி சங்கரர் ஆராதனையும் அடுத்த நாள் ஜகத்குரு சங்கராச்சாரியார் ஆராதனையும் நடத்தும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.



பேராசிரியர் பி. சங்கரநாராயணன்



# Ids C.A.Q

REGD. TRADE MARK

குளிர் ஜுரம்
இன்புளுயன்ஸா
ஜலதோஷத்தினால்
தலை பாரம், ஹே-பீவர்
முடக்குக் காய்ச்சல்
முதலிய வியாதிகளுக்கு

**கைகண்ட மருந்து**

**ஸி. ஏ. க்யூ ஒன்றே**

அது ஸ்பென்ஸர் கம்பெனியாரின் தயாரிப்பு

CQ-3-5A

---

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிமிடெட்

B-6, பிளாக் III, டெல்லி-ஆஜ்மீரி கேட் ஸ்கீம், (பெட்ரோல் பங்க் அருகில்) புது டெல்லி-1.
போன்: 27035 தபால் பெட்டி நெ. 472 தந்தி: EVERMENS

## குறுகிய கால ஏலச் சீட்டுகள்

3வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள் - 1957 மார்ச் ஸீரிஸ்

சேரக் கடைசி தேதி 14-3-57 ... முதல் ஏலத் தேதி 17-3-57

25 மாதங்கள் 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| F | ரூ. 25/- | ரூ. 625/- | H | ரூ. 15/- | ரூ. 375/- |

## நீண்ட கால ஏலச் சீட்டுகள்

நேயர்களின் கோரிக்கைகளுக்கு இணங்க புதிதாக 'A' 'B' & 'D' வகுப்பு சீட்டுகளை ஆரம்பிக்கிறோம்

சேரக் கடைசி தேதி 21-3-57 - 'A' 'B' & 'D' வகுப்பு முதல் ஏலத் தேதி 24-3-57

50 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| A | ரூ. 100/- | ரூ. 5000/- | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2500/- | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1000/- | ரூ. 100/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப் படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது போர்டார் உத்தரவுப்படி)

எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**




"திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் மூன்றாவது பிளாட்பாரத்திலிருந்து எட்டு மணி முப்பது நிமிடத்துக்குப் புறப்படும்." எழும்பூர் ஸ்டேஷன் நேர அறிவிப்பாளர் மேலே கூறிய வாக்கியத்தை மாறி மாறி ஆங்கிலத்திலும், தமிழிலும் பலமுறை அறிவித்துக் கொண்டு தம்முடைய கடமையை ஆற்றிக் கொண்டிருந்தார்.

மூன்றாவது வகுப்பு வண்டி ஒன்றில் ஜன்னலோரத்தில் பெஞ்சியின்மேல் தன் தம்பியுடன் அமர்ந்திருந்தாள் லலிதா. தன் கணவனுடன் இருந்துவிட்டு நெடுநாட்களுக்குப் பிறகு தன் பெற்றோரைக் காணப் போகிறோம் என்ற மகிழ்ச்சி ஒருபுறம் இருந்தாலும், மறுபுறம் தன் அன்புக் கணவனை விட்டுப் பிரியப் போகிறோமே என்ற ஏக்கமும் அவள் உள்ளத்தை வருத்திக் கொண்டிருந்தது.

"என்ன லலிதா! வண்டி கிளம்ப இன்னும் ஐந்து நிமிஷம்தான் இருக்கிறது. போய்ச் சேர்ந்தவுடனேயே கடிதம் போடு. அப்பாவுக்கு உடம்பு குணமானவுடனே கிளம்பி வந்துவிடு" என்று பிளாட்பாரத்தில் நின்று கொண்டு, கரங்களை ஜன்னலின்மேல் ஊன்றியவாறே கூறினான் சங்கர்.

"வேளா வேளைக்குச் சாப்பிடாமல் உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள். ஹோட்டல் சாப்பாடு உங்களுக்குச் சரிப்படாமல் போனால் கண்ணம்மா மாமி வீட்டிலே சாப்பிடுங்கள். நானும் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன்." லலிதா கூறிய ஒவ்வொரு வார்த்தையும் தன் கணவனிடத்தில் உள்ள அன்பு எவ்வளவு என்பதை அளந்து சொல்லிற்று.

"அந்தக் கடன்காரி பேச்சை என்னிடம் சொல்லாதே. நீ சீக்கிரம் வந்து சேர்வதைப் பார்" என்றான் சங்கர்.

"அடிக்கடி கடிதம் போடுங்கள். உடம்பு ஜாக்கிரதை!" ஊர்ந்து கொண்டிருக்கும் வண்டியோடு வந்து கொண்டிருக்கும் கணவனைப் பார்த்து நாத் தழுதழுக்கக் கூறினாள்.

வண்டியின் வேகம் சிறிது அதிகரிக்கத் தொடங்கியது. பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த தன் கணவனின் தலை மறையும் வரையில் அவனையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள் லலிதா. இதுவரையிலும் அடக்கி வைத்திருந்த கண்ணீர் மடை உடைப்பெடுத்துக் கண்ணீர் முத்துக்கள் பளபளப்பான அவள் சந்தனக் கன்னத்தில் ஒன்றன் பின் ஒன்றாக நகர்ந்து கொண்டிருந்தன.

"வாசு! இப்படிப் பெஞ்சு மேலேயே படுத்துக்கொள். நானும் உட்கார்ந்து கொண்டே கண்ணை மூடிப் பார்க்கிறேன்" என்றாள் லலிதா, தன்னை அழைத்துக் கொண்டு போகும் தன் ஒரே தம்பி வாசுவைப் பார்த்து.

லலிதா இருந்த பெட்டியில் இருந்த பலர் இதற்குள் நித்திரா தேவியிடம் வசமாகி விட்டனர். லலிதாவும் கண்களை இறுக மூடினாள். கணவனைப் பிரிந்த கலக்கமும், அதைவிடத் தான் செய்துவிட்ட மகத்தான தவறும் சேர்ந்து அவள் மனத்தைக் குடைந்து வருத்திக் கொண்டிருக்கும் பொழுது அவளுக்கு உறக்கம் எப்படி வரும்?

வண்டி புகையைக் கக்கிக் கொண்டும், காற்றைக் கிழித்துக் கொண்டும் கடுவேகமாகச் சென்று கொண்டிருந்தது. அதே சமயம் தூக்கம் வராமல் தத்தளித்துக் கொண்டிருக்கும் லலிதாவின் உள்ளக் கண்ணாடியிலும் பற்பல நிகழ்ச்சிச் சித்திரங்கள் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தன.

திருச்சி ஜில்லாவிலே குமாரவாடி என்ற கிராமம் பிரசித்தி பெற்றது. அந்தக் கிராமத்திலுள்ள போர்டு பள்ளி ஆசிரியர் ராஜகோபாலய்யர் என்றால் அந்தப் பிராந்தியத்திலே எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அவருடைய ஒரே அருந்தவப் புதல்வி லலிதா. லலிதா பிறந்து பத்து வருடங்களுக்கு அப்புறம்தான் வாசு பிறந்தான். ராஜகோபாலய்யர் சம்பாதிக்கும் பணத்தின் மூலம் அவரது குடும்பம் மகிழ்ச்சியோடு காலம் தள்ள முடிந்தது.

ராஜகோபாலய்யர் வரன் வேட்டையாடக் கிளம்பும் அளவுக்குக் காலம் காத்திருக்கவில்லை. லலிதாவின் அழகோ அல்லது அவளது தகப்பனாரின் அதிர்ஷ்டமோ, சீக்கிரமே லலிதாவுக்கு நல்ல இடத்தில் கலியாணமும் நிச்சயமாகியதோடு திருமணமும் இனிது நடந்தேறியது.

லலிதாவின் கரத்தைப் பிடித்த சங்கர் உண்மையிலேயே அடக்கம், நேர்மை, சிக்கனம் இவை மூன்றையும் கடைப்பிடிக்கும் லட்சிய வாலிபன். தாய், தகப்பனார் என்ற பிக்கப் பிடுங்கல் ஏதுமின்றித் தனிக் காட்டு ராஜாவாகக் காட்சி அளித்தாலும் சென்னையில் ஒரு பிரபல கம்பெனியில் வேலையில் இருந்தான்.

சீக்கிரத்திலேயே லலிதா தன் கணவனுடன் மயிலாப்பூரில் குடியேறினாள். கணவன் பார்த்திருந்த வீடு அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. அதைவிட அதே வீட்டில் மற்றொரு பக்கத்தில் குடியிருந்த கண்ணம்மாவையும் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

கண்ணம்மாவின் கணவனும் லலிதாவின் தகப்பனாரைப் போல, சென்னையில் ஒரு கார்ப்பரேஷன் பள்ளியில் ஆசிரியர் வேலையில் இருந்தார். லலிதாவின் கணவன் காரியாலயத்துக்குச் சென்ற பின் லலிதாவின் வீட்டி

லேயே காட்சி அளிப்பாள் கண்ணம்மா. கண்ணம்மாவின் பேச்சையும், தன்னிடம் அவளுக்குள்ள அன்பையும் கண்டு வந்த ஒரு சில நாட்களுக்கெல்லாம் தன் உடன்பிறந்த சகோதரி போலவே நினைக்கத் தொடங்கி விட்டாள் லலிதா.

கண்ணம்மாவை மயிலாப்பூரில் அனேகமாக எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். கணவன் சம்பாதித்து வரும் பணத்தைக் கொண்டு சென்னையில் குடும்பத்தை நடத்த முடியாது என்று அவளுக்குத் தெரியும். இருந்தும் அவள் பல வழிகளில் பணம் சம்பாதித்தாள். சீட்டுப் பணம் பிடிப்பது, தனக்குத் தெரிந்த கடைக்காரர்களின் மூலமாகத் தெரிந்தவர்களுக்குத் துணிமணிகளோ, பாத்திரங்களோ கடனாக வாங்கித் தருவது, பின்பு அவர்கள் மாத முதலில் கடனை அடைக்கக் கொடுக்கும்



பணத்தில் சிறிது கொடுத்து மற்றதைத் தான் செலவு செய்வது, பின்பு பழையபடியே ஆரம்பிப்பது — இப்படிப் பல யுக்திகளைக் கையாண்டு கண்ணம்மா சென்னையில் காலத்தை ஓட்டி வந்தாள்.

சங்கருக்கும் இந்தமாதிரி விஷயங்களுக்கும் ரொம்ப தூரம். 'கடன்' என்ற பேச்சை எடுத்தாலே அவனுக்குக் கடுங்கோபம் வரும். தனது செலவு போக மற்றப் பணத்தை அவன் தன் மனைவியிடம் கொடுத்து விடுவான். மளிகைச் சாமானையும் ஆபீசிலிருந்து வரும் பொழுதே சம்பள தினத்தன்று செட்டியார் கடையில் பணத்தைக் கொடுத்து விட்டு வாங்கிப் போட்டு விடுவான். அனாவசியமாக ஒருவரிடம் கடன் வாங்குவது, செலவு செய்வது என்ற ஒரு கெட்ட பழக்கம் அவனுக்கு இதுவரையில் ஏற்பட்டதில்லை.

நெடுநாட்கள் வரை கண்ணம்மாவைப் பற்றியோ அல்லது அவளது குடும்பத்தைப் பற்றியோ சங்கருக்கு ஒன்றும் தெரியாது. லலிதா ஒவ்வொரு சமயம் அவர்களைப் பற்றித் தன் கணவனிடம் கூறினாலும், "நம்மைப் பற்றியே நம்மால் சரியாகக் கவனிக்க முடிவதில்லை. மற்றவரைப் பற்றிப் பேசி என்ன பலன்?" என்று விரக்தியாகக் கூறுவான்.

ஒருநாள் இரவு கணவனுக்குச் சாதம் பரிமாறிக் கொண்டிருந்தாள் லலிதா.

"கண்ணம்மா மாமி எனக்கு இரண்டு எவர்ஸில்வர் பாத்திரங்கள் கடனாகக் கடையில் வாங்கித் தருகிறேன் என்று சொன்னாள். அடுத்த மாதம் பணம் வரும்போது கொடுக்கலாமாம். தண்ணீர் கொட்டி வைப்பதற்கும் மாவு அரைத்துப் போடுவதற்கும் இந்தப் பித்தளைப் பாத்திரங்களை விட எவர்ஸில்வர் பாத்திரம் நன்றாயிருக்கும். நீங்கள் சொன்னீர்களானால்...." வார்த்தைகளை முடிக்கவில்லை லலிதா. கணவன் சங்கர் கூறிய பதில் அவளை நிலைகுலைய வைத்தது.

"லலிதா! என்னிடம் இந்தக் கடன் என்ற வார்த்தையைக் கூறாதே. என் மூதாதையர் எல்லோரும் ஆஸ்தியை வைத்துக்கொண்டு கடன் வாங்கி வாங்கித்தான் நான் இப்பொழுது இந்த நிலைக்கு வந்திருக்கிறேன். சிறு உடைப்புத்தான் கடைசியில் பெரு வெள்ளமாக மாறிவிடும்." சங்கரின் பேச்சில் உறுதியும் நயமும் கலந்திருந்தன.

லலிதா தனது கணவனின் மன நிலையை நன்கு புரிந்துகொண்டாள். அதற்கு அப்புறம் இம்மாதிரியான விஷயங்களை அவள் அவனிடம் கூறுவதேயில்லை.

**நா**ட்கள் உருண்டோடிக் கொண்டிருந்தன. அன்று தன் பெற்றோரிடமிருந்து வந்திருந்த கடிதத்தை மூன்றாம் முறையாகப் படித்துக் கொண்டிருந்தாள் லலிதா.

அவளது தகப்பனாருக்கு உடம்பு சரியில்லை என்றும், லலிதாவைப் பார்க்க விரும்புவதாகவும், அடுத்த வாரம் வாகனை அனுப்பி வைப்பதாகவும், அவள் துணையுடன் வரும்படியும் ஒருமாத காலம் இருந்து விட்டுச் செல்லலாம் என்றும் லலிதாவின் தாயார் எழுதியிருந்தாள்.

"என்ன லலிதா! அம்மாவின் கடிதத்தை மனப்பாடம் பண்ணுகிறாயா?" என்ற குரல் கேட்டுத் திரும்பி நோக்கினாள் லலிதா. ஒரு கையில் பிடி வெற்றிலையையும், ஒரு நாவலையும் வைத்துக் கொண்டு எதிரே பிரசன்னமானாள் கண்ணம்மா.

கண்ணம்மாவிடம் கடிதத்தைக் காண்பித்தாள் லலிதா.

"ஆசையுடன் அம்மா எழுதியிருக்கிறாள். போக வேண்டியதுதான்." கடிதத்தில் கண்ணை ஓட்டியவாறே கூறினாள் கண்ணம்மா. பிறகு தொடர்ந்து, "அது சரி! நீ பிறந்தகத்திலிருந்து வந்து எத்தனை நாட்கள் ஆகின்றன?" என்று கண்ணம்மா கேட்டாள்.

"ஒன்றரை வருஷத்துக்கு மேல் ஆகிறது, மாமி!" தாயைக் காணச் செல்லும் சேயின் குரலைக் காட்டின லலிதாவின் வார்த்தைகள்.

"கட்டாயம் போக வேண்டியதுதான். அம்மாவுக்கு என்ன வாங்கிக்கொண்டு போகப்

போகிறாய்?'' என்று கண்ணம்மா வெற்றிலையில் சுண்ணாம்பு தடவியவாறே கேட்டாள்.

''எனக்கும் அம்மாவுக்கு ஏதாவது வாங்கிக்கொண்டு போக வேண்டும் என்றுதான் ஆசை. தேதியோ இருபதுக்கு மேல் ஆகிறது. அவரிடத்திலும் பணம் இருக்காது.''

''லலிதா! செட்டியார் கடையிலே ஒரு புடவை வாங்கித் தருகிறேன். எடுத்துக் கொண்டு போ. ஊருக்குப் போய் வந்து பணத்தைக் கொடு. போதும்'' என்று கண்ணம்மா நிதானமாகச் சொன்னாள்.

''கடனாகவா மாமி! அவருக்குத் தெரிந்து விட்டால்....''

''அவருக்கு ஏன் தெரியப் போகிறது? நான் வாங்கித் தருகிறேன். பேசாமல் வாங்கிக்கொண்டு போ. ஊருக்குப் போய்விட்டுத் திரும்பும்பொழுது எப்படியும் உன் அப்பா உனக்கு ஏதாவது வாங்கித் தருவார். நீ பணமாகக் கேட்டு வாங்கிக்கொண்டு வந்து விடு. அம்மாவுக்குப் புடவை வாங்கிக் கொடுத்த மாதிரியாகவும் இருக்கும். அப்பா கொடுக்கும் பணத்திலே கடனையும் அடைத்து விடலாம்'' என்றாள் கண்ணம்மா.

அன்று மாலை கணவன் சங்கர் வந்ததும் கடிதத்தைக் காண்பித்து ஊருக்குப் போவதற்கு அனுமதியும் வாங்கி விட்டாள் லலிதா. இரண்டு நாட்களுக்கெல்லாம் அவளை அழைத்துப் போகக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தபடி வாசு வந்து விட்டான். வாசுவை வீட்டுக்குக் காவலாக வைத்து விட்டுக் கண்ணம்மாவை அழைத்துக் கொண்டு தன் அம்மாவுக்குக் கடனாகப் புடவை வாங்கி வர ஜவுளிக்கடைக்குச் சென்றாள் லலிதா.

எழுபத்தைந்து ரூபாயில் தன் அம்மாவுக்கு ஒரு புடவையைக் கடனாக வாங்கி விட்டாள் லலிதா. செட்டியார் குறிப்பிட்ட இடத்தில் கையெழுத்தையும் தன் கணவன் பெயரையும் விலாசத்தையும் கூறிவிட்டு நடுங்கும் உள்ளத்துடன் வீடு வந்து சேர்ந்தாள்.

புகை வண்டி வேகமாகச் சென்று கொண்டிருந்தது. தான் தனது கணவனுக்குத் தெரியாமல் செய்த காரியம் அவள் மனத்தைக் குடைந்தெடுத்துக் கொண்டிருந்தது.

ஊருக்கு வந்து சேர்ந்ததும் முதலில், தான் ஆசையுடன் வாங்கி வந்திருக்கும் புடவையைத் தன் தாயாரின் முன் வைத்தாள் லலிதா.

''யாருக்கு இந்தப் புடவை? உனக்கா!''

''உனக்குத்தான் அம்மா வாங்கி வந்திருக்கிறேன்.'' உவகை பூக்கும் உள்ளத்துடன் பதில் அளித்தாள் லலிதா.

''உன் கணவன் வாங்குகிற சம்பளம் குடும்பம் நடத்துவதற்குத்தான் போதுமானதாக இருக்கும். எனக்குப் புடவை வாங்க உனக்கு ஏது பணம்? கடனாக வாங்கி வந்து விட்டாயா என்ன?''

லலிதாவுக்குத் தன் தாயார் கேட்ட கேள்வி ஒரு நிமிஷம் திடுக்கிட வைத்தது.

''நான் மிச்சப்படுத்திச் சேமித்து வைத்த பணத்தைக் கொண்டுதான் வாங்கி வந்தேன்.''





இரங்கோன் ''ரஸிகரஞ்சனி'' தமிழ் தினசரியின் பத்திராதிபர் திரு கே.எஸ். பொன்னய்யா பிள்ளையின் சகோதரர் திரு கே. எஸ். ஆதிரத்தினத்தின் புதல்வி சௌ. அம்புஜத்துக்கும், திரு நா. இராமநாத பிள்ளையின் புதல்வர் செஞ்சீவி நவநீதகிருஷ்ணனுக்கும் 10—2—57 அன்று இரங்கோனில் நெப்பாகத் திருமணம் நடைபெற்றது. இதை முன்னிட்டு அதே தினத்தில் சென்னையில் திரு ம.பொ.சி. தலைமையில் தேநீர் விருந்துடன் வரவேற்பு அளிக்கப்பட்டது. வாழ்க மணமக்கள்!

---

அன்று லலிதாவின் கணவனிடமிருந்து லலிதாவைச் சீக்கிரம் வரச் சொல்லிக் கடிதம் வந்தது. அதற்கேற்றாற் போல் புடவைக்குப் பணம் கொடுப்பதாகச் சொன்ன தேதி நெருங்கி வந்து கொண்டிருந்தது. லலிதாவின் தகப்பனாருக்கும் உடம்பு குணமாகி விட்டதால் ஊருக்குப் போவதற்கு அனுமதி கேட்டாள் லலிதா.

''இன்னும் பதினைந்து தினங்கள் கழித்துப் போகலாம். எனக்கும் அப்பொழுதுதான் பணம் வரும். உனக்கு ஏதேனும் வாங்கிக் கொடுக்காமல் அனுப்புவது என்றால் நன்றாய் இருக்காது அம்மா. நானும் மாப்பிள்ளைக்குக் கடிதம் எழுதிவிடுகிறேன்.'' லலிதாவின் பதிலுக்குக் காத்திராமல் வெளியே சென்று விட்டார் அவள் தகப்பனார். அதற்கு மேல் லலிதாவுக்கு ஒன்றும் சொல்ல முடியாமற் போய் விட்டது. இருந்தும் கண்ணம்மாவுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பி விட்டாள். தான் இன்னும் பதினைந்து தினங்களில் வருவதாகவும், அதுவரையிலும் கடைக்காரனைப் பொறுத்துக் கொள்ளச் சொல்லும்படியும் அந்தக் கடிதத்தில் கண்டிருந்தது.

நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன. லலிதா ஊருக்குச் செல்ல வேண்டிய நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. தன் தகப்பனார், தனக்குக் கொடுத்த நூறு ரூபாயைப் பத்திரமாக வைத்துக் கொண்டாள் லலிதா.

தம்பியின் துணையுடன் சென்னை வந்து சேர்ந்தாள் லலிதா. ஆனால் ரயில் நிலையத்தில் அவள் ஆவலுடன் எதிர்பார்த்த அவள் கணவன் அவளை அழைத்துப் போக வரவில்லை.

சிறிது வருத்தத்துடன் வீட்டை அடைந்தாள் லலிதா. வண்டிக்காரனுக்குச் சில்லறையைக் கொடுத்து விட்டுப் பெட்டி படுக்கையை உள்ளே வைத்து விட்டு ஆவலும் அவசரமும் ஒன்றையொன்று போட்டியிடக் கண்ணம்மாவைக் காண அடுத்த வீட்டுக்குச் சென்றாள் லலிதா. அங்கும் அவளுக்கு ஏமாற்றமே கண்டிருந்தது. அவள் இல்லை.

உடனே தம்பியை அழைத்துக் கொண்டு கடைக்குச் சென்றாள் லலிதா. கொண்டு வந்திருக்கும் பணத்தைச் செட்டியார் முன்பு வைத்துவிட்டு, தான் சொல்லிவிட்டுப் போன நேரத்தில் பணம் அனுப்பாததற்கு மன்னிக்கும்படி வேண்டினாள்.

''போன வாரமே உங்கள் கணவர் பணத்தைக் கொடுத்து விட்டார் அம்மா!'' என்றார் கடைக்காரச் செட்டியார்.

கடைக்காரர் சொன்ன பதிலைக் கேட்டவுடனேயே லலிதாவின் தலை சுழன்றது.

கணவன் முகத்தில் எப்படி விழிப்பது? அவரிடம் தான் செய்த குற்றத்தைக் கூறி மன்னிப்புக் கேட்க வேண்டும் என்ற எண்ணத்துடன் வீடு திரும்பினாள்.

தன் கால்களில் வந்து விழுந்த லலிதாவைத் தூக்கி நிமிர்த்தினான் சங்கர்.

''என்னை மன்னித்து விடுங்கள். தெரியாமல் செய்து விட்டேன்.'' நீர் மல்கும் கண்களுடன் நாத் தழுதழுக்கக் கூறினாள் லலிதா.

''இந்தக் கடிதத்தைப் படித்துப் பார். எல்லாம் உனக்கு விளங்கும்'' என்றான் சங்கர்.

அந்தக் கடிதத்தைப் புரட்டினாள். அது அவள் கண்ணம்மாவுக்கு எழுதிய கடிதம்.

''இந்தக் கடிதம் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?''

''நீ ஊருக்குச் சென்ற பிறகு கண்ணம்மாவின் குடும்பத்தில் சிற்சில சச்சரவுகள் உண்டாகத் தலைப்பட்டன. ஊரில் இருக்கும் கடைகள் எல்லாவற்றிலும் அவள் கடன் வாங்கி விடவே கடன்காரர்கள் எல்லோரும் ஒருவர் பின் ஒருவராக அவள் வீட்டைப் படையெடுக்க ஆரம்பித்தனர். கடைசியில் கடன்காரர்களுக்குப் பயந்தும், கண்ணம்மாவின் தொந்தரவைப் பொறுக்க முடியாமலும் அவள் கணவர் பள்ளி ஆசிரியர் வேலையை ராஜினாமா செய்து விட்டுக் கிராமத்துக்குச் சென்று விட்டார். அவருடன் கண்ணம்மாவும் சென்று விட்டாள். அதற்கு மறுநாள் நீ கண்ணம்மா பெயருக்கு அனுப்பிய கடிதம் என் கையில் தற்செயலாகக் கிடைத்தது. உன் கையெழுத்தாக இருந்ததினால் நான் அதைப் பிரித்து விவரம் அறிந்து கொண்டேன். உடனே நான் இது வரையிலும் சேமித்து வைத்திருந்த பணத்தைக் கொடுத்துக் கடனை அடைத்து விட்டேன்.''

''தயவு செய்து, 'மன்னித்தேன்' என்று ஒரு வார்த்தை சொல்லுங்கள்........அப்பொழுதுதான் என் மனம் சாந்தியடையும்.''

''மன்னிப்பு எதற்கு லலிதா? உன் மனம் திருந்தி விட்டது என்று எனக்குத் தெரியும். எப்பொழுதும் 'ஆனமுதலில் அதிகம் செலவானால்' என்ற செய்யுளையும், 'சேரிடம் அறிந்து சேர்' என்ற பழமொழியையும் நீ மனத்தில் வைத்துக் கொண்டால் அதுவே போதும்.'' சங்கரின் வார்த்தைகளில் அன்பும் பண்பும் நிறைந்திருந்தன.

லலிதா புதிய மாறுதலோடு உள்ளே சென்றாள். தவித்துக் கொண்டிருந்த அவள் உள்ளம் இப்பொழுது மாசு மறுவற்று விளங்கியது.

# குடும்பத்தில்

# ஓர்

# அறிவாளி



வீட்டில் ஒரு
ரேடியோ இருந்
தால், குடும்பத்தில்
ஒரு 'அறிவாளியும்'
இருப்பார்—அதைக்
கெடுப்பதற்கு! ஆனால்,
அது ஒரு பிலிப்ஸ் செட்
டாக இருந்தால் உங்
கள் வியாபாரியின்
யோசனையை நாடுங்கள்
பிலிப்ஸ் வியாபாரிக்கு உங்களுடைய
ரேடியோவைப்பற்றி நன்றாகத் தெரியும்.
அவரிடம் 'பிலிப்ஸ் ஸர்வீஸ் மானுவல்'
என்ற புத்தகமும், சரியான பழுதுபார்க்கும் கருவிகளும்
உண்மையான தனி உறுப்புக்களும் இருக்கின்றன.

எனவே உங்கள் ரேடியோவுக்கு மேற்பார்வை தேவைப்பட்டால் . . .

## . . . அதை உங்கள் பிலிப்ஸ் வியாபாரியிடம் ஒப்படைத்து விடுங்கள்



பிலிப்ஸின் விற்பனையும் சேவையும் ஒருங்கே கைகோர்த்துச் செல்கின்றன. பிலிப்ஸ் ரேடியோ தொல்லையற்ற சேவையை அளிக்கிறது. அதன் தயாரிப்பின் ஒவ்வொரு நிலையிலும் அது நன்கு பரிசோதிக்கப்படுகிறது. பிலிப்ஸ் ரேடியோ எங்கு விற்கப்பட்டாலும், அதை எல்லா இடத்திலும் பழுதுபார்த்துக் கொள்ளலாம்.




# பிலிப்ஸ் ரேடியோ

பிலிப்ஸ் எலக்ட்ரிகல் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்

PS.PH. 205

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

*தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு*



இந்த பரத நாட்டியக்காரியைப் போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம்... மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால். குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட




கால்கேட்

# எக்லா

டால்க் பவுடர்

EC/G/3A

உங்கள் வாழ்க்கையை

# மலச் சிக்கல்

ஒரு பாரமாக்க வேண்டாம்.



தலைநோவுகள், உடம்பேரிச்சல், பசி மந்தம், ஜீவசக்தியின்மை, மேனியழகு மங்குதல், இவையெல்லாம் ஜீரண உறுப்புகளில் அசுத்தமிருப்பதன் நேரடியான விளைவாகும். மலச் சிக்கல் உங்கள் வாழ்வையே ஒரு சுமையாகக் கருதும்படி செய்ய விடக்கூடாது. ப்ரூக்லாக்ஸை உட்கொண்ட மாத்திரத்தில் புதிய ஜீவசக்தியுண்டாகும் ருசிமிகுந்த இந்த சாக்லேட் பேதி மருந்து குடலின் வேலையை சகஜமாக்கி கழிவடைப் பொருள்களை நிச்சயமாக வெளியேற்றுகிறது. இன்றிரவே ஒரு சாக்லேட் சாப்பிட்டு, காலை எவ்வளவு புத்துணர்ச்சியுடன் சக்தியுடன் விளங்குகிறீர்களென்பதை பாருங்கள்.

ஆகவே ப்ரூக்லாக்ஸ் என்று கேட்டு கவனித்து வாங்குங்கள்!




## ப்ரூக்லாக்ஸ்

ஒரே இரவில்

உங்களை குணமாக்கும்

(லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேட்டரீஸ் லிட். தயாரிப்பு)

ஏஜண்டுகள்: ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி 99-A, அரமனைக்கார தெரு, மதராஸ்-1

GMA.19

# படித்துப் பாருங்கள்

### சத்தியாக்கிரகம்

**கா**ந்தி மகான் உருவாக்கிய சத்தியாக்கிரகமானது ஒரு தனி சாஸ்திரமாகும். 'மகாத்மா காந்தி உண்ணுவிரதமிருந்தார், நானும் உண்ணுவிரதம் அனுஷ்டிக்கிறேன்' 'காந்திமகான் சட்ட மறுப்புச் செய்தார், நானும் சட்டமறுப்புச் செய்வேன்;' 'காந்திஜி சர்க்காருடன்ஒத்துழைக்க மறுத்தார். நானும் சர்க்காருடன் ஒத்துழைக்க மறுப்பேன்' என்றெல்லாம் கூறுவோர் சத்தியாக்கிரகத் தத்துவத்தை நன்கு அறிந்தவர்கள் என்று சொல்வதற்கில்லை. உண்மையாகவே காந்திஜியின் அடிச் சுவடுகளைப் பின்பற்றி சத்தியாக்கிரக தத்துவத்தை அறிய விரும்புவோர், காந்திஜியின் சத்தியாக்கிரக விளக்கத்தை நன்கு வாசித்துப் பயன்பெற வேண்டும். சத்தியாக்கிரக சம்பந்தமாக, காந்திஜி எழுதிய கட்டுரைகளைத் தொகுத்து 'சத்தியாக்கிரகம்' என்ற பெயரில் ஆமதாபாதிலுள்ள நவஜீவன் பிரசுராலயத்தார் ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள நூலை மதுரை தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஸ்தாபனத்தார் தமிழில் வெளியிட்டிருக்கிறார்கள். சத்தியாக்கிரக தத்துவத்தைச் சந்தேகத்துக்கு இடமின்றிச் சரியாகத் தெரிந்துகொள்ள விரும்புவோருக்கு இந்த நூல் அத்தியாவசியமானது.

கிடைக்குமிடம் : தமிழ் நாடு காந்தி நினைவு நிதி, '' ரவி '' சொக்கி குளம், தல்லாகுளம் தபால், மதுரை. விலை : ரூபாய் ஒன்று.

### History of Indian Freedom

**பா**ரத நாட்டிலே 1857-ம் ஆண்டில் ஆரம்பமான விடுதலைப்போரிலிருந்து 1950-ல் இந்தியா குடியரசாகத் திகழ்ந்தது வரையில் சுவை ததும்பும் சுருக்கமான வரலாறு இந்த ஆங்கிலப் புத்தகத்தில் அடங்கியிருக்கிறது. இந்திய மக்களின் விடுதலைப் போராட்டத்தையும் பாரத நாடு சுதந்திரம் பெறுவதற்காகத் தேசபக்தர்கள் செய்த தொண்டையும் சிரமமின்றி அறிந்து கொள்ள விரும்புவோருக்கு இப்புத்தகம் மிகவும் உதவியாக இருக்கும். எழுபது பக்கங்கள் கொண்ட இந்நூலை எவரும் சிலமணி நேரத்தில் எளிதில் வாசித்து முடிக்கும்படி எழுதிய ஸ்ரீ ஆர். பத்மநாபனின் (உதவித் தலைமை ஆசிரியர், முனிசிபல் ஹைஸ்கூல், வேலூர்) தொண்டு பாராட்டு தற்குரியது. கிடைக்குமிடம் : விட்டில் ப்ளவர் கம்பெனி, 8, ரங்கநாதன் ரோடு, சென்னை—17. விலை : ரூ. 1.

### புது நிலச்சட்டங்கள்

**பா**ரத நாட்டிலே ஆங்கிலத்தைத் தவிர வேறு எந்த மொழியிலும் சட்டப் புத்தகங்கள் இருப்பது முடியாத காரியம் என்ற எண்ணம் நிலவிய காலம் உண்டு. ஆனால், அந்தக் காலம் மலையேறி விட்டது. இனி நாளடைவில் சட்டப்புத்தகங்கள் யாவும் ராஜ்ய மொழிகளில் பிரசுரமாகும் காலம் அதிக தூரத்தில் இல்லை. ஹிந்து வாரிசு உரிமைச் சட்டம், விவாகச் சட்டம் போன்ற முக்கியமான சட்டங்கள் ஏற்கெனவே தமிழ் மொழியில் புத்தகங்களாக வெளியாகியுள்ளன. அச்சட்டங்களைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்ட ஸ்ரீ ஆர். ஜி. ராஜன் பி. எஸ்ஸி. பி. எல்., அவர்கள் இப்போது ''புது நிலச்சட்டங்கள்'' என்ற நூலை வெளியிட்டுள்ளார். இந்நூலில் 1956-ம் வருஷ நியாய வாரச் சட்டம், சாகுபடிக் குத்தகைதாரர் பாதுகாப்புத் திருத்தச் சட்டம், திருத்தப்பட்ட தஞ்சை பண்ணையாட்கள் பாதுகாப்புச் சட்டம் முதலிய சட்டங்கள் அடங்கியுள்ளன. ஆங்கிலம் தெரியாத சகலரும் இந்த நூலிலிருந்து மேற்படி சட்டஷரத்துக்களைச் சந்தேகத்துக்கு இடமின்றி நன்கு தெரிந்து கொள்ளலாம். விசேஷ அக்கறையுடன் இத்தகைய முக்கியமான சட்டங்களைத்தமிழில் மொழிபெயர்த்துப்புத்தகங்களாக வெளியிட்டிருப்பது மிகவும் போற்றத்தக்கதாகும். கிடைக்குமிடம்: வேல் புத்தக நிலையம், 162ஏ. ராயப்பேட்டை ஹைரோடு, மைலாப்பூர் சென்னை-4 விலை ரூ 1.

### சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள்

**பா**ரத நாட்டின் பண்பும் பெருமையும் கடல் கடந்த நாடுகளுக்கும் சென்று பரவச் செய்த பெருமை சுவாமி விவேகானந்தர் அவர்களையே சாரும். பாரதத்தின் பழம் பெருமைக்கு ஆணிவேராக விளங்கும் ஆத்ம ஞானத்தை அகில உலகுக்கும் அள்ளி வழங்கியவர் விவேகானந்தர்தான். அந்த ஞான புருஷர் அன்று செய்த முதல் முழக்கம்தான் இன்று சுதந்திர பாரதத்தின் முழுப் பெருமைக்கும் முழுக் காரணமாயிருக்கிறது.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் மூல விக்கிரகம் என்றால் விவேகானந்தர் உற்சவ விக்கிரகம் என்று கொள்ளலாம் ; பரமஹம்ஸர் வேத வேதாந்தக் கருத்துக்களின் மூலம் எனக் கொண்டால் விவேகானந்தர் அதன் விரிவுரை எனக் கொள்ளலாம்.

விவேகானந்தர் உலக முழுதும் திக்கு விஜயம் செய்து தாய்நாடு திரும்பியதும், கங்கை நதி தீரத்தில், பேலூரில் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தை நிறுவி அங்கே தங்கியிருந்தார். அப்போது அவரிடம் பக்தி கொண்ட பல மெய்யன்பர்கள், ஞான நெறியைப் பற்றிப் பல நுணுக்கமான பிரச்னைகளை எழுப்பி விளக்கம் கோரினர். விவேகானந்தர் அப்பொழுது கூறிய விளக்கங்களைத் தொகுத்துக் குறித்து வைத்திருந்த சீடர்கள் '' உத்போதன் '' என்னும் வங்கப் பத்திரிகையில் வெளியிட்டனர். மேற்படி கட்டுரைகளின் மொழிபெயர்ப்பே இந்நூல்.

பாரத நாட்டின் பண்பு, சமயநெறிகள், சமூகம், பொருளாதாரம், தேசப்பற்று, நாகரிகம் முதலிய சகல துறைகளிலும் உள்ள எத்தனையோ சிக்கலான பிரச்னைகளையெல்லாம் சுவாமி விவேகானந்தர் தெளிவாக விளக்கியிருக்கிறார். மக்கட் குலத்துக்கு நன்மை பயக்கும் சன்மார்க்க நெறியின் சாரமாக விளங்கும் இந்நூல் அறிவுக்கு அரிய விருந்து என்று கூறுவது மிகையாகாது.

மொழி பெயர்ப்பு : சுவாமி விபுலானந்தர்; பிரசுரம் : ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை-4 ; விலை : ரூ. 3—8—0.



# ஏன் இந்தக் கல்யாணம்?

**வ**னஜா சாய்வு நாற்காலியில் அமர்ந்து ஒரு பத்திரிகையை மடியில் விரித்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் இரு கைகளும் முகத்துக்கு இட்ட ஆரம் போல் தலைக்கு மேலே ஒன்றோடு ஒன்று கோத்துக் கொண்டு கிடந்தன. அவளது கரு விழிகள் எங்கோ யோசனையில் ஆழ்ந்து கிடந்தன. அவள் தாயார் மரகதம் அவர்கள் வீட்டின் முன்னிருந்த மூங்கில் கதவைத் திறந்துகொண்டு வந்தாள். மகள் வாசல் வராந்தாவில் இருப்பதைப் பார்த்து, "ஏன் வனஜா! எழுந்து வந்து விட்டாய்?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தாள்.

"எனக்குத்தான் உடம்பு நன்றாகி விட்டதே, அம்மா!"

" நன்றாகி விட்டது. கொஞ்சம் உலாவக் கூடப் போகலாம், உன்னால் முடிந்தால்."

"போகலாம் என்றுதான் பார்க்கிறேன், தோட்டம் கோடி வரையிலாவது."

" இரு. நானும் வருகிறேன்" என்று கூறிக் கொண்டே தாயும் அவளுடன் வந்தாள். அப்பொழுதுதான் மரகதம் வைத்தியசாலையிலிருந்து வந்திருந்தாள். நர்ஸ் உடையை இன்னும் களைய வில்லை. அப்படியே தன் மகளுடன் நடந்து வந்தாள்.

"வனஜா! உன் மனசில் என்ன அம்மா? அம்மாவிடம் சொல்லலாமா?"

" என்ன இருக்கலாம் என்பது உனக்குத் தெரியாதா?" என்றாள் வனஜா.

" ராமு வரப் போகிறானே, அப்பொழுது இந்தவிதமாக இளைத்து அழகு இழந்து இருக்கிறோமே என்று கவலைப்படுகிறாயா?" என்று கேட்டு விட்டு வனஜாவின் முகத்தை ஊடுருவிப் பார்த்தாள் மரகதம். அந்தப் பார்வையில் பரிவுடன் ஒருவித ஏகத்தாளமும் கலந்திருந்தன.

மகள் தன் தாயை ஒரு முறை பார்த்தாள். அவள் முகத்தில் சாந்தமும் பொருள் நிறைவுமே இருந்தன. "நான் இன்னமும் சிறு குழந்தை என்று அபிப்பிராயமா, அம்மா?"

"நீ என்றைக்கும் என் வரையில் குழந்தை தான்!" மரகதத்தின் குரல் கரகரத்தது.

" அம்மா!"

" என்ன சொல், வனஜா!"

" ராமுவைப் பார்த்து நான்கைந்து வருஷங்கள் ஆகிவிட்டன. குழந்தை முதல் நான் அவருக்கே, அவர் எனக்கே என்று இருந்து விட்டது- உண்மைதான். ஆனாலும் இந்த நான்கைந்து வருடங்களில்தானே நாங்கள் உண்மையான வளர்ச்சி அடைந்தது? ஒரு சமயம் அவருக்கு என்னைப் பிடிக்காமலோ, அல்லது எனக்கு அவரைப் பிடிக்காமலோ இருந்து விட்டால்....?"

"ஏன் பிடிக்காமல் போகும்? இதுவரை ராமு எனக்கு எழுதி வரும் கடிதங்களிலோ, என் அண்ணாவின் பேச்சிலோ ஒருவித மாறுதலும் இல்லையே!"

"மாமாவும் மாறவில்லை. நீயும் மாறவில்லை. அதைப் பற்றியே பேச்சில்லை. ஒரு

வேலை எங்கள் இருவருக்கும் விருப்பமில்லை என்றால் நீங்கள் வற்புறுத்தமாட்டீர்களே அம்மா?'' என்று கேட்டாள் வனஜா.

மரகதம் யோசனையில் ஆழ்ந்தாள். அவள் நெற்றியை மூன்று கோடுகள் உழுதன. மகள் மனத்தில் இந்த ஒரு பிரச்னை இத்தனை நாட்கள் கழித்து எழலாம் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. அழகான ஒரு சிற்றிலை அமைத்துப் பார்த்து, மகிழும் நேரத்தில் அது கரைந்து மணலோடு மணலாகப் போய் விடுமோ என்று நினைக்கும் மாத்திரத்தில் மரகதத்தின் உள்ளம் மிகவும் அச்சம் கொண்டது.

''அம்மா! உனக்குத் துயரமளிக்க நான் விரும்பவில்லை. ராமுவை மணந்து கொள்கிறேன்'' என்றாள் வனஜா.

''இல்லை குழந்தை. நீ கூறுவது சரிதான். உங்கள் இருவருக்கும் பிரியமில்லாவிட்டால் நாங்கள் வற்புறுத்தமாட்டோம்'' என்றாள் மரகதம் உறுதியாக. வனஜாவின் கண் பெருமிதத்துடன் மிளிர்ந்தது. தாயின் பாசத்தை நினைத்ததும் அவளுக்கு நெஞ்சில் அடைத்துக் கொண்டது.

**ம**ரகதத்துக்குப் பிறந்தது இருவர்; சிவகுமார் என்ற மகனும், வனஜாவும்.




மரகதத்தின் கணவர் கல்லூரியில் பேராசிரியராக இருந்தார். அவர் டைபாய்டு வந்து இறந்து விடவே, மரகதம் நர்ஸாகப் பயிற்சிபெற்றுத் தன் வாழ்வைப் பொதுநல சேவைக்கு அர்ப்பணம் செய்தாள். தன் அண்ணன் வீட்டில் இருந்தபடியே உள்ளூர் ஆஸ்பத்திரியில் வேலை பார்த்து வந்தாள். சிவகுமாரும் வனஜாவும் மாமன் குழந்தைகளுடன் அழகாக வளர்ந்தனர். சுமார் பதினெட்டு வயதில் சிவகுமார் ஒரு நாள் குளிக்கச் சென்றபோது ஆற்றோடு மிதந்து விட்டான். மரகதம் மீண்டும் உயிரில் பற்றற்றுப் பித்துப் பிடித்தவள் போல ஆகிவிட்டாள். அப்பொழுதுதான் அவள் அண்ணன் அவளுக்குச் சமாதானம் சொல்லும்பொழுது, ''மரகதம்! நீ வருந்தினால் என்னால் பார்க்கச் சகியாது. கடவுள் நியதிக்கு நாம் என்ன செய்ய முடியும்? இதோ ராமு வருகிறான் பார். இனி அவன் உன் மகன். வனஜாவை அவனுக்குக் கொடுத்துவிடு. உனக்கு மருமகனாக இருக்கட்டும்'' என்று கூறினார்.

குழந்தை முதல் வேடிக்கையாகக் கூறிக் கொண்டிருந்த விஷயத்தை உறுதியாக எல்லோரும் நம்ப ஆரம்பித்தனர். இன்று வனஜாவுக்கு வயது இருபத்திரண்டு. ராமுவுக்கு இருபத்து எட்டு. வனஜா ஆசிரியப் பயிற்சி பெற்று ஓர் உயர்தரப் பள்ளியில் ஆசிரியையாகப் பணியாற்றி வந்தாள். அவள் பள்ளிக்குப் போவதற்கு வசதியாக இருக்க வேண்டும் என்பதற்காக மரகதம் தனது ஜாகையை நகரத்தின் மற்றொரு பகுதிக்கு மாற்றிக் கொள்ளும்படியாயிற்று. ராமு தில்லியில் ஒரு வேலையில் இருந்தான். அப்படியே அவன் சீமைக்குப் போய்ப் படித்து விட்டு வந்து தில்லியிலேயே பெரிய பதவிக்கு வந்து விட்டான். அவன் தனது பெற்றோரையும், அத்தையையும் பார்க்க வந்தபோது வனஜா வெளியூர் சென்றிருந்தாள். இப்பொழுது அவன் வனஜாவுக்காகவே — அவளைப் பார்க்கவே — மீண்டும் நாளை வரப் போகிறான். அதை உத்தேசித்து அன்று இரவு நகரத்துக்குள் இருக்கும் மாமன் வீட்டுக்குத் தாயும் மகளும் போவதாயிருந்தார்கள். அச் சந்திப்பு எப்படி இருக்குமோ என்று வனஜாவுக்கு உள்ளூற யோசனையாக இருந்தது.

அவர்கள் மாமன் வீட்டுக்குள் நுழைவதற்கும் ராமு எங்கேயோ வெளியிலிருந்து வருவதற்கும் சரியாயிருந்தது.

''ராமு வந்து விட்டானா, அண்ணா! நாளைக்குத்தானே வருவதாக இருந்தான்?'' என்று கேட்டாள் மரகதம்.

''ஆமாம். யாரோ சிநேகிதன் காரில் வந்தானாம். இரண்டு மணி நேரம் முன்னால் வந்தான். எப்படியும் நீங்கள் வரப் போகிறீர்களே என்று சொல்லி அனுப்பவில்லை'' என்றார் வனஜாவின் மாமா.

''என்ன, அத்தை?'' என்று கேட்டு விட்டு ராமுவும் வந்து ஒரு நாற்காலியில் அமர்ந்தான். தலைக்கு ஏதோ வாசனைத் தைலம் போட்டு மழமழவென்று சீவி விட்டுக் கொண்டிருந்தான் அவன். மெல்லிய துணியில் ஜிப்பாவும், கால் அங்குலத்தில் பளிச்சிடும் ஜரிகை வேஷ்டியும் அணிந்திருந்தான். கையில் கடிகாரம், விரலில் மோதிரம், காலில் புது மாதிரியான வேலைப்பாட்டோடு கூடிய செருப்பு — வனஜா மெதுவாக ஒவ்வொன்றாகக் கவனித்தாள். அவள் ராமுவின் முகத்தைப் பார்த்தபோது ராமுவும் அவளைக் கவனிப்பதைப் பார்த்தாள். சட்டென்று தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

மறுநாள் பல தடவைகள் ராமு அவள் இருந்த இடத்துக்கு வர நேர்ந்தது. கதவைத் திறக்கும்போதெல்லாம் அனாவசியமான ஓர் அதிக சத்தத்துடன் திறப்பதைக் கேட்டாலே வனஜாவுக்குத் தெரிந்து விடும், ராமு வருகிறான் என்று. எத்தனை வித ஆடைகள் வைத்திருந்தான் அவன்! வேளைக்கு ஒன்று அணிந்து கொண்டான்! அவன் உடை, அவன் தோரணை, பேச்சு யாவும் வீட்டில் உள்ள எல்லோரையும் மிகவும் கவர்ந்தன. ''பதவியிருந்து விட்டால்போதுமா? வகிக்கத் தெரிய வேண்டாமா? நம் ராமுவுக்கு ஒரு சமஸ்தானத்தையே கொடுத்தால் கூட ராஜரீகமாக வகிப்பான் — அதெல்லாம் ஒரு திறமை!'' என்று பெரியவர்கள் அவனை இடைவிடாது புகழ்ந்தபடியே இருந்தனர்.

மரகதம் கூடத்துப் பக்கத்து அறையில் தன் தமையனிடமும், மதனியிடமும் தாழ்ந்த குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தாள். வனஜா கூடத்து ஊஞ்சலில் கவிழ்ந்து படுத்துக் கொண்டு ஒரு கையைத் தரையில் நாட்டி அதன் மூலமாக ஊஞ்சலைச் செலுத்தியபடி யோசனையில் ஆழ்ந்திருந்தாள். யாரோ ஊஞ்சல் சங்கிலியைப் பிடிப்பதை உணர்ந்து வனஜா எழுந்தாள். ராமுதான் அவளையே உரிமை, பரிவு, சலுகை முதலிய உணர்ச்சிகள் மிகுந்த ஒரு பார்வையுடன் பார்த்துக் கொண்டு நின்றான். வனஜா வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து நின்றாள்.

''நான் உன்னைப் பார்க்கவே வந்திருக்கிறேன் என்பது தெரியுமல்லவா?''

வனஜா அவனுக்குப் பதில் சொல்லாமல் பெரியவர்கள் குரல் வரும் திக்கை நோக்கினாள். ராமு ஒரு புன்முறுவல் பூத்தான். ''நான் அவர்களைக் கேட்டுக் கொண்டுதான் வந்தேன். உன்னை ஒரு முக்கியமான கேள்வி கேட்க வேண்டும் என்றுதான்....''

'என்ன' என்று பொருள்படும்படி நிமிர்ந்து நோக்கினாள் வனஜா.

''என்னை மணக்க உனக்குச் சம்மதம்தானா? இரு, இரு. நான் பேசின பிறகு பேசு. பெரியவர்கள் விரும்புகிறார்கள், நான் விரும்புகிறேன். அது மட்டும் போதாது. உனக்குப் பரிபூரணமாக விருப்பம் இருக்க வேண்டும், வனஜா! நாம் இருவரும் சிறு குழந்தைகள் அல்ல. உன் மனசில் உள்ளதை உள்ளபடி கூற வேண்டும்'' என்று கூறி விட்டு மிக்க ஆதுரத்துடன் வனஜாவின் முகத்தையே உற்று நோக்கினான் ராமு.

வனஜா ஒரு முறை தன்னை நோக்கிக் கொண்டாள். கைத்தறி நூல் புடவை, அதே போல ஒரு ரவிக்கை, கழுத்தில் மெல்லிய சங்கிலி, கையில் ஒரே ஒரு ஜதை வளையல். ராமுவை நோக்கினாள். ஜான வாசம் கிளம்பப் போகும் மாப்பிள்ளை போல் இருந்தான் அவன். வனஜா குனிந்தபடியே தலையை அசைத்து விட்டாள்.

''என்ன வனஜா, சொல்கிறாய்?'' என்று சற்றுப் பரபரப்புடன் கேட்டான் ராமு.

''சரிப்படாது என்று தோன்றுகிறது!''

''உனக்கு ஏற்ற....'' என்று காரமாக ஆரம்பித்தான் ராமு.

''கோபித்துக் கொள்ளலாமா? நீங்கள் என் அபிப்பிராயத்தைக் கேட்டீர்கள், சொன்னேன்'' என்றாள் வனஜா தீர்மானமாக. ராமு பதில் சொல்லாமல் விருட்டென்று எழுந்து உள்ளே போய் விட்டான். அன்று மாலைக்குள் வீட்டில் உள்ளவர்கள் எல்லாருக்குமே விஷயம் தெரிந்து விட்டது.

வனஜாவும், மரகதமும் தங்கள் இல்லம் திரும்பி விட்டனர். தாய் ஒன்றும் கூறவில்லையே தவிர, வனஜாவின் மனத்தில் மட்டும் தன் தீர்மானத்தினால் தாயை ஏமாற்றத்துக்கு ஆளாக்கி விட்டோமோ என்ற பயம் இருந்துகொண்டே இருந்தது. ஒரு நாள் மரகதமே அவளிடம் கேட்டபோதுதான் வனஜாவுக்குச் சற்று நிம்மதி பிறந்தது.



# கல்கெமிகோவின்
# காந்தரிடைன்
## கூந்தல் தைலம்



மிகவும் சுத்தமான ஆலிவ் ஆயிலும் மற்ற தாவர எண்ணைகளும் சிறந்த நூதனமான காந்தரிடைனுடன் விஞ்ஞான முறையில் கலக்கப்பட்டிருக்கின்றன. இத்தைலம் வழுக்கையை நீக்கி முடி வளர்ச்சியைத் துரிதப்படுத்துகிறது.

இதன் நறுமணம் அலாதியானது. மிகச் சிறந்தது.

Tam

5 அவுன்ஸ் அழகான சீசா

**கல்கத்தா கெமிகெல்,** கல்கத்தா - 29.

---

தென் இந்திய ஆபீஸ் : 5/149, பிராட்வே, சென்னை -1

---




மனைவி:—தம்ப பிள்ளை மணியார்டர் குறிப்பில் என்ன எழுதி யிருக்கிறான்?

கணவர்:—'இந்த மணியார்டர் கொண்டு வரும் தபால்காரருக்கு அவசியம் இனாம் கொடுக்கவும்' என்று ரொம்ப அக்கறையாக எழுதி இருக்கிறான்!

---

"வனஜா! ராமு உன்னை வேண்டாம் என்றானா, அல்லது நீ. . . ."

"நான்தானம்மா."

"நான் நினைத்தேன் . ." என்று மரகதம் பதில் சொல்லும்போது அவள் குரல் எப்படியோ இருந்தது.

"இங்கிருந்து கிளம்பும் போதே வேண்டாத யோசனைகளைச் சுமந்து கொண்டே சென்றாய். திருஷ்டி சுத்தமாக இருந்தால் தானே உண்மையான நிலை புலப்படப் போகிறது?" என்றாள் மரகதம் தொடர்ந்து.

"அப்படியில்லை, அம்மா. நான் அவரை மணப்பது என்ற தீர்மானத்துடனே இருந்தேன். அவர்தான் வலிய வந்து கேட்டார். அப்பொழுது உண்மையை மறைத்துப் பேசத் தோன்றவில்லை."

"காரணம் என்ன?"

"தியாகமும், தூய அன்பும், தன்னடக்கமும்தான் வாழ்வின் ஒளி என்று எனக்குத் தோன்றுகிறது, அம்மா. நீ அலுவல் செய்து பிழைக்கிறாய். மாமி வீட்டில் இருக்கிறாள். ஆனால் நீங்கள் இருவரும் எனக்கு ஒரே மாதிரி தான் தென்படுகிறீர்கள். மாமி எவ்வளவு தன்னடக்கத்துடன், எளிய தன்மையுடன் அன்பு இல்லறம் நடத்துகிறாள்!"

"அவனை மாமியாராக ஏற்க வேண்டாம் என்று தோன்றி விட்டதே உனக்கு? அவள் மனத்தில் எவ்வளவு ஏமாற்றம் இருந்திருக்கும் என்று நினைக்கிறாய்?"

"இதுதானம்மா வாழ்க்கை என்கிறேன் நான் — பரஸ்பரம் அன்பு உறவு கொண்டு நீங்கள் பழகுகிறீர்களே! உன் மனம் நோகுமோ என்று அவர்கள் தவிக்கிறார்கள். அவர்கள் மனம் நோகுமோ என்று நீ துடிக்கிறாய். கணவனும் மனைவியும் இதே போல் இருக்க வேண்டாமா?"

"ராமு எந்த விதத்தில் உன்னிடம் அன்பு குறைந்தவனாகத் தோன்றி விட்டான்?"

"தன் ஆடை, அலங்காரம், தன் அழகு, தன் வசதி, தன் பெருமை — இதிலேயே லயித்து விட்டாரே அவர்? அவரை மணந்தால் நான் அவருக்கு அடி பணிந்து, பூஜை செய்து கொண்டிருக்கும் வரையில்தானே அவர் சந்துஷ்டியுடன் இருப்பார்? அப்படி இருக்க முடியுமா?"

"உனக்காகத்தான், நீ மெச்சுவதற்காகத் தான் அவன் அப்படி இருந்தானோ என்னவோ, உனக்கு எப்படித் தெரியும்?"

"விளையாட்டுக்காகக் கூடப் பிறர் நோகப் பேசுவதும், வெற்று ஆடம்பரமும் எனக்குப் பிடிக்க வில்லை, அம்மா! என்னை மன்னிக்க வேண்டும்!" என்று கண்டிப்பாகக் கூறிவிட்டாள் வனஜா. அதற்குப் பிறகு மரகதமும் பேசவில்லை.

மூன்று மாதங்களுக்குப் பிறகு ஒருநாள் திடீரென்று ஒரு செய்தி வந்தது.

"சாருமதி என்ற பெண்ணை ராமு மணந்துகொண்டு விட்டானாம். அதைப் பற்றிக்கூட யாருக்கும் குறை இல்லை. பெற்றோருக்குச் சொல்லாமல் தாய் தந்தையற்ற அநாதைபோல் போய்க் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறான். அதுகூடப் பரவாயில்லை. அவன் கல்யாணம் செய்து கொண்ட பெண் சாருமதிக்குப் புற்றுநோயாம். வைத்தியர்கள் அவள் ஆயுளை அளந்து விட்டார்களாம். அந்தப் பெண்ணை மணந்திருப்பதில் ராமுவுக்கு என்ன அபிப்பிராயமோ? யாருக்கும் தெரியவில்லை."

இச்செய்தியைக் கேட்டது முதல் வனஜாவின் மனம் நிலைகொள்ளாமல் தவித்தது. ஏற்கனவே ராமுவைத் தான் மறுத்தது சரியில்லையோ என்ற ஐயம் இருந்து வந்தது. இப்பொழுது இந்தச் செய்தியைக் கேட்டதும் அவள் உள்ளம் துயரத்தில் மூழ்கி விட்டது.

'நான் எவ்வளவு சுயநலக்காரியாகிவிட்டேன்! என் ஒருத்தியின் வாழ்க்கை இன்பத்தை எண்ணி அவரை மறுத்து விட்டேன். அவரை மணந்து கொண்டு பிறகு அவரை மாற்ற முயன்றிருக்கக் கூடாதா?' என்று வனஜா பலவாறும் தன்னை நிந்தித்தபடியே இருந்தாள்.

ஒரு வருடம் சென்றது. தன்னுடைய க்ஷேமத்தைக் குறித்து இரண்டொரு வரிகள் தவிர அதிகமாகக் கடிதம் எழுதுவதையே விட்டு விட்டான் ராமு. பிறகுதான் ஒருநாள் திடீரென்று வீடு வந்து சேர்ந்தான். அவனிடம் பேசவே அஞ்சினார்கள் பெற்றோர்கள்.

ராமுவே பேசினான்: "அப்பா, சாரு போய் ஐந்து நாட்களாகின்றன" என்றான்.

"ஏன் எங்களுக்கு எழுதவில்லை?" என்று மட்டுமே கேட்டார் தந்தை.

"அவளை நன்றாக அறியாத உங்களை வீணாகத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்றுதான் எதுவும் எழுதவில்லை" என்றான் ராமு.

**மா**லை வெழுத்து மறையும் வேளை. மரகதம் அண்ணன்வீட்டுக்குப் போயிருந்தாள். வனஜா மட்டும் வீட்டில் இருந்தாள். கடவுள் படத்தின் முன் விளக்கைப் பொருத்தி விட்டுக் கைகூப்பி, கண்மூடி நின்றாள். அவள் உள்ளம்

வெடித்து இரண்டு முத்துக் கண்ணீர் அவள் கன்னங்களில் வழிந்தது. அப்பொழுது அவளைத் தவிர யாரோ அந்த அறையில் இருப்பது போல ஓர் உணர்வு ஏற்படவும் அவள் சட்டென்று கண் விழித்துப் பார்த்தாள். அங்கே வாசற்படியில் சாய்ந்தவண்ணம் அவளையே நோக்கிக் கொண்டு நின்றான் ராமு. அவள் பேச நா எழாமல் தவித்தாள்.

ராமுதான் முதலில் பேசினான். அவள் முகத்திலிருந்து தன் பார்வையை வாங்காமலே, ''வனஜா! நீ ஏன் இன்றைக்கு எங்கள் வீட்டுக்கு வரவில்லை?'' என்று கேட்டான்.

வனஜா தலைகுனிந்து மௌனம் சாதித்தாள். பெருமூச்சு ஒன்று அவள் நெஞ்சினின்று திக்கித் திக்கி வெளியே வந்தது.

''வனஜா, என்னைப் பார், என்மீது உனக்கு என்ன கோபம்?''

''கோபமா?'' என்று கேட்டாள் வனஜா. அவள் கண்களிலிருந்து பல பலவென்று நீர் உதிர்ந்தது. ''என்னை மன்னித்து விடுங்கள். உங்கள் வாழ்க்கையைச் சீர்குலையச் செய்துவிட்டேன்'' என்று அவள் இறைஞ்சினாள்.

''வனஜா. அப்படிப் பேசாதே. என் வாழ்க்கையை மேன்மையுறச் செய்தவள் நீதான்! அன்று நீ என்னை மறுத்து....''

''போதும். நீங்களும் குத்திக் காட்டாதீர்கள். என் மனச்சாட்சி என்னை வேண்டிய மட்டும் குத்திக் காட்டி விட்டது.''

''வனஜா! நான் சொல்வதைச் சற்றுக் கேள் — அன்று நீ வாய் திறந்து பேசவில்லை: என்னைப் பார்த்தாய். உன்னையே பார்த்துக் கொண்டாய், பிறகு என்னை மறுத்து விட்டாய். வாய் விட்டுப் பேசாவிட்டாலும் உன் குறிப்பை அறிந்தேன். உன் எளிய தோற்றமும், என் ஆடம்பரமும் ஒத்து வராது என்று நீ கட்டிக் காட்டியது என்னை என்னவோ செய்தது. ஆயினும் உன் மனத்தை மாற்றத் தோன்றவில்லை. உன்மீது ஒரு விதக் கோபம்தான் உண்டாயிற்று எனக்கு. ஆனால் உன்னைத் தவிர எந்தப் பெண்ணையும் நினைத்திராத என்னால் உன்னை மறக்கவே முடியவில்லை. நாளாக நாளாக உன் எளிய தோற்றம் எனக்குத் தெய்வத் தன்மை பெற்றதாகத் தோற்றமளித்தது. என் படாடோபம் எனக்கு வெறுப்பை ஊட்டியது. உன்னை அடையாமல் உயிர் வாழ இயலாது என்று உணர்ந்தேன். அதே நினைவாக இருந்தேன். தவிர, நம் பெற்றோர்களின் அன்பும், தியாக புத்தியும் என்னை விழிப்புறச் செய்தன. நான் இவ்வாறு ஆத்மசோதனையில் ஈடுபட்டுத் தவித்துக் கொண்டிருக்கையில்தான் சாருமதியின் தகப்பனார் தன் மகளின் நிலையைப் பற்றி ஒரு நாள் என்னிடம் கூறி வருத்தப்பட்டார். அவள் நெடுநாள் வாழமாட்டாள் என்று அறிந்து அவளுக்குக் கல்யாணம் செய்யாமல் வைத்திருந்தார். ஆனால் அந்தப் பெண்ணுக்கோ எல்லாப் பெண்களையும் போல் தனக்கு மண வாழ்க்கை கிட்டவில்லையே என்ற ஏக்கம். அந்தப் பெண்ணின் அந்த ஆசைக்குக் காரணம், மணம் புரிந்து கொண்டு, தான் சுகபோகம் அநுபவிக்கவேண்டும் என்பதல்ல: கன்னிக் கடன் கழித்து மரணத்துக்குப் பின்னாவது நற்கதி பெற வேண்டும் என்பதேதான். ஆனால் நோயுள்ள பெண்ணை யார்தான் மணந்து கொள்ள முன்வருவார்கள்? எப்படி அவளைச் சந்தோஷப்படுத்த முடியும் என்று தெரியாமல் தவித்தார் அவள் தந்தை. அப்பொழுதுதான் நான் அவளை மணப்பதாகக் கூறினேன். அவரே என்னை எவ்வளவோ தடுத்துப் பார்த்தார். எனது பிடிவாதம் காரணமாக, அதிக சந்தடியில்லாமல் எங்கள் திருமணம் நடந்தது. உன்னிடம் உண்டான கோபம்தான் என்னை அப்படிச் செய்யத் தூண்டியது. என் கதையைக் கேட்டு நீ மனம் புழுங்க வேண்டும்; உன்னால் நான் என் வாழ்க்கையைப் பலியிட்டுக் கொள்வதாகக் கருதி நீ உள்ளம் உடைய வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் அப்படிச் செய்தேன். ஆனால் நடந்ததென்ன? சாருமதி உன்னைத் தனக்கு வாழ்வளித்த தெய்வமாக எண்ணினாள். குங்குமமும் மஞ்சளுமாகப் போக வழி செய்து கொடுத்த உன்னைத் தெய்வமாகக் கொண்டாடாமல் வேறு எப்படித்தான் கொண்டாடுவாள்? அவளுடன் வாழ்ந்த அந்தக் குறுகிய காலத்தில் ஆடம்பர வாழ்க்கையின் அவலத்தை உணர்ந்தேன்.

''அவளும் உன்னைப் போலவே ஆடம்பரத்தை வெறுத்தாள். உள்ளத் தூய்மையின் மாண்பை எனக்கும் புகட்டினாள். அவள் காரணமாகவே, என் தவறை நான் உணர்ந்தேன். உன்னிடம் கோபித்துக் கொண்டு வந்தது எவ்வளவு தவறு என்பதை எண்ணி வருந்தினேன். உன் தூய நினைவின் பலத்திலேயே சாருவின் குறுகிய வாழ்வை எவ்வளவு நிறைவு செய்ய முடியுமோ அவ்வளவு செய்தேன். அவள் உண்மையான ஆனந்தத்துடன் உயிர் நீத்தாள். அவளது இரண்டு ஆசைகளில் ஒன்று நிறைவேறி விட்டது. குங்குமமும் மஞ்சளுமாகப் போய் விட்டாள். ஆனால் இன்னொன்றுதான்....''

''என்ன அது?''

''அதைச் சொல்லி இனி என்ன பயன்? நீதான் கல்யாணமே வேண்டாம் என்று கூறி விட்டதாக அப்பா சொன்னாரே!''

''படம் போட்ட பொன்னைப் பெற எந்தப் பெண் பின்வாங்குவாள்?'' என்று கூறவும், தெருவில் ஒரு கழுதை கத்தவும் சரியாயிருந்தது. அது துந்துபி நாதம் போலத் தேனைப் பாய்ச்சியது அவர்களது செவியில்.

**நீலக்குயில்**

இந்தப் படத்தின் தமிழாக்கம் ('டப்பிங்') ஏ. வி. எம். ஸ்டுடியோவில் செய்யப்படவில்லை என்றும் அதன் விநியோக உரிமை மட்டும்தான் ஏ. வி. எம். லிமிடெட்டைச் சேர்ந்தது என்றும் தெரிகிறது.



# சேமிப்பவர்

## சிறந்த

## சேவை

## செய்பவர்

●

புது இந்தியாவை நிர்மாணிக்கும் மாபெரும் பணிக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 4800 கோடி அடுத்த ஐந்தாண்டுகளில் செலவழிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இப் பெருந்தொகையில் ரூ. 500 கோடி தேசீய சேமிப்பு மூலம் திரட்டியாக வேண்டும். எனவே நீங்கள் அளிக்கும் தொகை — அது எவ்வளவு சிறியதாயிருந்தாலும் நாட்டின் முன்னேற்றத்துக்காக உபயோகிக்கப்படும்.

●



நாட்டின் வருங்காலத்திற்கு முதலீடு செய்க

# தேசீய சேமிப்பு

சமுதாய செழிப்பு

மேற்கொண்டு விவரங்களுக்கும் மற்றும்/அல்லது நிபந்தனைகளுக்கு எழுதவும்: தேசீய சேமிப்பு கமிஷனர், சிம்லா அல்லது உங்கள் ராஜ்யத்திலுள்ள பிரதேச சேமிப்பு அதிகாரி.

DA 56/312 TM



## நாயும் பூனையும்



★

ஒரு பணக்காரர் வீட்டில் நாயும் பூனையும் மிகுந்த பகையுடன் வளர்ந்து வந்தன. எந்தக் காரியத்திலும் அவை ஒன்றையொன்று பகைத்துக் கொள்ளாத நாளே கிடையாது.

ஒருநாள் பூனை வெளியில் உலாவச் செல்லும்போது, அனுவசியமாக ஒரு செம்மறி ஆட்டினிடம் போய்ச் சீறியது. செம்மறி ஆட்டுக்குக் கோபம் மூண்டது. ஒரே பாய்ச்சலாகத் தன் வளைந்த கொம்பால் பூனையை இடிக்க வந்து விட்டது. பூனை ஒரு சுவர் மூலையில் அகப்பட்டுக் கொண்டது. ஒரே இடியில் பூனை தொலைந்துபோயிருக்கும். நல்லவேளையாக அந்தச் சமயம் அதன் விரோதி நாய் ஓடி வந்து பூனையைக் காப்பாற்றியது. அந்த நாய் பூனையின் கஷ்டத்தைப் பார்க்கச் சகிக்காமல் ஓடி வந்து அந்த ஆட்டின்மீது பாய்ந்து ஆட்டை மிரட்டி ஓடச் செய்தது. தூரத்தில் போய் அந்த ஆடு "இது என்ன, வேடிக்கை! பூனையின் விரோதியான அந்த நாய் பூனையைக் காப்பாற்றி விட்டதே! ஆபத்து சமயத்தில் விரோதியாக இருப்பவனையும் காப்பாற்றும் தருமம் இந்த நாய்க்கு இருக்கிறது. ஆனால் பூனைக்கு அது எங்கே புரியப் போகிறது?" என்று சொல்லிவிட்டுப் போயிற்று.





தாய்க் குருவி: குழந்தையைத் தொட்டிலுக்குப் பதிலாக இந்தக் கடிகாரத்தின் பெண்டுலத்தில் வைத்து விட்டால் அது பாட்டுக்குத் தூங்கிப் போய் விடுகிறது!






இந்தச் சட்டத்தை நாலு சம பாகங்களாக வெட்ட வேண்டும். அது எப்படி? (கீழே பார்க்கவும்.)

சென்ற இதழில் வெளியான ஆறு காசு புதிருக்கு விடை

விடை:

சட்டத்தை நாலு சம பாகமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.






# மிருங்காவதி

சித்திரத் தொடர்கதை

7




③ இச்செய்தியைக் கேட்டதும், வாயிற்காப்போன் இரு நண்பர்களையும் மிக மரியாதையுடன் இளவரசியின் இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்றான்.



④ தேவிதத்தன் இளவரசியின் கையில் மோதிரத்தை அணிவித்து மந்திரம் ஜபித்தான்.



சிறிது நேரத்துக்கெல்லாம் இளவரசி மயக்கம் நீங்கிச் சுய உணர்வு பெற்றாள். இந்த அதிசயத்தைக் கண்ட எல்லோரும் தேவிதத்தனை வாயாரப் புகழ்ந்தார்கள். ⑤



மன்னன் பிம்பகி அரசகுமாரியைப் பாம்பு கடித்துவிட்ட செய்திகேட்டு ஓடோடியும் வந்தான். இளவரசி அபாயநிலையிலிருந்து தப்பிவிட்டாள் என்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சியுற்றான். தேவிதத்தனுக்குப் பொன்முடிப்பு கொடுத்துக் கௌரவித்தான். ⑥



7 இளவரசியை மறுமுறையும் காணும் பாக்கியம் கிடைத்த தேவிதத்தன் பித்தனாகவே ஆகிவிட்டான். மோதிரத்தைத் திரும்ப வாங்கிக் கொள்ளும் நினைவுமில்லை. வீட்டுக்குச் சென்றவனுக்கு உணவும் செல்லவில்லை; உறக்கமும் கொள்ளவில்லை.

நாளுக்கு நாள் அவன் நிலைமோசமாவதைக் கண்டு நண்பர்கள் பெரிதும் கவலையுற்றனர்.





8 விஷம் இறங்கித் தேகநிலை தேறிவிட்ட பொழுதிலும், மிருங்காவதி எதையோ பறிகொடுத்தவள் போல் இருக்கலானாள். அந்தரங்கத் தோழிகளுக்கும் கூடக், காரணம் விளங்கவில்லை.

9 மன்னன் பிம்பகி, தனது மகளுக்குத் திருமண வயது வந்துவிட்டதுதான் காரணம் என்று கருதினான். உடனே திருமணத்திற்கான ஏற்பாடுகளையும் செய்தான். விதர்ப்ப நாட்டு அரசகுமாரனைத் தனது மருமகனாக்கிக் கொள்ளத் தீர்மானித்தான்.



10 இந்தச் செய்தி இளவரசி மிருங்காவதியின் செவிகளில் நாராசமாகப் பாய்ந்து நிலைகுலையச் செய்தது. தனது அந்தரங்கத் தோழியான பவானியிடம் தன் உள்ளத்தைத் திறந்து காட்டினாள்.




12 இங்கே மிருங்காவதி தேவிதத்தனை நினைத்துக் கொண்டிருந்தாள். அங்கே தேவிதத்தன் மிருங்காவதியை நினைத்துக் கொண்டிருந்தான்.

இருவர் மனமும் ஒன்றிவிட்டது.



13 மிருங்காவதியின் மனத்தையறிந்ததும் பவானியின் கண்ணெதிரே கோபமே உருவான மன்னன் பிம்பகி தோன்றினான்.

(தொடரும்)



# மரகதத்தின் திருமணம்

விஜயம்

## 2. ஆசை நிறைவேறியது!

மிராசுதார் கந்தசாமி வீட்டுக்குப் போன பிறகு வேலன் தன் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து நீண்ட நேரம் யோசித்தான். எந்த விதமாக யோசித்துப் பார்த்தாலும் மிராசுதார் விருப்பத்தை நிறைவேற்றி வைத்தாலன்றி அவனுடைய கடன் தீருவதற்கு வழியேயில்லை என்று தோன்றியது. ஆனால் இது விஷயத்தில் மரகதத்தின் சம்மதம் வேண்டுமே என்று அவனுக்குக் கவலையா யிருந்தது. அவன் அவளை மிகவும் செல்வமாகச் சீராட்டி வளர்த்திருந்தானல்லவா?

வயற் பக்கங்களெல்லாம் சுற்றி அலைந்து விட்டு மரகதம் அப்பொழுது தான் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தாள். அவளுடன், அவள் அருமையாக வளர்த்து வந்த குதிரைக் குட்டியும் வந்தது. அந்தக் குதிரைக்குட்டி 'கொழு கொழு, மொழு மொழு' வென்று வளர்ந்திருந்தது. குதிரைக் குட்டியைக் கயிற்றில் கட்டி, அந்தக் கயிற்றைப் பிடித்துக் கொண்டு உற்சாகமாக மரகதம் வருவதை நேரில் பார்த்தவர்கள் அவளை ஒரு வனராணி என்றே நினைப்பார்கள்.

வேலன் மரகதத்தை அன்போடு வரவேற்று, மெதுவாக அவள் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தான்.

"மரகதம்! சீக்கிரமாக உன் கல்யாணத்தை நடத்தி விடலாம்னு இருக்கிறேன். என்ன சொல்லுகிறாய்?"

"அப்பா, நான் உங்களோடு இருக்கிறது உங்களுக்குப் பிடிக்க வில்லையா?" என்று கேட்டு மரகதம் தேம்பினாள்.

"குழந்தை! உன்னாலே எனக்கு என்ன அம்மா, சிரமம்? எனக்குத் திடம் இருக்கிற போதே உன்னை ஒருவன் கையிலே ஒப்புவித்து விட்டால் தான் என் மனசு நிம்மதியா யிருக்கும்."

"மாப்பிள்ளை யாரு என்று சொல்லவில்லையே, அப்பா?"

"மாப்பிள்ளை ரொம்பப் பெரிய இடம், அம்மா! அவர் வீட்டுக்குப் போய் விட்டால் உனக்கு ஒரு கஷ்டமும் கிடையாது!



இன்னொரு முக்கியமான விஷயம். மாப்பிள்ளை இந்த ஊர்தான். நீ எப்பொழுது நினைத்தாலும் வீட்டுக்கு வந்து என்னைப் பார்க்கலாம். நானும் உன்னை வந்து அடிக்கடி பார்ப்பேன!''

''அது யாரப்பா? நீங்கள் யாரைச் சொல்லுகிறீர்கள்?'' என்று வியப்புடன் கேட்டாள் மரகதம்.

''நம்ம மிராசுதார் கந்தசாமிதான் அம்மா, நம் வீட்டுக்கு வரப்போகும் மாப்பிள்ளை!''

இதைக் கேட்டதும் மரகதத்துக்கு ஒரு தடவை தூக்கிவாரிப் போட்டது. ஐம்பது வயது ஆனவருக்கு இன்னும் கல்யாண ஆசையா? அப்பாவிடம் இது குறித்து அவள் ஒன்றும் பேச விரும்பவில்லை. மிராசுதாரிடம் பட்டிருக்கும் கடனைத் தீர்க்க வழி தெரியாத நிலையில்தான் அப்பா இந்தத் திருமணத்துக்கு இசைந்திருக்கிறார் என்பதை ஊகித்துத் தெரிந்து கொள்ள அவளுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. ஆனால் அவள் ஆசை வைத்திருந்த அத்தை மகன் குமரகுருவின் அழகிய முகம் அவள் மனத்திரையில் தோன்றியது. உடனே அவள் மிராசுதாரின் திட்டத்தை எப்படியும் கவிழ்த்து விடத் தீர்மானித்தாள். ஆனால் அப்பாவின் முகத்தைப் பார்த்தால் பரிதாபமாயிருந்தது. அவள் வாய் திறந்து ஒன்றும் பேசவில்லை. அவள் எவ்வளவோ சிரமப்பட்டுத் தன் மனவேதனையை மறைத்துக்கொள்ள முயன்றாள்.

மரகதம் மௌனமாயிருக்கவே, அவள் மிராசுதாரை மணக்கச் சம்மதித்து விட்டதாகவே வேலன் தீர்மானித்தான்.

கல்யாண ஏற்பாடுகளெல்லாம் மிராசுதாரின் சொந்தச் செலவிலேயே ஆடம்பரமாக நடந்தன. பெரிய பந்தல் போட்டு, ஊரில் உள்ள பெரிய மனிதர்களையெல்லாம் அழைத்து அவர்களுக்கு ஒரு விருந்து வைப்பதென்று மிராசுதார் தீர்மானித்தார். மரகதம் தன்னை மணக்கச் சம்மதிப்பாளோ, மாட்டாளோ என்று அவருக்கு ஒரு சிறு சந்தேகம் இருந்தது. ஆகையினால், கல்யாணத்தைப் பற்றி ஒன்றும் சொல்லாமல் ஏதோ உல்லாச விருந்துக்கு அழைக்கிற மாதிரியே எல்லோரையும் அழைத்திருந்தார். அந்த விருந்து வைபவத்தில் பெரிய மனிதர்களுக்கு எதிரில் மரகதத்துக்கும் தமக்கும் நடக்கப் போகும் கல்யாணத்தை நிச்சயம் செய்து விட்டால் அப்புறம் அந்தக் குறும்புக்காரப் பெண் ஒன்றும் செய்ய முடியாது என்று நினைத்தார் மிராசுதார். வேலனுக்கும் இந்த ஏற்பாட்டில் சம்மதந்தான்.

விருந்துக்கு ஏராளமானவர்கள் வந்திருந்தார்கள்; பக்கத்து ஊர்களிலிருந்தெல்லாம் வந்து நிறைந்திருந்தார்கள். காலையில் காப்பி, பலகாரங்கள் சாப்பிட்ட பிறகு, மிராசுதார் வேலன் வீட்டுக்கு விலை உயர்ந்த நகை, புடவைகளையெல்லாம் கொடுத்து அனுப்பி மரகதத்தை அழைத்து வரச் சொன்னார். வேலன் மிராசுதாருடன் அவர் வீட்டிலேயே இருந்தான்.

மரகதத்தை அழைக்கப் போனவர்கள், ''மிராசுதார் அலங்கரித்து அழைத்து வரச் சொன்னார்'' என்று அவளிடம் சொன்னார்கள். மரகதம் அவர்கள் கொண்டு வந்த பட்டுப் புடவைகளையெல்லாம் தன் குதிரைக் குட்டியின் மேல் போர்த்தி அலங்கரித்து, அதை மிராசுதார் வீட்டுப் பின்புறத்து வழியாக மாடிக்கு அழைத்துப் போகச் சொன்னாள். மிராசுதார் வேலைக்காரர்கள் அவள் சொன்ன மாதிரியே குதிரைக் குட்டியை அழைத்துச் சென்று சிரமப்பட்டு மாடியில் ஏற்றினார்கள். பிறகு மிராசுதாரிடம் சென்று, ''எஜமான் தங்கள் உத்தரவுப்படியே அலங்கரித்து அழைத்து வந்து விட்டோம்'' என்று சொன்னார்கள்.



உடனே சந்தோஷத்துடன் மிராசுதார் மாடிக்குத் தம் நண்பர்களையெல்லாம் அழைத்துக் கொண்டு போனார். குதிரைக் குட்டியிருந்த அறையின் கதவு சாத்தியிருந்தது. மெதுவாகக் கதவைத் தட்டின மிராசுதார், ''மரகதம், வெளியே வா, அம்மா! என் நண்பர்கள் உன்னைப் பார்க்க மிகவும் ஆவலோடு காத்திருக்கிறார்கள்'' என்று கூறினார்.

உடனே, உள்ளேயிருந்து 'தளக் தளக்' என்று நர்த்தனமாடும் சத்தம் அழகாகக் கேட்டது. விருந்துக்கு வந்திருந்த பெரிய மனிதர்களும் நண்பர்களும் இதைக் கேட்டுக் கை தட்டி ஆரவாரம் செய்தனர். மிராசுதார் தங்களையெல்லாம் சந்தோஷப்படுத்துவதற்காக இந்த மாதிரி ஒள



முகம்மது இப்ராஹிம் கம்பெனியால் நடத்தப்பட்ட மர்பி—மெட்ரோ தென் பிராந்திய சங்கீதப் போட்டி வைபவம் தாசப்பிரகாஷ் ஹோட்டலில் சமீபத்தில் நடந்தது. சிறந்த பாடகர்களைத் தேர்ந்தெடுப்பதற்காகப் பிரபல சங்கீத டைரக்டர்களான ஸ்ரீ நௌஷத் அலி, ஸ்ரீ அனில் பிஸ்வாஸ், ஸ்ரீ மதன் மோஹன் இம்மூவரும் சென்னைக்கு விஜயம் செய்திருந்தனர். முகம்மது இப்ராஹிம் கம்பெனியின் நிர்வாக டைரக்டரான ஸ்ரீ எஸ். எம். இப்ராஹிம் மேற்படி சங்கீத டைரக்டர்களை வரவேற்றுப் பேசுவதைப் படத்தில் காணலாம்.

தமாஷ்' நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருப்பதாக நினைத்தனர்.

மரகதம் தன் குதிரைக் குட்டிக்கு நடனம் ஆட நன்றாய்ப் பழக்கி வைத்திருந்தாளாதலால், அந்தக் குதிரைக்குட்டி மனிதக் குரல் கேட்டதும் உற்சாகமாக ஆடத் தொடங்கியது. மேலும் அறையின் கதவு மூடி யிருக்கவே அது கட்டுக்கு அடங்காமல் ஆடியது. நண்பர்களும் அதை உற்சாகமாக ரஸித்து மகிழ்ந்தார்கள்.

மிராசுதாருக்கு ஒன்றும் புரியவில்லை. அவருக்குத் தலை சுற்றியது. மரகதம் தம்மை ஏமாற்றி, அவமானப்படுத்தி விட்டனத உடனே அவர் உணர்ந்து கொண்டார். அவர் மிகவும் கௌரவத்துக்கு ஆசைப் படுகிறவராதலால், அவருக்குத் தம் மனப் போராட்டத்தையோ அதன் காரணமாக ஏற்பட்ட ஆத்திரத்தையோ வெளியில் காட்டிக்கொள்ள முடியவில்லை.

மிராசுதார் மெதுவாக அந்த அறைக் கதவைத் திறந்தார். அவர் திறந்தாரோ இல்லையோ, சர்வ அலங்காரங்களோடும் கூடிய குதிரைக் குட்டி ஒரே தாவாகத் தாவி வெளியே வந்து நாட்டியமாடியது.

"மிராசுதார் ஸார், குதிரைக் குட்டி நாட்டியம் பிரமாதம். நன்றாய் ஏற்பாடு செய்திருக்கிறீர்கள் !" என்று சந்தோஷத்தோடு நண்பர்கள் பாராட்டினார்கள்.

அவரும் தம் கௌரவத்தை விட்டுக் கொடுக்காமல் அவர்களோடு சேர்ந்து நாட்டியத்தை ரஸித்து அநுபவித்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் குதிரைக் குட்டியைப் பிடித்துக் கொண்டு போக ஏற்பாடு செய்து விட்டு, மிராசுதார் தனியாக வேலனை அழைத்தார்.

"நான் இப்பொழுது தான் என் குற்றத்தை உணருகிறேன். இஷ்டம் இல்லாத திருமணம் எதில் சேர்ந்தது? என் நண்பர்கள் யாருக்கும் உன் மகள் மரகதத்தை நான் மணப்பதாக இருந்த விஷயம் தெரிய வேண்டாம். நீ உன் மகள் யாரை விரும்புகிறாளோ அவனுக்கே அவளை மணம் செய்து கொடு" என்று கூறினார்.

வேலன் இதைக் கேட்டதும், "ஐயா! இது நியாயம் இல்லை. என் கௌரவமும் இதில் பறிபோகிறது. கடன் தொகையை விட்டுக் கொடுப்பதாகச் சொன்னீர்களே என்று தான் நான் என் மகளை உங்களுக்குக் கொடுக்கச் சம்மதித்தேன். இப்பொழுது என் கதி?...... நான் உங்கள் நண்பர்கள், பெரியமனிதர்களிடம் சொல்லி நியாயம் கோரப் போகிறேன்......!" என்று கண்டிப்பாகக் கூறினான்.

உடனே மிராசுதார் முகம் பயத்தால் வெளுத்து விட்டது.

"வேலா, இதோ பார். இந்த நிமிஷமே உன் கடனைத் தள்ளி விட்டேன். நான் முன்பு சொன்னபடி உன் நிலங்களையும் தென்னந்தோப்பையும் இப்பொழுதே உன் பெயருக்கு எழுதி விடுகிறேன். தயவு செய்து நீ மாத்திரம் என் நண்பர்களுக்கு எதிரில் வாய் திறவாமல் இருந்தால் போதும்!" என்று கெஞ்சினார் மிராசுதார்.

"அப்படியானால் இதே பந்தலில் என் அத்தானுக்கும் எனக்கும் திருமணம் செய்து வைக்கிறீர்களா?" என்று ஒரு குரல் கேட்டது.

மிராசுதார் திடுக்கிட்டுத் திரும்பினார். மரகதம் நின்று கொண்டிருந்தாள்.

"உன் விருப்பப்படியே செய்கிறேன், மரகதம்!" என்று மிராசுதார் மனப்பூர்வமான அன்போடு கூறினார்.

மறு நிமிஷம் மங்கள வாத்தியம் 'தாம் தாம்' என்று முழங்கியது. மரகதத்துக்கும் அவள் அத்தான் குமரகுருவுக்கும் மிகவும் சிறப்பாக மிராசுதார் வீட்டுப் பந்தலில் திருமணம் நடந்தேறியது. (முற்றும்)

புத்துணர்ச்சி யுடன் இருங்கள்—



ஆம், அன்றாடம் ஹமாம் தேய்த்து ஸ்நானம் செய்தபின் குதூகலத்துடன் பள்ளிக்கூடம் செல்லுகையில் உங்கள் குழந்தைக்கு இத்தகைய உணர்ச்சியே ஏற்படும். ஹமாம் இளஞ் சருமங்களுக்கு ஹானி விளைவிக்காத ஒரு பரிசுத்தமான சோப்பு. குழந்தைகள் அதன் இன்பமூட்டும் நறுமணத்தையும், நிறத்தையும் விரும்புகிறார்கள்.

டாடாவின்

# ஹமாம்

டாய்லெட் சோப்




100% இந்திய மூலதனம்—இந்திய நிர்வாகம்—இந்திய உழைப்பு

S-TOM-158 Tamil



# ரகுபதி ராகவ



[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

69

மனத்தையும் பேச்சையும் செயலையும் அடக்கியாள்வது பிரம்மசரியம். புலன்களின்மேல் நம்முடைய ஆட்சியைச் செலுத்த வேண்டும். அவற்றின் ஆட்சிக்குள் நாம் அகப்பட்டுக் கொள்ளக்கூடாது. இதில் வெற்றியடைய நான் கூறிய கட்டுப்பாடுகள் மிக அவசியம் என்பதை நான் என்னுடைய அனுபவத்தில் கண்டு வருகிறேன். இது முடியாத காரியம் அல்ல. ஆனால் பலர் தோல்வியடைகிறார்கள். இந்திரியங்களை யடக்கியாள ஆசைப்படுகிறார்களே யன்றி அதற்கு வேண்டிய பல துறை முயற்சிகளைக் கையாள்வதில்லை. பிரம்மசரியத்தை அடைய ஆசைப்படுகிறவன் தன்னுடைய குற்றங் குறைகளை அவ்வப்போது அறிந்து கொள்வான். உள்ளத்தில் மறைந்து கிடக்கும் ஆசை வேகங்களைத் தேடிக் கண்டு கொண்டு, அவற்றை அகற்றிவிட இடைவிடாமல் முயல்வான். உள்ளத்தில் அலையும் எண்ணங்களை, முற்றிலும் வசப்படுத்திக் கொள்ள வேண்டும். உள்ளத்தில் தோஷமிருக்கும் வரையில் பிரம்மசரியம் இல்லை என்று வைத்துக் கொள்ள வேண்டும். மனிதனுடைய உள்ளத்தில் எண்ணங்கள் தாமாகத் தோன்றும். வேண்டாம் என்றாலும் தோன்றிக் கொண்டேயிருக்கும். காற்றையும் அடக்கலாம். மனத்தை அடக்குவது அதைவிடக் கடினம். ஆனால் உள்ளத்தினுள்ளே ஈசனும் இருக்கிறான் அல்லவா? அவனுடைய அருள் பெறின் அந்த உள்ளத்துக்கும் சக்தி வரும்; குற்றங்களைக் களைய, யாருமே இது முடியாத காரியம் என்று எண்ணி விட்டு விடலாகாது. பெருஞ் செல்வத்தை அடைய முயற்சியும் பெரிதாகவே இருக்க வேண்டும். அதற்கு பயப்படலாகாது.

நான் இந்தியாவுக்குத் திரும்பி வந்த பிறகுதான் பிரம்மசரியத்தை அடைவதற்கு மனிதனுடைய முயற்சி மட்டும் போதாது என்பதை யுணர்ந்தேன். அதற்கு முன் நான் வேறு விதமாக நினைத்தேன்: ஆகார நியமனம் மட்டும் போதும், அதனாலேயே காமக் குரோதாதிகளை அடக்கி விடலாம் என்று பைத்தியக் காரனைப் போல் எண்ணி வந்தேன். இங்கே வந்த பிறகே உண்மையை உணர்ந்தேன். ஈசன் அருளும் வேண்டும் என்பதை யுணர்ந்தேன். என்னுடைய சொந்தக் கதையை இந்தச் சமயம் வளர்க்கவில்லை: நிறுத்திக் கொள்ளுகிறேன்.

தன்னம்பிக்கையும் தெய்வ பக்தியும் இரண்டும் நிறைய இருந்தால் பிரம்மசரியத்தை அடையலாம், ஈசனையும் அடையலாம் என்று எல்லாருக்கும் உறுதி கூறி நிறுத்திக் கொள்கிறேன். உபவாசம் முதலிய விரதங்கள் அனுஷ்டித்து, புலன்களுக்கு நுகர்ச்சிப் பொருள் தராமல் இருக்கலாம். ஆனால் நுகர்ச்சியிலுள்ள ரஸம் உள்ளத்தை விட்டு நீங்காது. அந்த ரஸமும் நீங்க வேண்டுமானால் நோக்கம் ஈசனிடம் செல்ல வேண்டும். இது கீதா வாக்கியம். வீடு பெற வேண்டுவதற்கு வழி அவன் நாமமும் அவன் அருளுமே. இந்தியாவுக்குத் திரும்பிய பிறகுதான் நான் இதை யுணர்ந்தேன்.

— சுயசரிதம்

# நீரிழிவு

## குணமாகும்

சிறு நீரில் சர்க்கரை காண்பது நீரிழிவு (DIABETES) நோயின் முக்கிய அறிகுறி. உங்களுக்குப் பசியும் தாகமும் அதிகமாயிருந்தாலும், உடல் உருகிக் கொண்டு வந்தாலும் அடிக்கடி நீர் இறங்கினாலும் உங்களுக்கு நீரிழிவு நோய் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இக் கொடிய உடல் உருக்கி நோய், தான் பற்றினவர்களைக் கடைசி மூச்சு உள்ள வரையில் விடுவதில்லை; கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மரண வாயிலுக்கு இழுத்துச் செல்லும். நீரிழிவு வியாதியைக் குணப்படுத்த இஞ்செக்ஷன்கள் போடப்படுகின்றன; ஆனால் அவற்றினால் வியாதி கொஞ்சமும் குணமாவதில்லை. இஞ்செக்ஷன்கள் நீரில் சர்க்கரையைக் குறைக்கின்றன — அதுவும் மருந்துச் சக்தி உள்ள வரையில்தான். ஆகவே, உபாதையைத் தடுக்க வாழ்நாள் முழுவதும் ஊசிகள் போட வேண்டியதுதான். இதனால் அதிகச் செலவு ஏற்படுவதோடு கஷ்டமும் உண்டாகிறது. நோய் குணப்படுத்தாது போனால் நீங்கள் புண்களினாலும், கண் நோய், பல் நோய், வயிற்றுக் கோளாறு முதலிய பலவித வேதனைகளால் சிரமப்பட நேருகிறது.

நீரிழிவு வியாதியை, வீனஸ் சார்ம் மாத்திரைகளை உபயோகித்து, சிக்கனமாகவும், சுலபமாகவும் நிச்சயமாகவும், பத்திரமாகவும் சிகிச்சை பெறுங்கள்.

பண்டைக்கால யுனானி வைத்திய முறைகளைக் கொண்டு, அரிய மூலிகைகளின் சேர்க்கையுடன் தயார் செய்யப்படும் வீனஸ் சார்ம் மாத்திரைகள், நோயை அடியோடு அகற்றுவதுடன், எத்தனையோ பேர்களை இன்செக்ஷன் அல்லது ஒருவிதமான பட்டினி இல்லாமல் குணமாக்கியிருக்கிறது. இதை உபயோகித்துப் பல ஆயிரக் கணக்கானவர்கள்; இந்நோயின் மரணப் பிடியிலிருந்து தப்பியிருக்கிறார்கள். இம் மருந்தை உபயோகிக்கத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம், நீரில் சர்க்கரை குறைகிறது: அத்துடன் அதிக நீர் இறங்குவதும் நிற்கிறது. சில நாட்கள் உபயோகித்தாலே நோய் தணிந்து திருப்தி ஏற்படுகிறது. வீட்டிலிருந்தபடி வீனஸ் சார்ம் சிகிச்சையைத் துவங்குங்கள். விசேஷ பத்தியம் எதுவும் இல்லை. நீங்களே அதன் குணத்தை அறிவீர்கள். இதுபற்றிய விரிவான இலவச ஆங்கிலப் பிரசுரத்தை வரவழைத்துப் பாருங்கள்.

50 மாத்திரைகள் கொண்ட புட்டி ஒன்றின் விலை 6-12-0

(பாக்கிங் தபால் செலவு இனாம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (K. M.)**

தபால் பெட்டி நெ. 587. கல்கத்தா

# HEWLETT'S

## MIXTURE




## ஹியூலெட்ஸ்

### மிக்ஸர்

80 ஆண்டுகளுக்கு மேலாக இந்த ஔஷதம் அஜீர்ணம், வயிற்றுக் கோளாறுகள், நெஞ்செரிச்சல், வாயு பொருமல் புளிப்பு, குடல் வியாதிகள் இவற்றிற்கு முக்கிய பரிகாரமாக உலக முற்றிலும் பெயர் பெற்று விளங்கி வருகிறது. அபினி சேர்த்தும், அல்லாமலும் 4 அவுன்ஸ், 10 அவுன்ஸ் அளவுகளில் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

C. J. HEWLETT & SON
(INDIA) PRIVATE LTD.,
MADRAS-3.

# பானுவின் காதலன்

ராஜம் கிருஷ்ணன்

## 17. பூவும் புன்னகையும்

சைக்கிள் மணி சத்தம் கேட்டதும், மார்க்கபந்து, "பார்த்தாயா? கல்யாணப் பேச்சை ஆரம்பிக்கலாமா என்று கேட்கும் போதே சகுனம் ஆகிறது. அன்றைக்கு வீட்டில் பார்த்தாயே, பொன்னுவை..? அவருடைய சித்தப்பா இவர். பொன்னு தங்கமான குணம். உனக்கு அவளை இந்த ஆவணியில் மணம் முடித்து விடலாம் என்று வந்தோம்." என்றார். சின்னத்துரைக்கு அப்போது என்ன உணர்ச்சி மேலிட்டது என்பது அவனுக்கே தெரியாது. கர்வம் ஒருபுறம்; எரிச்சலும் ஆத்திரமும் ஒருபுறம் மாறி மாறி ஏற்பட்டன.

"நான் கல்யாணம் செய்து கொள்ளும் உத்தேசத்துடனேயே இல்லை, ஸார்! மன்னிக்க வேண்டும்" என்றான் அவன் பட்டென்று.

சின்னத்துரை ஏதோ பொறிக்குள் அகப்பட்டுக் கொண்டாற் போலத் தவியாய்த் தவித்தான்.

கல்யாணம்..! பானுவைத் தவிர அவன் அந்த எண்ணத்தில் தன்னோடு ஒருவரையும் இணைத்துப் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. அவள் இன்னொருவருக்கு உரிமையாகி விட்டாள் என்றறிந்த பின்னர் அவன் தன்னைச் சுற்றிலுமே விரக்தி வேலிதான் எடுத்துக் கொண்டிருந்தான்.

அந்த நிமிஷத்தில் பானு சிரித்துக் கொண்டு அவன் முன் எதிர்ப்பட்டு, "அண்ணா, என்ன யோசனை? சம்மதம் என்றுசொல்லுங்கள்!" என்று சொல்லியிருந்தால் அவன் கட்டுப்பட்டே தீருவான். ஆம், அவன் எப்படியோ அவளுக்குக் கட்டுப்பட்டவனாகி விட்டான். அவள் ஆதரவில்லாத அநாதையாக அவன் முன் வந்து நின்றால், அவன் பெரியவனாக நின்று ஆதரிப்பான். அது அவன் வாழ்வில் ஒரு பெண்ணுக்கு இடமளித்துவிட்டால் சாத்தியமாகுமா?

"பானு, குழந்தை எல்லோரையும் இங்கு ஒரு நாள் அழைத்து வாருங்களேன், மாமா! நீங்கள் சமீபத்தில் பூந்துறை போயிருந்தீர்களா?" என்று பேச்சை மாற்றினான்.

"போயிருந்தேன். ஆஸ்திகர் மகாநாடு நடந்ததில்லையா? சுப்பராமன் கடிதம் போட்டிருந்தான். ஏன்? நீதான் அந்த மண்ணையே உதறி வந்து விட்டாயே; என்ன விசேஷம்?"

"சும்மாத்தான் விசாரித்தேன். பானுவையும் குழந்தையையும் அழைத்து வாருங்கள், மாமா!" என்றான் சின்னத்துரை மீண்டும்.

புளிமங்கலத்திலிருந்து திரும்பும் பஸ், அவர்கள் போக வேண்டிய வண்டி வந்து விட்டது.

"வராமலென்னடா? கண்டிப்பாக வருகிறோம். நீ முதலில் கல்யாணம் செய்து கொண்டு குடியும் குடித்தனமுமாக ஆனால் பிறந்த வீடு இல்லாத குறையை மறந்து அவளே வருகிறாள்!"

இப்படிச் சொல்லிக்கொண்டே அவர் விடைபெற்றுக் கொள்ள எழுந்து விட்டார். அது சின்னுவின் உள்ளத்தைச் சுருக்கென்று தைத்தது.

பஸ் நகர்ந்த பின் சின்னு வெகு நேரம் பஸ் போன திக்கையே நோக்கிக் கொண்டிருந்தான்.

* * *

எந்த ஒரு சந்தர்ப்பத்தை நேரிடக் கூடாது என்று தவிர்க்க முயலுகிறோமோ, அது அநேகமாய் நேரிட்டே தீருகிறது. வாழ்க்கையில் மனிதனுக்குப் பின் எப்படிச் சோதனைகள் உண்டாக முடியும்? சின்னு பானுவின் நினைவைத் தவிர்க்க முயன்றான். கஜேந்திரபுரம் என்ற எண்ணத்தையே சிந்தையில் நுழைக்காமல் காவலிட்டான். என்ன பிரயோசனம்? அவன் எவ்வளவோ மறுத்தும் அவன் விருப்பத்துக்கு எதிராக, இன்னொரு முறை கஜேந்திரபுரத்தை நாடி அவன் செல்ல வேண்டி இருந்தது. ஆம், கணபதிபாளையம் வாலிபர் சங்கத்தின் காரியதரிசி முருகேசன் நினைத்தால் நினைத்த காரியத்தைச் சாதித்து விடுபவன். தங்கள் சங்கத்தில் பேசுவதற்குப் பரிதிமாலை ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அவன் தீர்மானித்ததை நடத்தாமல் விட்டு விடுவானா? சின்னத்துரை எவ்வளவு மறுத்தும் அவன் கேட்கவில்லை.

"சும்மா, வாங்க தம்பி!" என்று கட்டி இழுத்துக் கொண்டு கிளம்பி விட்டான் முருகேசன்.

மாலைவேளை. அன்று வானம் மூடி இலேசாகத் தூற்றல் விழுந்து கொண்



டிருந்தது. அவன் எவ்வளவு திடமாக மனசை வைத்துக் கொண்டும் அந்த வீட்டை நெருங்க நெருங்க இனமறியாத கலக்கமும் குழப்பமும் மேலிட்டன.

அடிக்கதவு தட்டும் சத்தம் கேட்டு முதலில் எட்டிப் பார்த்தவள் பொன்னுதான். அவர்களைப் பார்த்து விட்டு மருட்சியும் பரபரப்புமாக அவள் உள்ளே ஓடினாள்! சின்னுவுக்கும் விவரிக்க இயலாத பரபரப்பு. குறுகுறுப்பு.

பானுவை அழைத்து வருவாளோ?

ஆனால் அப்பொழுது பொன்னுவின் அம்மா வந்து நின்றாள்.

முருகேசன் தைரியமாக, ''பரிதிமால் அவர்களைப் பார்க்க வந்தோம்'' என்று கூறினான்.

ஒரு கணம விழித்து விட்டு அவள் கீச்சுக் குரலைக் காட்டி, ''மாடிக்குப் போங்கள், அங்கு இருப்பார்கள்'' என்று தெரிவித்தாள்.

வாசற் திண்ணையிலேயேதான் மாடிக்குச் செல்லும் வழி இருந்தது.

படி ஏறுகையிலேயே கல கலவென்ற சிரிப்பொலி அவர்களுடைய செவிகளிலே பாய்ந்தது. காந்திமதியின் ஒலியைச் சின்னு புரிந்து கொண்டான். கூடவே ஒலித்த ஆண் குரல்....அவனுடையதா? பானுவின் காதலனுடையதுதானா?.....

இதற்குள்ளே அவர்கள் செருப்பொலி வராந்தாவிலிருந்த காந்திமதிக்குக் கேட்டு விட்டது போலும். அவர்கள் மேல்படியில் எதிர்ப்பட்டதுமே அவள் சின்னுவை நோக்கிப் புன்னகை செய்து. ''வாருங்கள், வாருங்கள்...'' என்று வரவேற்றாள்.

வராந்தாவில் சித்திரப் பூவேலைகள் செய்யப்பட்ட பாய் ஒன்று விரிக்கப்பட்டிருந்தது. சுவரில் பெரிய அளவில் காந்தி மகானின் படம் கதர் மாலையால் அலங்கரிக்கப்பட்டு விளங்கியது. பாயின் ஒரு ஓரம், பத்திரிகைத் தாள்களும் புத்தகங்களும் கிடந்தன. இன்னொரு புறம் தக்ளியும் கையுமாக மூக்குக் கண்ணாடியும் கதர் ஜிப்பாவுமாக ஒரு இளைஞன் காட்சி யளித்தான்.

சின்னு கண்ணிமைகளைப் பட பட வென்று கொட்டிக் கொண்டான்.

அந்த இளைஞனை உற்றுப் பார்த்தான். ''இவன் யார்? எங்கே, எப்போது



பார்த்தோம்?'' என்று தன்னையே கேட்டுக் கொண்டான்.

காந்திமதி, ''அன்று அப்படி ஒரு மணி கூட நில்லாமல் சாப்பிடாமல் போய்விட்டீர்களே? தாத்தா எங்களைக் கோபித்துக் கொண்டார். உங்கள் ஊர்க்காரர்கள் இல்லாதபோனால் வரக் கூடாதா?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டு விட்டுப் பாயில் உட்காரச் சொல்லி உபசரித்தாள்.

சின்னத்துரை இன்னும் அந்த இளைஞனையே பார்த்தான். ''உங்களை எங்கேயோ பார்த்தாற்போல் நினைவு ... நினைவு வரவில்லையே?''

''நினைவு வரவில்லையா?''

கலகலவென்று அவன் சிரித்து விட்டுக் காந்திமதியைப் பார்த்தான்.

''எங்கே பார்த்திருப்பீர்கள்? பஸ்ஸில் அடிக்கடி போவார். உங்கள் ஹோட்டலில் இறங்குவார். அங்கு பார்த்திருப்பீர்கள். இவர் பெரியபாளையத்தில்தானே ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் இருக்கிறார்!'' என்று காந்திமதி விவரம் சொன்னாள்.

இதற்குள் முருகேசன், ''திரு சங்கரன்தானே...?'' என்றான்.

''ஆமாம்'' என்று அவன் சிரித்துக் கொண்டே தலையை ஆட்டினான்.

காந்திமதி 'ஒரு நிமிஷம்' என்று விடைபெற்றுக் கொண்டு சிட்டுப்போல் கீழே ஓடி எலுமிச்சை ரசம் அடங்கிய கண்ணாடி டம்ளர்களை ஏந்தி வந்தாள். சின்னுவிடம் முதலில் நீட்டியபடியே, ''மாமி, மாமா இரண்டு பேரும் இன்னும் ஊரிலில்லை. அவர்கள் இல்லாத சமயமாகவே வந்திருக்கிறீர்கள்!'' என்றாள் காந்திமதி.

''ஏன்? ஊரிலில்லை?'' என்று குழறினான் சின்னத்துரை.

''ஆமாம், மாமி அப்போதிருந்தே உதகமண்டலத்தில்தான் இருக்கிறாள். உடம்புக்கு ஒத்து வருகிறதாம். டாக்டரின் மேற்பார்வையில் தனியாய்த்தானிருக்கிறாள். மாமா வினோபாஜியைத் தரிசித்து விட்டுக் காலையில்தான் வந்தார். சற்று முன்தான் மாமியைப் பார்க்கப் போனார்!'' என்றாள் அவள்.

சின்னு இதற்கு என்ன பதில் சொல்வதென்று விழித்தான். முருகேசன் அவன்

விழிப்பை நீடிக்க விடவில்லை.

''அடாடா! நாங்கள் பரிதிமால் அவர்களை எங்கள் சங்கத்தில் பேசச் செய்ய வேண்டும் என்றல்லவா வந்தோம்?... அவர் இல்லையா?''

''இல்லை. இருந்தாலும் கட்சிச் சார்புள்ள சங்கங்கள் என்றால் அவர் பேச ஒப்புக்கொள்ளுவதில்லையே!'' என்றாள் காந்திமதி.

''அப்படி ஒன்றுமில்லை. எங்கள் ஊரில் முதியோர் கல்விக் கூடம் ஒன்று ஆரம்பிக்கப் போகிறோம். ஜனங்களுக்குக் கல்வியின் அவசியத்தை எடுத்துரைக்க வேண்டியதுதான் முக்கியம். நீங்கள் எல்லோருமே இந்த விஷயத்தில் எங்களுக்குப் பெரிதும் உதவுவீர்கள் என்பது எனக்குத் திடமான நம்பிக்கை. சங்கரன் அவர்களைக்கூட அழைக்கிறேன். உங்களுக்குச் சௌகரியமான ஒரு நாள் அவசியம் வந்து பேசவேண்டும்!'' என்றான் முருகேசன்.

''அப்படியானால் கட்டாயம் வருவார்கள்'' என்று மொழிந்தாள் காந்திமதி.

இனி மார்க்கபந்துவைக் காணாமலேயே தப்பிவிட வேண்டும் என்ற பரபரப்பு எழுந்தது சின்னுவுக்கு. முருகேசனை மெல்லத் தூண்டினான். எழுந்து விடை பெற்றுக் கொள்ளும் கட்டம் வந்தது.



''வருகிறோம். பெரியவர் வந்தால் சொல்லுங்கள்!'' என்றான் சின்னு மரியாதையாக.

அவள் விழிகளை உருட்டி வாயைக் குவித்துக் கொண்டு, 'ஓ!' என்றாள்.

திண்ணையைக் கடந்து படியிலும் காலை வைத்து விட்டான்.

என்ன அது, விம்மல் ஒலி? வாயிற்புற அறையிலிருந்துதான்! சின்னு இருதயம் அதிர்ந்தாற்போல் திரும்பிப் பார்த்தான். ஜன்னல் திரை மறைத்தது. ''நான் நாதியில்லாதவள், கதியற்றவள்!'' — அழுகையொலி, இருதயம் பிளக்கும் விம்மல்.

பானு? பானுவின் ஒலிதான் அது.

திரும்ப ஓடிப் போய்ப் பார்க்கலாமா என்ற பரபரப்பு ஏற்பட்டது சின்னுவுக்கு.'' அதோ பஸ் வருகிறது. ஓடி வா சின்னத்துரை!'' என்று முருகேசன் கையைப் பற்றிக்கொண்டு ஓடினான்.

அவனும் குலுங்கக் குலுங்க ஓட வேண்டி இருந்தது. ஒரு வழியாக பஸ்ஸைப் பிடித்து உள்ளே ஏறியும் உட்கார்ந்து விட்டார்கள்.

பஸ்ஸில் ஒருவர் மற்றொருவரிடம், ''தப்பர்த்தம் செய்து கொண்டு விட்டான் ஸார். அதனால் வந்த வினை இத்தனையும்...'' என்றார்.

சின்னுவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. பின் ஆசனத்தில் யாரோ இருவர் பேசிக் கொண்ட பேச்சு அது.

தப்பர்த்தம்! ஆம்; அவன் முன்பு அப்படி அசட்டுத்தனமாக எதை எதையோ நினைத்துக் குழம்பி, மார்க்கபந்துவின் மீது கோபப்படவில்லையா? அவரைப் பற்றி எத்தனை கெடுதலான வதந்தி உண்டாயிற்று? சுந்தரியம்மாவிடம் எவ்வளவு அசட்டுத்தனமாக அந்தக் காகிதத்தை நீட்டிப் பேசினான்?

நல்ல வேளை. அசட்டுத்தனமாக ஆத்திரப்பட்டு வீட்டினுள்ளே ஓடாமல் திரும்பி வந்தானே?

ஆகா! இந்த மனம் தான் எத்தனை விசித்திரமானது! எந்தக் கிளையில் வேண்டுமானாலும் ஒட்டிக் கொண்டு விடுகிறதே?

அன்று தன் இருப்பிடத்துக்கு வந்த பிறகு சின்னுவுக்குத் திடீரென்று ஒரு ஆசை உண்டாயிற்று. காவேரியில் போய் முழுக வேண்டும் என்ற ஆசைதான் அது. இந்த ஆசை உதித்ததும் பூந்துறையின் பசுமையான காட்சிகள் அவன் கண்முன் விரிந்தன. காவேரித் தண்ணீரின் ஆசையுடன் இன்னொரு எண்ணமும் அவன் அடி நெஞ்சில் குடி கொண்டிருந்தது. பானு அங்கு முன்போல் வந்திருந்தாளானால்....? மாலை கதவைப் பூட்டிக் கொண்டு கிளம்பி விட்டான். அவன் ரயிலேறிப் பூந்துறைக்கு வந்தபோது விடியற்காலை மூன்றரை மணி இருக்கும்.

அப்பொழுது, ''ஏண்டா சின்னு வாடா?'' என்ற குரல் கேட்டது.

தளர்ந்து தொங்கும் முகத்தோலை விழிகளைச் சுருக்கி அவனை உற்றுப் பார்த்து விளித்தவர் ஐயாசாமி.

''ஆமாம் மாமா, இந்த வண்டியிலா நீங்களும் வந்தீர்கள்?''

''ஆமாம், நீ எங்கோ கோயமுத்தூர்ப்பக்கம் இருப்பதாகக் கேள்விப்பட்



**பூரண வாய் சுத்தத்திற்கென தயாரிக்கப் பட்டது**

- கிருமிகள் அகற்றப்பெற்ற நைலான் முடிகள்.
- அழகிய பிளாஸ்டிக் பிடியில் நன்கு இணைக்கப்பட்ட முடிகள்.
- உங்கள் பற்களுக்கான உருப்பெற்றது; சுலபமாக சுத்தம் செய்கிறது.
- மிருதுவான சுத்தி—பல்லின் எனமலை பாதிக்காது.
- மெதுவான முறையில் ஈறுகளை பலப் படுத்துகிறது.

**அதிக பலனுடன்!**

பற்களைப் பூரணமாக சுத்தம் செய்கிறது. ஈறுகளை மிருதுவாக தடவி விடுகிறது.

மூன்று அளவுகள்: பெரியவர்களுக்கு, சிறியவர்களுக்கு, குழந்தைக்கு
• ஹார்ட் • மீடியம் • ஸாப்ட்

# கால்கேட்

## நைலான் டூத் பிரஷ்

**மலிவு-நீடித்த உழைப்பு**

---

## தாமரையின் அழகை நீங்களும் பெறலாம் . .

நேர்த்தியாயும், மிருதுவாயும், பட்டின் மென்மையுடன் கூடிய எழிலைப் பெற இந்திய மங்கையர்கள் ஆஷா முகப் பவுடரை உபயோகிக்கிறார்கள்.
உங்கள் விலைக்குகந்த
உங்களுக்குரிய பவுடர்






# Asha

ஆஷா முகப் பவுடர்



விநியோகஸ்தர்கள்:
ஜ்யாப்ரே மானேர்ஸ் அண்ட் கோ ப்ரைவேட் லிட்.
பம்பாய்—கல்கத்தா—டில்லி—மதராஸ்.

டேனே?'' என்று கேட்டுக் கொண்டு பெஞ்சியில் உட்கார்ந்தார் ஐயாசாமி.

''ஆமாம் மாமா. சும்மா ஊரில் பத்து நாள் காவேரித் தண்ணீர் குடித்து விட்டுப் போகலாம் என்று வந்தேன். நீங்கள் மாப்பிள்ளையோடு பம்பாய்க்குப் போயிருந்தீர்களே, இங்கே எப்போது வந்தீர்கள்?''

''ஹூம், என்னடா பம்பாய்? எட்டு அடிக்குள்ளே எண்பது பேர் இருந்து கொண்டு? இந்தக் காவேரி ஸ்நானத்தை விட்டு அங்கே என்னடா இருக்கிறது? நான் போன மூன்றும் மாசம் திரும்பி விட்டேன்.''

விடிவெள்ளி முளைக்கும் அந்த வேளையிலே குளிர்ந்த காற்று மெல்ல உடலைச் சிலிர்க்க வைத்துக் கொண்டு தழுவிச் செல்ல இருவரும் தெரு மூலை திரும்பினார்கள். பிரமராயர் சந்தின் கழிவு நீர்க் கங்கையாற்றின் வாசனை மூக்கைத் துளைத்துச் சின்னுவைக் குசலம் விசாரித்தது.

அவன் வந்தது தெரிந்ததுமே வீட்டிலுள்ளவர்கள் அனைவரும் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவன் சுக சௌக்கியத்தைப் பற்றியும் இன்னும் வேறுபல கேள்விகளும் கேட்டு அவனைத் திணற அடித்தார்கள்.

''ஏண்டா, சின்னு! ரயில் இன்ஸ்பெக்டர் வீட்டிலிருந்து அந்தப் பெண் பானு முன்பைப் போல் மறுபடியும் ஓடி வந்து விட்டதே இங்கே ஒரு நாள்?'' என்றார் இட்டு.

சின்னுவுக்கு உலகமே அசைவற்றுப் போயிற்று. ''....ம்''

''அப்புறம் அவரும் அந்தப் பிள்ளையுமே கார் போட்டுக் கொண்டு வந்து அழைத்துப் போனார்கள்!''

''பாவம், மூளைக்கோளாறு போலும்! இப்படித்தானே அவளுக்கு முன்பும் வந்ததாம். வீட்டில் சரியாகக் கவனித்துச் செய்யப் பெரியவர்கள் என்று யார் உண்டு? திடுமென்று இங்கேதான் வந்தாள். 'ஏன்?' என்று கேட்டதும் 'உங்களைப் பார்த்துப் போக வந்தேன். பாட்டியைப் பார்த்துப்போக வந்தேன்' என்றாள். பாட்டியையாவது பார்க்கவாவது? கண் கழிப்பே நன்றாக இல்லை. என்ன செய்வது என்று நாங்கள் விழிக்கையிலே நல்ல வேளையாக இரண்டு பேருமே வந்து அழைத்துப் போய் விட்டார்கள்'' என்று ருக்மிணி விவரித்தாள். அப்போது நாகு ''பானுவின் அம்மாவுக்கும் இப்படித்தானே வருமாம்! அந்தப் பெண்ணுக்கும் அப்படியே வருகிறது. அதில் அதிசயமென்ன!'' என்றாள்.

சின்னுவுக்கு யாரோ நெஞ்சை இறுக்கிப் பிழிந்தாற் போல் இருந்தது. அப்படியானால் தந்தி உண்மை. அன்று அழுதவளும் பானுவேதான்! 'பானு, உன் கதி கடைசியில் இப்படி ஆயிற்று? பைத்தியம் பிடித்த நிலையிலா நீ அப்படி விம்மினாய்? தெரிந்தும் பேசாமல் வந்தேனே?'

எண்ணாததெல்லாம் எண்ணத் துவங்கி விட்டது சின்னுவின் உள்ளம்.

இந்தச் செய்தி கேட்ட பிறகு அவனால் பூந்துறையில் ஒரு கணம் கூட இருக்க முடியவில்லை.

சின்னத்துரை பாதி ரயிலிலும் பாதி பஸ்ஸிலுமாகப் பிரயாணம் செய்து கோவையைவந்தடையும்போது விளக்கு வைக்கும் தருணமாக இருந்தது. நேராகக் கஜேந்திரபுரம் சென்றான். எப்படிப் பானுவை அவர்கள் சிறையிலிருந்து விடுவிப்போம் என்றெல்லாம் அவன் யோசித்துக்கொண்டே சென்றான்.

மார்க்கபந்து கூடத்தில் குழந்தையாக மாறி விளையாட்டில் ஈடுபட்டிருந்தார். அவருடைய தோழன் ரவிதான். விளையாட்டு, ரயில் விளையாட்டுத்தான் என்பதைச் சொல்ல வேண்டுமா?

சிரத்தையோடு அவர் பொம்மைத் தண்டவாளங்களைப் பொருத்த, தோழன் 'இப்படியில்லை போ' என்று காலால் ஆத்திரத்துடன் தண்டவாளத்தை உதைத்துத் தள்ளினான். பிடிப்புவிட, ஓடி வந்த ரயில் வண்டி தடம் புரண்டு கவிழ்ந்தது.

''தடிப்பயலே, நான் சரி பண்ணுகிறேன், காலால் உதைக்கிறாயா!'' என்று கத்தி, அடித்தார் அவர்.

பையன் வீறிட்டு அலறினான். அப்போது அங்கு வந்தவள்...விளக்கொளியில்...பானு, பானுதான். கனவில்லை. நிசமாக அவளேதான். கறுப்புக்கரை போட்ட வெள்ளைச்சேலை. பனிச்சென்ற குங்குமம். சிவந்த உதடுகளில் சிரிப்பு. சோகத்தின் ரேகைகூடக் காண முடியாத நிறைந்த சிரிப்பு!

''தாத்தா அடித்தாரா? கிடக்கிறார்!'' என்று குழந்தையைச் சமாதானம் செய்துவிட்டுப் பெரியவரைப் பார்த்து, ''புரட்சிக்காரரின் பிள்ளை தானே, மாமா?'' என்றாள்.

அவளுடைய குறும்புப் பார்வை மறுபடியும் திரும்பியது. பானுவின் கணவன் ராஜா கூடத்திலிருந்து வந்து, ''நீ இங்கே வாடா ரவி, ரயிலும் வேண்டாம், மோட்டாரும் வேண்டாம். நடந்து போகிற விளையாட்டு விளையாடலாம் நாம்'' என்றான். அவன் பார்வை, பையுடன் சுவரோரம் ஒதுங்கி நின்ற சின்னத்துரையின் மீது விழுந்து விட்டது. ''அடாடா! வாருங்கள்,

வாருங்கள் பூமண்டல மசால் வடை மன்னரே! வாருங்கள். பானு! நீ கவனிக்க வில்லையா? எத்தனை நேரமாக நிற்கிறார்?''

அவன் முன் வந்து சின்னத்துரையைக் கண்ணபிரான் குசேலரை எதிர்கொண்டு அழைத்த தோரணையில் அழைத்த போது, பானு மகிழ்ச்சியோடு ''வாருங்கள், அண்ணா!'' என்று அவனை வரவேற்றாள்.

தூண் மறைவில் நின்ற காந்திமதி 'களுக்' கென்று சிரித்தாள்.

''மாமாவுக்குப் புரட்சியின் பலாத்காரக் கொள்கைகளில் நம்பிக்கை படுத்துப் போயும் அடுக்கு மொழி வழக்கம் கொஞ்சமும் மாறவில்லை. மசால் வடை மன்னராவது?''

''ஓ, பின்னே அகில உலக மசால் வடை வீரர் என்று சொல்லச் சொல்லுகிறாயா? சரி, அப்படியே இருக்கட்டும்!'' என்று பரிதிமால் சிரித்தான்.

அப்போது காந்திமதியின் பார்வை வாசற்புறம் விழுந்தது. இதழ்களில் குறுநகை இலங்கியது. காலியான தண்ணீர்க் கூஜாவும் கையுமாக மாடியிலிருந்து இறங்கிக் கூடத்துக்கு வரும் சங்கரனைப் பார்த்துக் கொண்டே, ''சேச்சே! மாமா, மசால் வடை வீரர் என்றால் வேறு அர்த்தமாகி விடுகிறதே! அந்தப் பட்டத்தைப் பெற வேறு ஒருவர் தகுதியாக இருக்கிறாரே!'' என்றாள் காந்திமதி.

சங்கரன் சற்று விழிப்போடு கூஜாவைக் கீழே வைத்தான்.

''பார்த்தாயா அப்பா! அன்று பொட்டலம் முழுதும் நீ வீடு வருவதற்குள் தீர்த்துக் கட்டி விட்டதை எப்படிச் சொல்கிறாள் என்று?'' என்று கேலி செய்தான் பரிதிமால்.

''இதுதான் பெண்களின் யுகமாயிற்றே? சொல்வதைக் கேட்டுக் கொள்ள வேண்டியதுதான்!''

பானுவும் கலகலவென்று சிரித்தாள்.

''ஏண்டா, சின்னு; எங்கே யிருந்து வருகிறாய்? நேற்றைக்கு நான் கணபதி பாளையம் போனேன். கடை சாத்திக் கிடந்ததே?'' என்றார் மார்க்கபந்து.

சின்னு பதிலளிக்கச் சங்கடப்பட்டு, 'பிஸ்கோத்து இல்லையா மாமா?' என்று முழங் கையில் உராய்ந்து தோழமை கொண்டாடிய ரவியைப் பார்த்தான்.

''பானு, சின்னத்துரைக்குக் காப்பி கொண்டு வந்து கொடு. சந்தோஷத்தில் பேசாமல் நிற்கிறாயே!'' என்று கூறிக் கொண்டு அவனைப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு மார்க்கபந்து பேச ஆரம்பித்து விட்டார். சின்னுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. பானுவுக்குப் பைத்தியமாவது? அப்படிச் சொன்ன மனிதர்களின் மீதே. ஏன் தன்னிடமே, அவனுக்கு இப்போது சந்தேகம் உண்டாயிற்று!

''பூந்துறைக்கா போனாய்? உடம்பு ஒரு மாதிரி ஏன் களைப்பாயிருக்கிறாய்?''

''ஒன்றுமில்லை மாமா, ரயிலை விட்டு இறங்கி நேராக வந்தேன். வெறுமனே தான் போயிருந்தேன்...''

இதற்குள் பரிதிமால் குனிந்து, ''போய்விடப் போகிறார் அப்பா, இன்று இங்கேயே இருக்கட்டும், ஒரு நிமிஷம், நான் வருகிறேன்!'' என்று அவனிடம் விடை பெற்றுக் கொண்டு சங்கரன் பின் தொடர வெளியே போய்விட்டான்.

பானு ஆவி பொங்கும் காப்பியைக் கொண்டு வந்து வைத்தாள். அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே. ''ஏன் அண்ணா? மன்னி என்று அழைக்கும் பாக்கியமே எனக்குக் கொடுக்கப் போவதில்லையாமே நீங்கள்?'' என்றாள்.

''இன்று விட்டு விடப் போகிறேனா? காப்பியைக் குடி. குளிக்கிறாயா? வெந்நீர் போடச் சொல்லட்டுமா?'' என்று உபசரிக்க ஆரம்பித்தார் மார்க்கபந்து.

''மாமி போனாள், கையோடு அவளும் போனாள். எத்தனையோ கஷ்டம், வாழ்க்கை என்ன ரயில் தண்டவாளமா? ஒரே மாதிரி போக?'' என்று அவர் பெருமூச்சு விட்டார்.

சின்னுவுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. ''யார் மாமா?'' என்றான்.

''காந்தியின் அம்மாதான். அநியாயமாய்ப் போய் விட்டாள். காந்தி என் பெண் வயிற்றுப் பேத்தி. முன்னே காசிப்பூர் பக்கம் ரயில் கவிழ்ந்ததே, அது அவள் உயிரைப் பலி வாங்கிக் கொண்டது. ராஜாவுக்கு மனசு திரும்பி, சாத்விகத்தில் நம்பிக்கை ஏற்பட்டதே அப்புறம்தான் என்று எனக்கு எண்ணம், ''—பழைய நினைவுகளில் அமிழ்ந்து தொண்டை கரகரக்கப் பேசினார் அவர்.

''காந்தி இங்கே இருக்கிறாள். ஏதோ அந்தப் பையன் சங்கரனும் நல்ல குணமுடையவன். இரண்டு பேரும் ஒத்துப் போய் விட்டார்கள். கல்யாணத்தை முடித்துவிட்டால் என் பொறுப்புக் குறையும். ஏண்டா! காப்பியை வைத்துக் கொண்டிருக்கிறாயே கையிலேயே?''

சின்னத்துரைக்குக் கனவு உலகில் இருக்கிறோமோ என்று சற்றைக்கொரு முறை பிரமை குறுக்கிட்டது. காப்பித் தம்ளரைக் காலி செய்தான். பானுவின் சமாசாரத்தை அறவே மறந்து போனான் என்று சொல்லலாம்.

''அன்றைக்கு வந்தாயாம். பானு சமாசாரம் தெரியுமோ இல்லையோ? நீ என்னதான் நினைத்தாயோ?''

அவன் உணர்வு குத்திட்டு நின்றது.

அந்தச் சமயத்தில் 'குவா குவா' என்ற இளங் குழந்தையின் ஒலி கூடம் முழுதும் நிறைந்து மார்க்கபந்துவின் கவனத்தைத் திருப்பியது.

சின்னத்துரை வியப்புடன் அந்த ஒலி வந்த பக்கம் விழித்துப் பார்த்தான்.

''பானு, பானு!'' என்று மார்க்கபந்து கத்தினார்.

''இதோ வந்து விட்டேன்!''

''என்ன பார்க்கிறாய்? இன்றுதான் பதின்மூன்று நாளாகிறது, குழந்தை பிறந்து. அப்பப்பா! என்ன கஷ்டம்! கவலை என்கிறாய்?'' என்ற மார்க்கபந்து குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''இந்த ஐந்தாறு ஏழெட்டு மாதங்கள் அவளுக்கு ஒரு மாறாட்டம்தான். முதல் தடவை உனக்குத் தெரியுமோ என்னவோ? பூந்துறைக்கு ஓடி வந்தாளே? அப்போது சுயபுத்தியில் இருந்தாள் என்றா நினைக்கிறாய்? ஒரு மாதிரியான நிலை. உனக்குக்கூட நானே அவள் எழுதுவதுபோல் அப்போது ஒரு கடிதாசி எழுதிப் போட்டதாக நினைவு. அப்போதுகூட நானும் பானுவுக்கு அப்படி வரும் என்று நினைத்தேனா?''

சின்னத்துரை மூச்சுவிடவே மறந்தவன்போல அவரை உற்றுப்பார்த்தான்.

''அன்று பார், நாங்கள் மகாநாட்டுக்குப் போய்த் திரும்பி வருவதற்குள் பூந்துறைக்குப் போய் விட்டாள். வீட்டிலே காவல் வேறு இத்தனைக்கும். டாக்டர் பிரசவித்த பின் சரியாகி விடும் என்று சொன்னாலும் எத்தனை கவலை என்கிறாய்? பூந்துறையில் என்னவோ சொன்னார்கள்.; அவளுடைய அம்மாவுக்கும் இப்படித்தான், இந்த மாதிரி சமயங்களில் மாறாட்டம் வருமாம். நானும் நாலு பேரறிய எதற்கு வெளியே சொல்ல வேண்டும் என்றுதான் அன்றுகூட உன்னிடம் ஏதோ சொன்னேன்....''

சின்னுவுக்கு நெஞ்சிலிருந்து பந்து போன்று ஒன்று கரைந்து இறங்கி அவன் உள்ளத்தை இலேசாக ஆக்கியது.

அசட்டுத்தனமாக என்னவெல்லாம் நினைத்தான்?....பூந்துறையில் ருக்மிணி அம்மாளோ, நாகுவோ இந்தச் சமாசாரத்தைச் சொல்லியிருக்க மாட்டார்களோ? வெறுமனே புத்தி சரியாயில்லை என்றடித்தார்களே?

அவன் விழிகளைக் கொட்டவும் மறந்தவனாய் உட்கார்ந்திருந்த போது, ''ஏண்டா! யோசனை முடிவாயிற்றா? பொன்னுவைப் பார்த்தாயோ? இப்போது வேண்டுமானால் அழைத்துவரச் சொல்லட்டுமா?'' என்றார் மார்க்கபந்து.

''காந்தி அதற்குத்தான் போயிருக்கிறாள் மாமா! ஏன் அண்ணா, மதனி வருவாள், எனக்கும் பத்து நாட்கள் சொந்தம் கொண்டாடிக் கொண்டு வர முடியும் என்று பார்த்தேனே, சந்தர்ப்பமே கொடுக்க மாட்டீர்களா?''

சின்னு நிமிர்ந்து அவளைப் பார்த்தான். பரிவும் சகோதர பாசமும் ஒளிர்ந்த அவள் விழிகளில் இரங்கும் பாவமுமிருந்தது. ''நீ சொல்லும்போது நான் மறுப்பேனா, பானு?'' என்று கேட்டது அவன் பார்வை. அடுத்த கணம் அவன் இதழ்களில் அந்தக் கோணல் புன்னகை நெளிய அவன் தலையை நிமிர்ந்து கொண்டான்!

''குழந்தையைப் பாருங்கள்'' என்று அவள் தணித்துக் காட்டினாள். சின்னஞ் சிறு கைகால்கள்; புஷ்பம் போன்ற மேனி; விளக்கு வெளிச்சத்துக்கே கூசும் கரும் மணி விழிகள்; செப்புவாய்!

''என்ன பேர் மாமா?'' என்று கேட்டான் சின்னு.

''அவர்கள் என்னென்னவோ பேர்கள் சொன்னார்கள். யார் எப்படி வேண்டுமானாலும் கூப்பிடட்டும். நான் மாமி பேர்தான் வைத்திருக்கிறேன். ராஜா இவ்வளவு சாந்தமாக நிதானமாகச் சிந்தனை பண்ணிப் பேசுபவனாக, செயல் புரிபவனாக மாறிப் பார்க்க அவளுக்கு எத்தனை ஆசை! ராஜா தன் குடும்பத்தோடு நாளைக்குப் போகிறான் வினோபாஜியுடன் பாத யாத்திரையில் கலந்து கொண்டு அவருடன் கூடக் கோவைக்கு வருவதற்கு....'' என்று அவர் விவரித்தார்.

பானு அவன் கையில் குழந்தையைக் கொடுத்தாள்.

சின்னத்துரைக்கு நெஞ்சு நிறைந்து தளும்பியது; உடலில் ஒரு இன்பச் சிரிப்பு உண்டாயிற்று.

பூவை ஏந்துவது போல் அலுங்காமல் ஏந்திக் கொண்டு ஒளி வீசும் கண்களுடன் அந்தச் சிசுவைப் பார்த்துப் புன்னகை செய்தான். (முற்றும்)




**கா**லையில் பிடித்த மழை. கொஞ்சமாவது நிற்க வேண்டுமே? இல்லை. கொட்டித் தீர்த்து விடுவேன் என்பது போல் விடாமல் பெய்து கொண்டிருந்தது. தார் பூசிய சுவர் போல வானம் மேகங்களால் இருண்டு கிடந்தது. மலைக்குளிர் வேறு சேர்ந்து கொண்டால் கேட்கவா வேண்டும்?

''ஏன் இங்கு வந்து மாட்டிக் கொண்டோம்?'' என்று ஆகிவிட்டது எனக்கு. தேயிலை எஸ்டேட்டின் நடுவில் இடிந்த அந்தச் சின்னஞ் சிறிய தகரக் கொட்டகை இருந்தது. அதில் ஒழுகிய இடம் போக மிஞ்சிய ஒரே ஒரு மூலையில் நானும் டிரைவரும் ஒண்டிக் கொண்டு நின்றோம்.

உடுமலைப் பேட்டையிலிருந்து தீர்த்தங்கரார் பாறையையும் திருமூர்த்திமலையையும் பார்த்துப் போகலாமென்று ஜீப்பில் புறப்பட்டிருந்தோம். நானும் டிரைவருமாக இரண்டே இரண்டு பேர்தான்! திருமூர்த்தி மலையைப் பார்த்து முடித்ததும் மலைமேல் தேயிலைத் தோட்டங்கள் இருக்கும் பகுதிகளை, சென்று பார்க்க வேண்டும் என்று எனக்கு ஒரு ஆசை உண்டாயிற்று. என் விருப்பத்தை டிரைவரிடம் கூறினேன்.

''மூணாறு போகிற ரோட்டிலே அதிக தூரம் போனால்தான் எஸ்டேட்டுகளைப் பார்க்க முடியும்! இப்பொழுதே மழை விழுகிறதே. மழை பெரிசாகப் பிடித்துவிட்டால் அங்கே போய்த் திரும்புவது கஷ்டமாச்சே?'' என்று பதில் சொன்னான் அவன்.

''பரவாயில்லை, அப்பா! போய்விட்டுத் தான் வருவோமே! இதற்கென்று தனியாக இன்னொரு நாளா புறப்பட்டு வரப்போகிறோம்? மழை இலேசாகத்தான் தூறுகிறது'' என்றேன் பிடிவாதமாக.

''சரி. நீங்கள் ரொம்பச் சொல்கிறீங்க. எப்படி மாட்டேன்கிறது?'' என்று அரை குறை மனத்தோடு புறப்பட்டான் அவன்.

அந்த டிரைவருக்கு ஜோசியம் தெரியுமோ என்னமோ? இப்போது அவன் சொன்னது உண்மையாகி விட்டது. எங்கள் ஜீப் எஸ்டேட்டுகள் இருக்கும் மலைப்பகுதியை அடைந்த போதே மழை பலமாகப் பிடித்துக் கொண்டு விட்டது. அப்போது காலை பதினொரு மணிக்கு மேல் இருக்கும். ஜீப்பை நிறுத்தி விட்டு அந்தத் தகரக் கொட்டகையில் ஒண்டினோம். மழை நிற்கவே இல்லை. மாலை ஆறேகால் மணி ஆகிவிட்டது. என் மணிக்கட்டில் கடிகாரமும், காலடியில் ஒழுகின மழைத் தண்ணீரும் வஞ்சகமின்றி ஓடிக் கொண்டிருந்தன.

டிரைவர் என்னை விழித்து விழித்துப் பார்த்தான். வாயால் சொல்லிக் காட்ட முடியாததைக் கண்களால் நிறைவேற்றிக் கொண்டிருந்தான் அவன். யானை தன் தலையிலேயே மண்ணைப் வாரிப் போட்டுக் கொண்ட மாதிரி ஆகிவிட்டது என் நிலை.

''இது என்னப்பா சனியன் பிடித்த மழை? பிரளயத்துக்கு வர்ஷிக்கிறது போலப் பொழிந்து தள்ளுகிறதே! என்ன வந்தாலும் சரி யென்று இப்படியே ஜீப்பை ஓட்டிக் கொண்டு கிளம்பி விட்டால் என்ன?''

''நடக்கிற காரியமாய்ப் பேசுங்க. இந்த மழையிலே ஜீப் நின்ற இடத்திலேயிருந்து ஒரு அங்குலங்கூட நகராது. மலை ஓடைகளிலே தண்ணீர் கரை நிமிர ஓடிக் கொண்டிருக்கும். ரோடு தண்ணீர் அரித்து மேடும் பள்ளமும் சேறும் சகதியுமாக இருக்கும். இந்த நிலையிலே இனிமேல் ஒன்றும் செய்வதற்கில்லை.''

''என்னப்பா! பெரிய குண்டாகத் தூக்கிப் போடுகிறாயே? பசியும் பட்டினியுமாக இரவு முழுவதும் இந்த நட்ட நடுக்காட்டில் ஓட்டைத் தகரக் கொட்டகையிலா தங்கியிருக்க வேண்டும்? இது துஷ்ட மிருகங்கள் பழகுகிற இடமாயிற்றே?''

''நான் சொன்னேனே, நீங்கள் கேட்டீர்களா? போய்த்தான் ஆகவேண்டுமென்று ஒற்றைக் காலிலே நின்றீர்கள். புறப்பட்டு வந்தாயிற்று. இனிமேல் வருவதை அனுபவிக்கவேண்டியதுதான்''

அவன் தன் ஆத்திரத்தைப் பேசித் தீர்த்துக் கொண்டான்.

நான் தகரக் கொட்டகை வாசலில் வந்து பார்த்தேன். கண்ணுக்கெட்டிய தூரம் வரை



''நான் தேர்தலுக்கு நிற்கிறேன்; என் மனைவி தினம் யாரோடாவது மல்லுக்கு நிற்கிறாள்; என் பெண் கல்யாணத்துக்கு நிற்கிறாள்; அதோ பையன் பஸ்ஸுக்கு நிற்கிறான்!''

ஒரே இருளின் ஆட்சி; தங்களுக்கும் இருளுக்கும் அதிக வேறுபாடின்றித் தொலைவில் கருநீல மலைச் சிகரங்கள் இருளோடு இருளாக ஐக்கியப்பட்டிருந்தன. மலைப் பகுதியில் சாதாரணமாகவே ஐந்து ஐந்தரை மணிக்கே இருண்டு விடும். மழை மூட்டத்தினால் அப்போது மணி ஏழுகூட ஆகாமலிருந்தும் இருள் கனத்துப் போயிருந்தது. ஜீப்பின் அருகே நெருங்கிப் பார்த்தேன். உட்காருகிற 'ஸீட்டுகள்' உட்பட எல்லாம் சொட்டச் சொட்ட நனைந்து போயிருந்தன.

ஜீப்பின் முன்புறத்து ஸீட்டை உற்றுப் பார்த்தவன் சட்டென்று திடுக்கிட்டுப் போய் நாலடி பின்னுக்கு நகர்ந்தேன். பயம் மனத்தைக் கவ்வியது. மயிர்க் கால்கள் மேலே எழும்பிக் குத்திட்டன.

''ஏய், டிரைவர்! இங்கே வா; அந்த டார்ச் லைட்டை இப்படிக் கொண்டா. இது என்னவென்று பார்ப்போம்.'' என் குரல் நடுக்கத்தினால் மிரண்டு குழறிப் போயிற்று.

''என்னது? என்ன, அங்கே? இதோ வந்து விட்டேன்!'' டிரைவர் ஓடி வந்தான். நடுங்கும் கைகளால் அவனிடமிருந்து டார்ச்சை வாங்கினேன்.

ஸ்விட்சை அமுக்கக் கைவிரல் தயங்கியது. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அமுக்கினேன். 'டார்ச்' ஒளி வட்டவடிவமாக முன் ஸீட்டில் விழுந்து பரவியது.

அப்பாடா! நல்ல வேளை! நான் நினைத்துப் பயந்தது போல எந்தத் துஷ்டமிருகமும் வண்டிக்குள் ஏறிப் படுத்திருக்க வில்லை. ஒரு மனித உருவம்தான் முகம் தெரியாமல் இழுத்துப் போர்த்து வெள்ளைப் போர்வையால் மூடிக் கொண்டு மழைக்கு அடக்கமாக ஜீப்பின் முன் ஸீட்டில் சுருண்டு முடங்கியிருந்தது. அதைப் பார்த்த பிறகுதான் எனக்கு நிதானமாக மூச்சு வந்தது. படுத்துக் கிடந்த விதத்தைப் பார்த்தால் கைகளில் வேறு ஏதோ ஒரு பையையோ, மூட்டையையோ, அணைத்துக் கொண்டிருந்த மாதிரியும் இருந்தது.

''இந்தா, ஐயா! எழுந்திரு. ரோட்டிலே ஏதாவது வண்டி நின்று கொண்டிருந்தால் யாருடையதென்று கேட்காமல் நீ பாட்டுக்கு ஏறிப் படுக்கலாமா? எழுந்திரு, ஐயா, எழுந்திரு.'' வெள்ளைப் போர்வையின் மேல் ஓங்கி ஒரு தட்டுத் தட்டினான் டிரைவர்.

குபீரென்று வாரிச் சுருட்டிக் கொண்டு ஒரு இளம் பெண் எழுந்திருந்தாள். அவள் கையில் ஒரு குழந்தை. எங்கள் இருவருக்குமே ஆச்சரியம் நிலை கொள்ளவில்லை. எவனாவது ஒரு எஸ்டேட் கூலி குளிருக்கு அடக்கமாக முடங்கியிருப்பான் என்றுதான் நாங்கள் எதிர்பார்த்தோம்.

அந்த நேரத்தில் அந்த மலைக்காட்டில் இப்படி ஒரு நிகழ்ச்சியை யார்தான் எதிர்பார்க்க முடியும்? பதறி நடுங்கிக் கொண்டே குழந்தையும் கையுமாகக் கீழே இறங்கி நின்றாள் அவள். குளிரில் உதறும் மணிப்புறாவின் அழகிய மென்மையான சிறகுகளைப் போல அவள் பூவுடல் நடுங்கியது.

மழை குறைந்து மெல்லியசாரலாக விழுந்து கொண்டிருந்தது. கல்யாண வீட்டில் பன்னீர் தெளிக்கிற மாதிரி. எதிர்பாராத நிகழ்ச்சியாலும், அதன் அதிர்ச்சித் திகைப்புக்களாலும் எதைப் பேசுவது, முதலில் யார் பேசுவது, எப்படிப்பேசுவது என்று எதுவும் தோன்றாமல் மூன்று பேரும் நனைந்து கொண்டே சில விநாடிகளாவது நின்றிருப்போம்.

திடீரென்று வெளிக் குளிரும் மழைத் துளியும் பட்டு உறைக்கவே குழந்தை வீறிட்டு அழ ஆரம்பித்து விட்டது. டிரைவர் குனிந்த தலை நிமிரவே யில்லை. நான் சமாளித்துக் கொண்டேன். குழந்தையின் அழுகை எனக்கு நிதானத்தைக் கொடுத்து விட்டது.

டார்ச் ஒளியை அவள் முகத்துக்கு நேரே பாய்ச்சினேன். அழகிய முகம். கோவிலிலுள்ள அம்மன் சிலை போல அவள் அழகு ஒருவிதமான பயத்தையும் உண்டாக்கியது. மஞ்சள் கொன்றை நிறம். மிரண்டு பாயும் விழிகள். தந்தத்தில் செதுக்கினாற் போன்ற நாசி; வட்டமுகத்தில் சுருள் சுருளாகக் கேசம் புரளும் நெற்றி. இயற்கையாகவே சிவந்த ரோஜா இதழ்கள். விளக்கொளியில் நான் அவளையே பார்ப்பதைக் கண்டு அவள் தலையைச் சாய்த்தாள். விழிகள் தரையை நோக்கின. குழந்தையும் அழகாகத்தான் இருந்தது; கழுத்துவரை போர்த்தியிருந்தாள். இருட்டில் 'டார்ச்சின்' சிறிய ஒளியில் முகத் தோற்றத்தை மட்டுமே கொண்டு அது ஆண் குழந்தையா, பெண் குழந்தையா என்று அனுமானிக்க இயலவில்லை.

''மழையில் நனைந்துகொண்டே நிற்கிறாயே, குழந்தைக்கு மழைத் தண்ணீர் ஆகாது. இதோ இப்படி இந்தத் தகரக் கொட்டகைக்கு வா....'' நான் தயங்கித் தயங்கித்தான் வார்த்தைகளை வெளியிட்டேன்.

''இல்லை, ஐயா! உங்கள் காரில் படுத்துக் கொண்டதற்கு என்னை மன்னித்து விடுங்கள். நான் மட்டுமானால் எப்படியாவது நனைந்து கொண்டே போயிருப்பேன். குழந்தைக்காகத் தான் காரில் ஏறி முடங்கினேன். இப்போது மழை குறைந்து விட்டது. நான் போய் விடுகிறேன்.'' குரல் அழகுக்கேற்ற இனிமை நிறைந்துதான் இருந்தது.

''இரு அம்மா, இரு! நீ யார்? எங்கிருந்து வந்தாய்? எங்கே போகிறாய்? இந்த மலைக் காட்டில் மழை இருட்டில் எப்படிப் போவாய்? தனி ஆளாகச் சின்னஞ்சிறு குழந்தையையும் எடுத்துக் கொண்டு இந்த மழை நேரத்தில் நீ கிளம்பியதே தவறு. யானையும், புலியும்

சர்வ சாதாரணமாக நடமாடுகிற இந்தப் பிரதேசத்தில் ஒரு சிறு வயசுப் பெண் பச்சைக் குழந்தையோடு தனியே போவதற்குத் துணிந்தால் என் மனம் அதை ஒப்புக்கொள்ள மாட்டேனென்கிறதே?''

''ஐயா! நீங்கள் கேட்பதையே தான் நானும் என் மனத்தைக் கேட்கிறேன். 'எங்கிருந்து வந்தேன்? எங்கே போகிறேன்? எதற்காகப் போகிறேன்? ஏன் தனியாகப் போகிறேன்?' பதில்தான் தெரியவில்லை.''

''அம்மா! உன்னைக் கண்டால் ஏதோ மனக் கஷ்டமடைந்து வீட்டுக்காரரோடு மனஸ்தாபப் பட்டுக் கொண்டு வந்தது போல் தோன்றுகிறது. என்னையும் இந்த டிரைவரையும் உன்னுடைய சகோதரர்களாக நினைத்துக் கொண்டு உன்னைப் பற்றிய விவரங்களைச் சொல். எங்களால் உனக்கு ஏதாவது உதவி செய்ய முடியுமானால் மகிழ்ச்சியோடு செய்யச் சித்தமாயிருக்கிறோம். வா அம்மா!..மழையில் நனைந்து கொண்டே நிற்காதே. உள்ளே போய்ப் பேசுவோம். தகரக் கொட்டகையில் மழை ஜலம் ஒழுகினாலும் உள்ளே மூன்று பேர்கள் உட்காரலாம்.

அந்தப் பெண் ஒருகணம் எங்கள் இருவரையும் உற்றுப் பார்த்தாள். பார்வையா அது? மனத்தின் ஆழத்தை முகத்திலிருந்து ஊடுருவித் தெரிந்து கொள்ள முயலும் தூண்டில்! எங்கள் நாணயத்தைக் கண்களாலேயே பரிசோதிக்கிறாள் போலிருந்தது!

''ஐயா! உங்கள் இருவருக்கும் மிகவும் நன்றி. என்னிடம் உங்களுக்குச் சொல்லுகிறாற் போலப் பெரிய விஷயம் ஒன்றுமில்லையே? உங்கள் கருணைக்கும் அநுதாபத்துக்கும் நானும் இந்தக் குழந்தையும் தகுதியற்றவர்கள். தயவுசெய்து என்னை நான் போகவேண்டிய வழியில் போவதற்கு அனுமதியுங்கள்..''

தொலைவில் யானைகள் பிளிறும் ஒலி பயங்கரமாக இருளில் எதிரொலித்தது. காற்றில் மரங்கள் பேய் பிடித்து ஆடுபவை போல் ஆடிக்கொண்டிருந்தன. இலேசாகத் தூறிக் கொண்டிருந்த சாரலும் நின்று விட்டது. மழையின் பங்கையும் சேர்த்துக் கொண்டு காற்று விசுவரூபம் எடுத்திருந்தது. மரக்கிளைகள் உரசும் 'மர்மர' சத்தமும் காட்டு மிருகங்களின் ஓலமுமாகச் செவிகள் அதிர்ந்தன. குழந்தையும் அழுகையை நிறுத்தவில்லை. அந்தப் பெண்ணும் இடத்தை விட்டு நகரவில்லை.

''சொன்னால் கேள், அம்மா! நீ அவசரமாகப் போக வேண்டுமானால் ஜீப்பிலே கொண்டு போய் விடுகிறோம். தனியாக இந்த மலைப் பாதையில் இப்படிப்பட்ட வேளையில் குழந்தையோடு நடந்து போகக் கூடாது! வழியில் எவ்வளவோ அபாயங்கள் நிறைந்திருக்கின்றன..''

அந்தப் பெண் இரைந்து சிரித்தாள். கலகலவென்று வெளிப்பட்டது சிரிப்பு. ஆனால் அதில் ஏதோ உட்பொருளும் கலந்திருந்தது.

''போக வேண்டிய இடம்..? நான் இனிமேல் போக வேண்டிய இடம்தானே? அதை.. அதை நீங்களா கேட்கிறீர்கள்? அது உங்களுக்குத் தெரியத்தான் வேண்டுமா? வீணாக என்னை ஏன் இப்படி இங்கே நிறுத்தி வைத்துக் கொண்டு கஷ்டப்படுத்துகிறீர்கள்?''

''ஜீப்பிலேயே கொண்டு போய் விட்டு விடலாமே என்றுதான் கேட்டோம். வேறு ஒன்றுமில்லை!''

''ஐயா! நான் போகிற இடத்துக்கு ஜீப்பில் தான் போக வேண்டும் என்ற அவசியமில்லையே! நடந்தும் போகலாம். நடக்காமலும் போகலாம். ஓடியும் போகலாம். ஓடாமலும் போகலாம். இருந்த இடத்திலிருந்தே கூடப் போக முடியுமே அந்த இடத்துக்கு?''

''அம்மா! நீ ஏதோ மனவியாகுலத்தில் பேசுகிறாய். உள்ளதை உள்ளபடி எங்களிடம் சொன்னால்தேவலை.''

''நான் எங்கேயோ எப்படியோ தொலைந்து போகிறேன்; நீங்கள் யார் அதைக் கேட்க?'' என்றாள் வெறி பிடித்தவள் போல.







''என்ன ஸார்! மூக்கிலே பிளாஸ்திரி? மூக்கு உடைஞ்சிருக்கு போல் இருக்கே? எலக்ஷன் ரிஸல்ட் வந்து விட்டதா?''

''முடியாது! இப்போது உன்னை விட்டு விட்டால் நீ ஏதாவது ஏடாகூடமாகச் செய்து கொள்வாய். எனக்குத் தெரிந்து இரண்டு உயிர்கள் போவதை நான் சிறிதும் விரும்பவில்லை.''

''.........''

அவன் பதில் சொல்லவில்லை. பேசாமல் தரையைப் பார்த்துக் கொண்டு நின்றாள். டிரைவர் ஜீப் அருகில் போய் அதைச் சரி பார்த்துக் கொண்டிருந்தான். கார் இயந்திரங்கள் மழையால் கெட்டு விட்டதா, இல்லையா? அப்போதே அதில் புறப்பட முடியுமா என்று அவனுக்குக் கவலை!

இந்த நிலையில் திடீரென்று பாதையின் தென் பகுதியிலிருந்து ஒரு பெரிய லாரி வேகமாக வருவது தெரிந்தது. அதன் 'ஹெட் லைட்' வெளிச்சம் எங்களைக் கவர்ந்தது. மூன்று பேர்களுமே அதனால் கவரப்பட்டுத் தெற்குப் பக்கம் திரும்பினோம்.

''ஐயோ! அவர்கள்தான் போலிருக்கிறது. அட, பாவிகளா! நானாகச் சாவது பொறுக்காமல் நீங்கள் வேறு துரத்திக் கொண்டு வந்து விட்டீர்களா?'' அந்தப் பெண் அலறினாள். நானும் டிரைவரும் அவள் கூறியவற்றைக் கேட்டுத் திடுக்கிட்டு அவள் பக்கம் திரும்பினோம்.

''ஐயா! காப்பாற்றுங்கள் ஐயா! என்னையும் என் குழந்தையையும் கொல்ல வருகிறார்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். முன் போலவே நானும் குழந்தையும் துணியால் போர்த்திக் கொண்டு உங்கள் ஜீப்பின் முன் பக்கத்து ஸீட்டில் முடங்கிக் கொள்கிறோம்'' என்றாள்.

எனக்கு அவளுடைய பயத்துக்கும் பதற்றத்துக்கும் அர்த்தமே தெரியவில்லை. வியப்புத்தான் வளர்ந்தது.—இரக்கமாகவும் இருந்தது.

''சரி! ஏறிக் கொள். நன்றாகப் போர்த்திக் கொள். குழந்தை அழுது காட்டிக் கொடுத்துவிடப் போகிறது. ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தேன்.

அவள் அவசரம் அவசரமாக ஜீப்பில் ஏறி முன் போலவே துணியால் போர்த்தி விட்டு முடங்கிக் கொண்டாள். ஜீப்புக்குள் டிரைவர் கொண்டு வந்திருந்த 'கித்தான்' ஒன்று இருந்தது. வருகிறவர்கள் சந்தேகம் கொள்ளாமல் இருப்பதற்காகத் துணிக்கு மேல் அந்தக் கித்தானையும் போட்டு மூடி வைத்தேன். மந்திரத்துக்குக் கட்டுப்பட்டது போல் குழந்தையும் அழுகையை நிறுத்தி அடங்கி விட்டது. எப்படித்தான் அதன் அழுகையை அவள் நிறுத்தினாளோ, தெரியவில்லை!

அகர வேகத்தில் மலை ரஸ்தாவே அதிரும்படி பாய்ந்து வந்தது அந்த லாரி. இருளில் முன்னேறி வரும் இரண்டு பெரிய கொள்ளி வாய்ப் பிசாசுகளைப் போல லாரியின் முன் விளக்குகளின் வெளிச்சம் விநாடிக்கு விநாடி நாங்கள் இருந்த இடத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

லாரிக்குள்ளிருந்து வந்த ஆட்களின் பேச்சுக் குரலிலிருந்து குறைந்தது ஏழெட்டுப் பேர்வழிகளாவது அதில் இருக்கலாம் என்று தோன்றியது.

சொல்லி வைத்தாற்போல எங்கள் ஜீப்புக்கு அருகில் வந்ததும் லொட லொடத்து ஓடும் தன் 'புலன்களை' அடக்கிக் கொண்டு 'டக்' கென்று நின்றது அந்த லாரி. டிரைவர் உட்பட ஏழெட்டு முரட்டு ஆட்கள் அதிலிருந்து கீழே குதித்து எங்களை நோக்கித் திடுதிடுவென்று ஓட்டமும் நடையுமாக வந்தனர். வந்தவர்களில் இரண்டு பேர்கள் துப்பாக்கி வைத்திருந்தார்கள். வேட்டையாடுகிறவர்கள் உபயோகிக்கிற பெரிய துப்பாக்கிகள் அவை.

''இந்தப் பக்கமாகக் குழந்தையோடு ஒரு பெண் வந்தாளே, நீங்கள் பார்த்தீர்களா?' வெள்ளைப் புடவை கட்டிக் கொண்டிருப்பாள். இருபது இருபத்தெட்டு வயசிருக்கும்.'' அந்த லாரி டிரைவர் என்னிடம் கேட்டான்.

''இல்லையே! நாங்கள் சும்மா எஸ்டேட்டுகளைச் சுற்றிப் பார்க்க வந்தோம். எப்போதோ திரும்பிப் போயிருக்க வேண்டியவர்கள் மழை பலமாய்ப் பிடித்துக் கொண்டு விட்டதனால் ஜீப்பை இப்படி நிறுத்தி விட்டு இந்தக் தகரக் கொட்டகையில் நின்று கொண்டிருந்தோம். இப்போதுதான் மழை நின்றதும் வெளியே வந்தோம்.'' நான் மனத்தைச் சமாளித்துக் கொண்டு பதறாமல் நிதானமாக இப்படி ஒரு பொய்யைச் சொன்னேன்.

ஆனால் அடுத்த கணமே என் பொய் வெளுக்கும்படியாக ஒரு துரதிர்ஷ்டம் அங்கே நடந்து விட்டது. கித்தானையும் வெள்ளைத் துணிப் போர்வையையும் மீறிக் கொண்டு குழந்தை முனகி அழுகின்ற சத்தம் மெல்லக் கிளம்பிற்று. உடனே எனக்குப் பகீரென்றது.

''அங்கென்ன? ஜீப்புக்குள் குழந்தை முனகுகிற சப்தம் கேட்கிறதே!'' என்று கேட்டுக் கொண்டே அந்த லாரி டிரைவரும் அவனோடு வந்த முரட்டு ஆட்களும் பின் ஸீட்டை நோக்கிப் பாய்ந்தனர்.

எனக்குச் சர்வநாடியும் ஒடுங்கி விட்டது.

இந்த நெருக்கடியான சமயத்தில் என்னைக் காப்பாற்ற முன் வந்தான் டிரைவர். அவர்களுக்கு முன்னாலே பாய்ந்து அவர்களைத் தடுத்து நிறுத்தி, ''ஐயா சம்சாரம் படுத்திருக்கிறாங்க. சுற்றிப் பார்க்க வந்த இடத்திலே குழந்தைக்குக் குளிர் ஜுரம். கூதலடிக்காமலிருக்கக் கித்தானைப் போர்த்திப் படுத்திருக்காங்க. குழந்தை ஜுரத்தைப் பொறுக்க மாட்டாமல் முனகுது'' என்று என்னைச்

# 1956 DODGE

*with jet-fin styling*

The 1956 Dodge with its new FORWARD LOOK and incorporating new features takes you to new standards of performance. Look at these features:

★ New 12-volt electrical system gives quicker, easier starting, longer spark plug life, plenty of current

★ Maximum vision with new horizon windshield wrapped around top and bottom

★ New safety door latch for passenger protection

★ Redesigned sealed beam headlights extend zone of lighting on left side by 80 feet

★ Independent hand brake provides real emergency brake function

★ Safety-rim wheels, tubeless tyres and many other features

**New Pep with Increased Horsepower**

*The 6-cylinder engine is of proved dependability and economy.*






Upswept fin tails give the impression of speed to every line of the car

*Progressively Manufactured by:*

**THE PREMIER AUTOMOBILES LTD.**

KURLA, BOMBAY

Dealers :

M/s. ADDISON & Co. (Private) Ltd.

MOUNT ROAD - MADRAS

சுட்டிக் காட்டினான். எனக்கும் தன் தந்திரத்தைக் கண் ஜாடையினாலே தெரிவித்தான்.

''சரி, நீங்க சொன்னால் போதும். எங்க ஆத்திரம் நாங்கள் தேடி அலைகிறோம். பாவிப் பெண் ஒரு தோட்ட முதலாளியைக் கத்தியாலே குத்திவிட்டு ஓடி வந்து விட்டாள். அது தான் அப்போதிலிருந்து லாரியை எடுத்துக் கொண்டு தேடி அலைகிறோம்'' என்று கூறி விட்டுஅவர்கள் திரும்பிப்போய் லாரியில ஏறிக் கொண்டனர். லாரி புறப்பட்டது. அந்த லாரி டிரைவர் போகிற போக்கில் கூறிவிட்டுப் போன செய்தியைக் கேட்டவுடன் எங்கள் இருவருக்கும் தூக்கிவாரிப் போட்டது. அப்படியே உச்சந்தலை படீரென்று வெடித்து விடும் போலிருந்தது.

அதற்குள் போர்வையைப் பற்றிக் கொண்டு குழந்தையோடு இறங்கிய அவளிடம், ''என்னம்மா இது? அவங்க சொல்லி விட்டுப் போகிறது நிஜம்தானா?''....என்று திகைப்புடன் கேட்டேன்.

''நிஜம்தான்....சந்தர்ப்பம் என்னை அப்படிச் செய்ய வைத்து விட்டது!''

''என்ன? ஒரு ஆளைக் குத்திக் கொலைசெய்து விட்டா துணிச்சலோடு ஓடி வருகிறாய்?''

''ஐயா! நீங்கள் சகோதரிகளோடு பிறந்த மனிதர் என்றே நினைக்கிறேன். இல்லாவிட்டால் சற்றுமுன் நீங்களே கூறியதுபோல் உங்கள் சகோதரியாக நினைத்துக் கொண்டு நான் சொல்லப்போவதை நம்பிக்கையோடு கேளுங்கள். கேட்ட பின்பாவது நான் என் நிலையில் அப்படிச் செய்வதைத் தவிர வேறு வழி இல்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்'' என்றாள் அவள்.

''டிரைவர்! சீக்கிரமாக ரிப்பேரை முடி.. ஊரார் வம்பெல்லாம் நமக்கு எதற்கு? யார் கதையையும் நாம் கேட்க வேண்டாம். நீ வண்டியைக் கிளப்புவதற்கு வழி செய்! ஊருக்குப் போகலாம்....'' அந்தப் பெண்ணிடம் ஒருவிதமான வெறுப்பும் அருவருப்பும் திடீரென்று எனக்கு ஏற்பட்டன.

என்னுடைய இந்தத் திடீர் மாற்றத்தை அவள் புரிந்து கொண்டாளோ, இல்லையோ? பேசுவதை நிறுத்தி விட்டாள். டிரைவர் வண்டிக்கு அடியில் படுத்து டார்ச் விளக்கின் உதவி கொண்டு ரிப்பேர் வேலையைச் செய்ய ஆரம்பித்து விட்டான். நான் கீழே குனிந்து உட்கார்ந்து கொண்டே அவனுக்கு ரிப்பேரில் ஒத்தாசை செய்து கொண்டிருந்தேன்.

குழந்தையின் அழுகை ஒலி கேட்கவில்லை; அழுது அழுது அவள் தோளில் சாய்ந்தபடி தூங்கிவிட்டது போலிருக்கிறது.

**கா**ல்மணி நேரம் வெகு மும்முரமாக ரிப்பேர் வேலையில் ஈடுபட்டிருந்தோம். கீழேயிருந்து எழுந்து தலை நிமிர்ந்தேன். அப்போது அவள் நின்று கொண்டிருந்த இடம் சூனியமாக இருந்தது. 'சரிதான்! எங்கோ புறப்பட்டுப் போய் விட்டாள் போலிருக்கிறது. சனி விட்டது. நிம்மதியாக ஊருக்குப் போகலாம்' என்று எண்ணி மனத்தைத் திருப்திப்படுத்திக் கொள்ள முயன்றேன் நான்.

டிரைவர் வண்டிக்கு அடியிலிருந்து டார்ச் லைட்டும் கையுமாக எழுந்திருந்தான்.

''நீ வண்டியைக் கிளப்புகிற வழியைப் பாரு'' என்று அவனிடம் கூறி விட்டு, சாய்ந்து கொள்ள வசதியாக இருக்குமே என்று பின் ஸீட்டுப் பக்கம் போனேன். ஸீட்டில் ஏறுவதற்குக் காலை எடுத்து வைத்தவன் பதறிப் போய்க் கீழே இறங்கினேன்.

''அந்த டார்ச்சை இப்படிக் கொடு!'' என்று கேட்டு வாங்கிய நான் பின் ஸீட்டில் 'டார்ச்' ஒளியைப் படரவிட்டேன். அங்கே வெள்ளைத் துணியில் போர்த்தி, முகம் மட்டும் தெரியும்படியாக அந்தக் குழந்தை விடப்பட்டிருந்தது; குழந்தை நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

''அடாடா! குழந்தையை நம் தலையிலே கட்டிவிட்டுப் போய்விட்டாள்போலிருக்கே?''

''தலை எழுத்து அப்பா! தலை எழுத்து இன்றைக்குத் திருமூர்த்தி மலைக்குப் புறப்பட்டு வந்ததை ஏழேழு ஜன்மத்துக்கும் மறக்க மாட்டேன்....''

டார்ச் ஒளியில் அந்தக் குழந்தையின் முகத்தைப் பார்த்தேன். மலர்ந்து விகசித்த தாமரைப் புஷ்பம் போல் தங்க நிறத்தில் அந்தப் பச்சிளம் சிசு நிர்மலமானதாகக் காட்சியளித்தது. துணியை இலேசாக விலக்கிப் பார்த்தேன். அது பெண் குழந்தை. ஒரு வயதுக்கு மேலிருக்கும். குழந்தை என்றால் வெறும் குழந்தையா? அந்த மாதிரி அழகு

## "கல்கி" மார்ச் மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். கதைகள் ''கல்கி''யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் ''கல்கி''யில் பிரசுரமாகும். கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் ''கல்கி'' காரியாலயத்துக்கு வந்து விடவேண்டும்.

கதைகளைத் திரும்பப் பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும், குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

நிறைந்த குழந்தையை ஆயிரத்தில் ஒன்று, பத்தாயிரத்தில் ஒன்றாகத்தான் காணமுடியும்.

குழந்தையை மறுபடியும் போர்த்தி விட்டேன். அது தூக்கத்தில் புரண்டு படுத்தது. சிரிப்புக் கொஞ்சும் அந்தப் பிஞ்சு இதழ்கள் எந்தக் கல் மனத்தையும் இளக்கி விடும்.

“டிரைவர்! உட்காரு....கொஞ்ச நேரம் காத்திருந்து பார்ப்போம். வரவில்லையானால் பின்பு குழந்தையையும் கொண்டு போக வேண்டியதுதான்.”

நேரம் கடந்து கொண்டே இருந்தது. மணி பத்தே கால். இரண்டு பேருக்கும் பசி வயிற்றைக் கிள்ளியது. “இனிமேல் பார்ப்பதில் பயனில்லை. புறப்பட வேண்டியதுதான். அவசியமானால் ஊருக்குப் போய்க் குழந்தையைப் புகைப்படம் பிடித்துப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்து கொள்ளலாம்” என்ற தீர்மானத்துடன் இருவரும் கிளம்பினோம்.

யார் செய்த புண்ணியமோ! அந்த இருளில் அவ்வளவு பயங்கரமான மழை பெய்து முடிந்த பிறகு, குறுகியமேடுபள்ளம் நிறைந்த மலை ரஸ்தாக்களில் ஒரு துன்பமுமின்றி ஜீப் மலை அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தது. ‘குழந்தை தூக்கம் கலைந்து அழுதால் சமாதானப்படுத்த முடியாதே’ என்று கவலைப்பட்டோம். நல்ல வேளையாக ஊர் வருவதற்குள் குழந்தை தூக்கத்திலிருந்து ஒரு தடவை கூட விழித்துக் கொள்ளவே இல்லை.

ஊர் வந்து சேர்ந்த போது இரவு ஒன்றரை மணி. இரண்டாவது ஆட்டம் சினிமா விடுகிற நேரம். டிரைவர் காலையில் வருவதாகக் கூறி விட்டுத் தன் வீட்டுக்குப் போனான். நான் என் மனைவியை அழைத்துச் சுருக்கமாக அந்தக் குழந்தையின் வரலாற்றை அவளுக்குச் சொல்லி அதை அவளிடம் கொடுத்தேன்.

அவள் குழந்தையைத் தோளில் சாத்திக் கொண்டு சமையலறைக்குள் போனாள். நான் வருகிற வழியிலேயே ஒரு சினிமாக் கொட்டகை வாசலில் இருந்த ஹோட்டலில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வந்திருந்தேன்.

“குளுகோஸைப் போட்டுக் குழந்தையை அழாமல் தூங்கப் பண்ணு” என்று அவளை எச்சரித்து விட்டுப் படுக்கச் சென்று விட்டேன் நான். அலைச்சலும் மனக் குழப்பமும் மிகுந்து ஓய்ந்திருந்த உடல் விரைவில் தூக்கத்தின் வசப்பட்டது.

மறுநாள் காலை எழுந்திருக்கும் போது ஒன்பது மணிக்கு மேல் ஆகிவிட்டது.

“குழந்தை ரொம்பச் சமர்த்தாக இருக்கே? அழுகை, முரண்டு, ஒண்ணும் கிடையாது! காலையிலே எழுப்பிப் பால் காய்ச்சிப் போட்டேன். புது முகம்னு கொஞ்சமாவது சிணுங்கணுமே? பெற்ற குழந்தை மாதிரி ஒட்டிக் கொண்டு விட்டது!” இடுப்பில் அந்தக் குழந்தையும் கையில் காப்பி தம்ளரும் காட்சியளிக்க என் மனைவி என்னை நோக்கி வந்தாள்.

“எப்படியானால் என்ன? திருமூர்த்தி மலைக்குப் போய்விட்டு இப்படி ஒரு குழந்தையோடு வருவேன் என்று நீ கனவில் கூட நினைத்திருக்க மாட்டாய்!”

“எல்லாமே நாம் நினைக்கிறபடி நடக்கிறதா என்ன?” குழந்தையை ஆசை தீரக் கொஞ்சிக் கொண்டே காப்பித் தம்ளருடன் திரும்பிப் போனாள் அவள்.

நான் அன்றைக்கு ஆபீஸ் போகவில்லை; லீவு போட்டுவிட்டேன். பதினொன்றரை மணி சுமாருக்கு டிரைவர் வந்து சேர்ந்தான்.

“வாப்பா! வா..குழந்தை அம்மாவிடம் எவ்வளவோ நாள் பழகினாப்போல இருக்கிறது. அழவே இல்லை. ‘போட்டோ’ பிடித்து எல்லாப் பத்திரிகைகளிலும் விளம்பரம் போட்டு விடுவோமா? அவளுக்குத் தெரிந்தவர்கள் யாராவது பத்திரிகை பார்த்துச் சொன்னால் அதைக் கேட்டு இங்கே வரமாட்டாளா? வந்தால் குழந்தையைக் கொடுத்து அனுப்பி விடுவோம்.”

“எதற்கும் நாளை ஒருநாள் பார்த்துவிட்டுச் செய்யலாமுங்க! எனக்கென்னவோ அவள் உயிரோடு இருப்பாள் என்கிற நம்பிக்கையே இல்லீங்க.”

கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு வீட்டுக்குப் போய் விட்டான் அவன்.

மறுநாள் பத்திரிகையில் அந்தச் செய்தியைப் படித்த போது நான் திடுக்கிட்டேன். வியப்பும் வேதனையும் ஒருங்கே அடைந்தேன்.

“மூணாறில் சோத்துப் பாறை எஸ்டேட் அருகே இளம் பெண் தற்கொலை. ஏற்கனவே அவள் போலீஸாரால் தேடப்பட்டுக் கொண்டிருந்தவளாம். அவளுக்கு ஒன்றரை வயதில் ஒரு பெண் குழந்தை உண்டென்றும், அவள் வேலை பார்த்து வந்த எஸ்டேட் முதலாளி அவளிடம் தவறாக நடந்து கொள்ள முயன்றதனால் அவரைக் குத்திக் கொலை செய்து விட்டுத் தன் குழந்தையோடு ஓடிய அவள், நேற்றிரவு தற்கொலை செய்து கொண்டு விட்டாள். அவள் குழந்தை என்ன ஆயிற்றென்று தெரியவில்லை. போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்.”

என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துப் போய் உட்கார்ந்தேன்.

பத்திரிகையைப் படித்தீர்களா? விளம்பரத்துக்கு அவசியமே இல்லை! குழந்தை இங்கேயே வளரட்டும்” என்று கூறிக் கொண்டே வந்தான் டிரைவர்.

“இதோ பாருங்கள். குழந்தை என்ன அழகாகச் சிரிக்கிறது? ‘அம்மா’ என்றே என்னைக் கூப்பிடுகிறது!”—என் மனைவி குழந்தையைத் தூக்கிக் கொண்டு வந்தாள். குழந்தை, உலகத்தை யெல்லாம் விலையாகக் கொடுத்தாலும் ஈடு காணாத அழகுச் சிரிப்பு ஒன்றைத் தன் சின்னஞ்சிறு மாதுளை இதழ்களில் சிந்திக் கொண்டிருந்தது. டிரைவர் அதையே பார்த்துக் கொண்டிருந்தான். நான் எதிரே சுவரில் மாட்டியிருந்த சர்வேசுவரனின் படத்தைப் பார்த்தேன்.

“இறைவா! நீ நல்ல வினைகளைப் படைக்கிறாய். மண்ணுலகம் தாங்காத அழகையெல்லாம் உருவாக்கி அனுப்புகிறாய்! சேற்றில் செந்தாமரை! குப்பையில் குருக்கத்தி! ஆனாலும் என்ன பயன்? அந்த நல்ல வினைகளைச் சில சமயம் நலங்கெடப் புழுதியிலும் எறிந்து விடுகிறாயே!” என்று என் மனம் இறைவனை இறைஞ்சிக் கேட்டது.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

வியர்வை நாற்றங்களுக்கும் சாதாரண சரும நோய்களுக்கும் விஞ்ஞானம் தரும் புத்தம்புதிய பதில்...

# ஆக்டமர்

## இந்தியாவிலேயே ஓர் அழகுசாதன சோப்பில் இப்போது உள்ளது!

நீராடும் ஒவ்வொரு முறையும் சருமத்துக்குப் பராமரிப்பு! ஆக்டமர் அடங்கியுள்ள காரணத்தால்தான் ப்ரீஸ் டாய்லெட் சோப் அத்தகைய பராமரிப்பை உங்களுக்கு அளிக்கிறது. மான்ஸாண்டோ கம்பெனியின் 'ஆக்டமர்' என்பது அதிநூதனமாக சிருஷ்டமாகியுள்ள ஓர் சருமக் கிருமிநாசனி—வியர்வை நாற்றம், முகப்பரு போன்ற பற்பல சாதாரண சரும நோய்களுக்குக் காரணமான, கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளையும் ஒழிக்கவல்லது.
அமெரிக்க மெடிகல் அஸோஸியேஷனால் அதிகார பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது 'ஆக்டமர்'

நறுமணமுள்ள ப்ரீஸ் டாய்லெட் சோப்பை நீங்கள் உபயோகித்துப் பார்ப்பதற்கு இதுவே உற்ற தருணம். தவறாமலும் இடைவிடாமலும் 3 வில்லைகள் மட்டும் உபயோகித்தாலே, கிருமிகளினின்று கிட்டத்தட்ட விடுதலை பெற்ற சருமம் உங்களுடையதாகிவிடும். வியர்வை நாற்றங்களினின்றும் சாதாரண சரும நோய்களினின்றும் அற்புதமான பாதுகாப்பு என்றால் அதுதான்!




தனிச் சிறப்பு வாய்ந்த அழகுசாதனசோப் இதுவே. இதுவே ப்ரீஸ் சோப்!

BZ. 4-50 TM லண்டனிலுள்ள இரஸாயனக் கம்பெனி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது